அந்த முறையில் பார்க்கும்போது முன்னால் அதற்கு எந்தவிதமான அம்சமும் இல்லாமல் இருந்தது. இப்போது சர்க்கார் கொடுத்திருக்கின்ற திருத்தத்தின்படி கல்டிவேட்டிங் டெனன்ட்டுகளிடம் ஐந்து ஏக்கர் விட்டுக் கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருந்த போதிலும், இனிமேல் கல்டி வேட்டிங் டெனன்ட் ஆக்ட் மாறுதல் செய்யும்போது கல்டிவேட்டிங் டெனன்ஸ் எந்த விதத்திலும் பாதிக்காத அளவில் இருக்கக்கூடிய வகையில் மாற்றி அமைப்பதற்கு முயற்சிக்க வேண்டும். ஏனென்றால் இப்போது பரிபூரண மாக கல்டிவேட்டிங் டெனன்ட் பாதுகாக்கப்பட வில்லை என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். 1955-ல் ஏற்பட்ட கல்டிவேட்டிங் டெனன்ட் ப்ரொட்டக்ஷன் ஆக்ட்டில் இருந்த பல குறைபாடுகள் காரணமாக சட்ட பூர்வமாகவே விவசாயிகளை வெளியேற்றக் கூடிய நிலைமை இருந்தது. இதைப்பற்றி நான் பல தடவை சட்டசபையில் சொல்லியிருக்கிறேன். சாதாரணமாக இதைப்பற்றி சிவில் முனிசிப் கோர்ட்டில் ஏதாவது தாவா வந்துவிட்டால் கல்டிவேட்டிங் டெனன்ட் என்கிற உரிமை சரியாக பாதுகாக்கப் கப்படுவதில்லை. ஆகவே இனிமேல் கொண்டு வரப்போகும் திருத்த மசோ தாவில் இதையெல்லாம் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதன் மூலம் கல்டிவேட்டிங் டெனன்ட்டுகளுக்கு பூரண பாதுகாப்பு அளிக்க வகை செய்ய வேண்டும் என்பதை தெரிவித்துக் கொண்டு, இந்தப் பிரிவை ஆதரித்து என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER : ஸார், இந்த எட்டாவது அத்தியாயம் திருத்தப்பட்டிருப்பதை நிலச் சொந்தக்காரர்கள், சாகுபடியாளர்கள், குத் தகைதார்கள் எல்லோருமே வரவேற்கவேண்டும். ஏற்கெனவே இருந்த மசோதா செலக்ட் கமிட்டிக்கு போகுமுன், clause 57-ல்—

9-40 a.m.

" Any landowner, who is not assessed to any sales tax, profession tax, or income-tax under the respective laws relating to the levy of such taxes during 1956–57 or 1957–58 may resume land for personal cultivation up to a maximum of 5 standard acres."

என்றிருந்தது. இதில் வேறு சில கண்டிஷன்களுமிருந்தது. ஆனால் செலக்ட் கமிட்டியில் அதை மாற்றிய ஷரத்துக்களை திருத்தி அதில் தொழில் வரி, விற்பனை வரி என்பவைகளை விலக்கி இன்கம்டாக்ஸ் செலுத்துகிறவர் களுக்கு மட்டும் சொந்த சாகுபடி உரிமையை விலக்கி மற்றவர்கள் எந்த விதத்தில் நிலங்களை எடுத்துக்கொள்ள முடியும் என்பதைப்பற்றி புது கிளாஸ் 61, 62-ல் சொல்லியிருந்தோம். இப்போது அதைப்பற்றி நிதி அமைச்சர் அவர்கள் விளக்கிச் சொன்னார்கள். செலக்ட் கமிட்டியில் ஐந்து ஸ்டாண்டர்ட்டு ஏக்கர்களுக்கு மேல் இல்லாதவர்கள் இது முதல் இரண்டு வருஷங்களுக்குள் சொந்த சாகுபடிக்காக 3 ஏக்கர் எடுத்துக்கொள்ளலாம் என்றும், ஆனால் இன்கம்டாக்ஸ் கொடுப்பவர்களுக்கு அவ்வித உரிமை கிடையாதென்றும் 62-வது கிளாஸில் சொல்லப்பட்டது. இரண்டு வருஷங் களுக்குப் பிறகு 7 வருஷங்களுக்குள் இன்கம்டாக்ஸ் வரி செலுத்தாத எல்லா மிராசுதாரும் சொந்த சாகுபடிக்கு ஐந்து ஏக்கர் எடுத்துக் கொள்ளலாம் என்றும் 61-வது கிளாஸில் சொல்லப்பட்டிருந்தது. அந்த 8-வது அத்தியா யத்தை இப்போது திருத்தப்பட்டிருக்கிறபடி 1955-வது வருஷத்திய 25-வது ஆக்ட் பிரகாரம் கல்டிவேட்டிங் டெனன்ட்டுக்கும் சிறு நிலச்சுவான்தார்களுக் கும் இருக்கின்ற உரிமைகள் பாதிக்கப்படாமல் இருக்கக்கூடிய வகையில் வழி செய்யப்பட்டிருக்கிறது. அதிலே சிறு நிலச்சுவான்தாருக்கு இருக்கக்கூடிய நிலம் 13-1/3 ஏக்கர் நஞ்சை நிலம் என்றும், அதைவிட $1\frac{1}{2}$ மடங்கு தோட்டக்கால் நிலம் என்றும் மூன்று மடங்கு புஞ்சை நிலம் என்றும் வரையறுக்கப்பட்டு அவர்கள் ஐந்து ஏக்கர் வரை நிலம் சொந்தசாகுபடிக்கு மீட்டுக் கொள்ளலாம் என்று விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே, நிலச் சொந்தக்காரர்கள், சாகுபடியாளர்கள் குத்தகைதாரர்கள் எல்லோ ருக்கும் இது ஆதரவாக இருக்கும். இதில் நில உச்சவரம்பு என்று

நிர்ணயிக்கப்பட்டிருக்கும் இந்த நேரத்தில் யாரும் இதனுல் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும் என்ற நோக்கத்தின் பேரில்தான் இந்த திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆகவே, இதை அனைவரும் வரவேற்க வேண்டியது தான். இன்னுென்று, பணப் பெருக்கத்தினுலோ, செல்வாக்கினுலோ நடுநிலேமை என்ற முறையில் இன்டர்மீடியராக 100 ஏக்கர் அல்லது 50 ஏக்கர் என்று குத்தகைக்கு எடுத்துக்கொண்டு தானே நேரில் உழுது சாகுபடி செய்யமால் பிறர்களுக்கு உள் குத்தகைக்கு விட்டு அதனுல் லாபமடையக்கூடிய நிலேமை இருந்தது. இப்போதுள்ள திருத்தப்படி கல்டிவேட்டிங் டெனன்ட் என்ற முறையில் பார்க்கும் போது அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கின்ற திருத்தத்தில் கல்டிவேட்டிங் டெனன்ட் என்று இருப்பதை "டெனன்ட் இன் பொஸஷன்" என்று திருத்தி அமைத்துக் கொள்ளவேண்டும் என்பதை நிதி அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். முன்னுல் இருந்தபடி ஒவ்வொரு குத்தகைதாரும் அதாவது "லெஸி" என்றிருப்பவர்கள் ஒவ்வொருவரும் 30 ஸ்டாண்டர்டு ஏக்கர் வரை வைத்துக் கொள்ளலாம் என்று பழய கிளாஸ் 5, 7-ன்படி இருந்தது. இப்போது டெனன்டாக இருந்தாலும் கல்டிவேடிங் டெனன்டாக இருந்தாலும் 5 ஏக்கர் தான் வைத்துக் கொள்ளலாம் என்று திருத்தப்பட்டிருப்பதால் யாருக்கும் பாதகமில்லாத முறையில் இருக்கிறது. சிறு நிலச் சொந்தக்காரர்களாக இருந்தாலும் சரி, பெரிய நிலச்சொந்தக்காரர்களாக இருந்தாலும் சரி, 13 ஏக்கர் வரையிலும் மட்டும் உள்ளவர்களுக்கு அவர்கள் ஷெ பல வரிகள் செலுத்தாதவர்களாக இருந்தால் (1955–56-ல்) இந்த திருத்தத்தினுல் எந்தவிதமான பாதகமும் ஏற்படப் போவதில்லே. செலக்ட் கமிட்டிக்கு வருவதற்கு முன்னுல் இருந்த 57-வது பிரிவின்படி விற்பனேவரி, தொழில் வரி இரண்டு வரிகளேயும் கொடுக்கிறவர்கள் உடனடியாக எடுத்துக்கொள்ள முடியாது என்றும் வரிகள் செலுத்ாதவர்கள் சொந்த சாகுபடிக்காக ஐந்து ஏக்கர் வரை எடுத்துக் கொள்ளலாம் என்றும் அமைந்திருந்தது. பெரிய அளவில் வரிக் கொடுக்கிறவர்கள் இதைப்பற்றி உடனடியாக கவனிக்கவேண்டிய தேவையில்லே என்ற அளவில் விடப்பட்டு இருந்தது. இப்போது திருத்தப்பட்டிருப்பது எல்லோருக்கும் பொதுவாக இருக்கிறது. அதோடு இனிமேல் திருத்தப் போகின்ற கல்டிவேட்டிங் டெனன்ட் ஆக்டையும் சரியான முறையில் அமைத்து, அதற்கேற்றபடி இந்த எட்டாவது அத்தியாத்தையும் அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு இப்போது நிதி அமைச்சர் அவர்கள் சொன்னது போன்று சிறிய மாறுதலேயும் செய்து இதை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளே முடித்துக் கொள்கிறேன்.

* **Sri N. K. PALANISAMI** : ஸார், இந்த எட்டாவது அத்தியாத்திற்கு சர்க்கார் திருத்தம் கொண்டு வந்ததாவது மிகவும் வரவேற்கத்தக்கது. இதன் காரணமாக பெருவாரியான குத்தகை விவசாயிகள் தற்காலிகமாக பாதுகாக்கப்பட்டிருக்கிறுர்கள். இருந்த போதிலும் **They are still in a state of suspense** என்ற அளவில் மூன்று வருடம் கழித்து அவர்களுடைய நிலேமை என்ன என்பதையும் நாம் பார்க்கவேண்டும். குத்தகைதார்கள் மட்டும் அல்ல, நிலச்சுவான்தார்களே எடுத்துக் கொண்டாலும் சரி, அவர்களுடைய நிலேமை மூன்று வருடங்களுக்குப் பிறகு என்ன என்பதையும் நாம் பார்க்கவேண்டும். இப்போதுள்ள திருத்தத்தின்படி "ஆக்குபேஷன் ரைட்" மூன்று வருடத்திற்கு கொடுத்திருக்கின்றேம். அந்த முறையிலே மூன்று வருஷம் என்று ஒத்தி வைப்பதற்கு பதிலாக உடனடியாக இந்தச் சபை முடிவதற்குள் கல்டிவேட்டிங் டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் ஆக்டுக்குத் திருத்தம் கொண்டு வந்து அதற்கான நடவடிக்கை எடுக்கவேண்டும். இல்லாவிட்டால் நிலச்சுவாந்தார்களுக்கு அவர்களுடைய நிலேமை என்ன என்று தெரியாத காரணத்தினுல் அவர்கள் இன்வெஸ்ட் செய்ய பயப்படுவார்கள். அதே போல குத்தகைக்தாரர்களுக்கும் மூன்று வருஷம் கழித்து அவர்களுடைய நிலேமை என்ன ஆகுமோ, எங்கே வெளியேற வேண்டியிருக்குமோ என்ற பயம் இருக்கும். அதன் காரணமாக ஒருவரும் பூமியில் இன்வெஸ்ட் செய்ய முடியாது—அதனுல் உற்பத்தி செய்ய முடியாது. ஆகையால் இந்த முறையில் இரண்டு பேருக்கும் பாதகம்

இருப்பதால் சர்க்கார் திட்ட வட்டமாக குத்தகைதாரர்களுக்கு பாதுகாப்புச் செய்கிற முறையில் சீக்கிரமாக சட்டத்தைத் திருத்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* **SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, இந்தச் சட்டத்தி னுடைய 8-வது அத்தியாயம், முன்னாலே இருந்த நோக்கத்தினின்றும் மாறுபட்டு, குத்தகைதாரர்களுக்கும் உச்ச வரம்பு கட்டவேண்டுமென்ற முறையில் இப்போது வருகிறது. குத்தகைதாரர்கள் இவ்வளவு தான் வைத்துக்கொள்ளலாம் என்று முறைபடுத்தும் நேரத்தில், இது மூன்று ஆண்டுகள் தான் நீடிக்கும் என்று வரையறுக்க என்ன அவசியம் இருக் கிறது என்று எனக்குப் புரியவில்லை. " பார் எ பீரியட் ஆப் த்ரீ இயர்ஸ்" என்று 59-வது பிரிவில் சேர்த்திருக்கிறார்கள். குத்தகைதாரர் களுக்கும் உச்ச வரம்பு கட்டவேண்டும் என்று கருதி பொதுவாக அவர் களுடைய நிலங்களுக்கும் உச்சவரம்பு கட்டிய பின்னர், இந்த அளவுதான் அவர்கள் நிலம் வைத்துக் கொள்ளலாம் என்பதை ஒரு பொது விதி ஆக்கியிருக்க வேண்டும். அதை விட்டு மூன்று ஆண்டுகளுக்குத்தான் என்று ஒரு கால எல்லை வரையறுக்க வேண்டிய அவசியம் எனக்குப் புரியவில்லை.

அதேபோல கல்டிவேட்டிங் டெனெண்ட்ஸ் என்ற முறையிலேயே உழவு நடத்தும் குத்தகைதாரராக இருந்தாலும், உழவைத் தானே நடத்தாது பிறரைக் கொண்டு நடத்தும் குத்தகைதாரராக இருந்தாலும் ஐந்து எக்கர் தான் வைத்துக்கொள்ளலாம், அதற்கு மேல் வைத்துக்கொள்ளக்கூடாது என்று சொல்லப்பட்டிருப்பது வரவேற்கத் தக்கதாகும். ஐந்து எக்கர் என்று சொல்லும்போது உழவுத் தொழில் செய்கிறவர்கள் பயன் பெற வேண்டும் என்று தான் சொல்லப்படுகிறது. குத்தகைதாரர்கள் " பை தேர் ஏஜெண்ட் "—அதாவது இடையில் இருக்கிறவர்கள் மூலமாக விவ சாயம் நடத்துவது என்று சொன்னால் இடையில் ஏஜெண்ட்ஸ் வைத்து குத்தகைக்கு விடாமல் தாமே விவசாயம் நடத்துவதை மட்டுமே நிலச் சொந்தக்காரர்கள் பொறுத்த வரையில் அனுமதிக்கும் நாம் அதை குத்தகைதாரர்களைப் பொறுத்த வரையிலும் அந்த உரிமை அளிப்பது முறைதானா என்று கேட்க விரும்புகிறேன்.

மற்றொன்று, உழவு நடத்தும் குத்தகைதாரர்கள் என்று சொல்லும் போது, உள் குத்தகைதாரர்கள் தான் பெரும்பாலும் உழவு நடத்துபவர்க ளாகவும், மற்றவர்கள் நேரடி உழவு நடத்தாதவர்களாகவும் இருக்கிறார் கள். அதனால் உள் குத்தகைதாரர்களின் உரிமைகள் தெளிவாகப் பாது காக்கப்படவேண்டும். உள் குத்தகைதாரர்களைப் பற்றி இப்போது அமைச்சர் அவர்கள் விளக்கியபோது, ஏறத்தாழ அவர்கள் மூன்று ஏக்கர் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படுபவர் என்று பேசினார். உள் குத்தகைதாரர்கள் நிச்சயமாக பாதுகாக்கப்படும் அளவுக்கு, குத்தகைதாரர்கள் அவர்களிட மிருந்து திரும்ப நிலத்தைப் பெற முடியாத அளவுக்கு விதிகள் செய்யப் படவேண்டும். உள் குத்தகைதாரர்கள் பாதிக்கப்பட்டால் குத்தகைதாரர்க ளுடைய நிலத்திற்கு ஏற்படுத்தும் உச்ச வரம்பும் பயன்படாமல் போய்விடும். உள் குத்தகைதாரர்கள் பற்றி இந்தப் பிரிவில் சேர்க்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டு உரையை முடித்துக் கொள்கிறேன்.

**SRI D. S. AUTHIMOOLAM :** ஸார், இந்த 8-வது சேப்டருக்கு சர்க்கார் தரப்பிலிருந்து கொண்டு வந்திருக்கிற இந்த புதுத் திருத்தங்களி லிருந்து சிறு நிலச்சுவாந்தார்கள் அடியோடு புறக்கணிக்கப்பட்டு விட்டதாகத் தெரிகிறது. அதாவது டெனெண்ட்ஸ் ப்ரொடெக்ஷன் ஆக்ட் எல்லாம் வந்த பின்னர் எங்கு பார்த்தாலும் சிறு நிலச்சுவாந்தார்கள் ஏகப்பட்ட கஷ்டம் ஏற்பட்டு சர்க்காரைப் பல முறை வேண்டிக் கொண்டார்கள். அதற்கிணங்க மந்திரிகளும்—முதல் மந்திரியிலிருந்து மற்ற மந்திரிகளும் —அங்கங்கே உங்களுடைய கஷ்டத்தை நிவர்த்தி செய்வோம் என்று வாக்குறுதி கொடுத்து வந்தார்கள். அதன்படி இதிலாவது குறைந்த அளவு நிலவுடமையுள்ளவர்கள் ஒரு நிவர்த்தி அடையலாம் என்று நினைத்தார்கள். அதற்கும் வழியில்லாத நிலையில் இப்பொழுது அதை

அடியோடு நிராகரித்து விட்டதாகத் தெரிகிறது. முதலில் அமைச்சர்கள் வாக்குறுதி கொடுத்தது, சிறுநிலவுடைமையாளர்களுக்கு ஐந்து ஏக்கர் வரையில் சொந்த சாகுபடிக்கு யாதொரு தடை விதிக்காமல் கொடுப்போம் என்பதாகும். அதற்குப் பிறகு சர்க்காருடைய மசோதாவில் மூன்று ஏக்கர் என்று வந்தது. அதிலே மூன்று ஏக்கர் வரையில் சொந்த சாகுபடிக்கு யாரும் வைத்துக் கொள்ளலாம் என்று உரிமை இருந்தது. இன்கம்-டாக்ஸ் கொடுத்தாலும், ஸேல்ஸ்-டாக்ஸ் கொடுத்தாலும் 3 ஏக்கர் சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று ஒரு உரிமை அளிக்கப்பட்டிருந்தது. அது பிறகு செலெக்ட் கமிட்டியில் இன்கம்-டாக்ஸ் கொடுத்தால் கிடையாது என்று ஒரு திருத்தம் வெளியிடப்பட்டது. இப்போது சர்க்கார் தரப்பிலிருந்து கொண்டுவரப்பட்டிருக்கிற திருத்தத்தின்படி அடியோடு அவர்களுக்கு இந்த உரிமை மறுக்கப்பட்டு விட்டது. ஒரு கதை உண்டு. பஞ்ச பாண்டவர்கள் எத்தனை பேர்கள் என்று ஒரு உபாத்தியாயர் பள்ளி மாணவன் ஒருவனிடம் கேட்டார். அதற்கு அவன் கட்டில் கால் போல 4 பேர்கள் என்று 3 விரலைக் காட்டினான். சரி அதை எழுது என்று சொன்னார் உபாத்தியாயர். அவன் என்ன செய்தான் என்றால் 2 என்று எழுதி ஒன்றை அடித்து விட்டான் (கனம் ஸ்ரீ வி. சுப்பிரமணியம் : கதை சரியாக இல்லையே) கதையை மந்திரி அவர்கள் இப்போது கஷ்டமான மசோதாவை விவாதிக்கும் நேரத்தில் ஊடே நல்ல தமாஷாக இருக்க வேண்டும் என்று விரும்பினால் இதை நன்றாக விளக்கிச் சொல்வார்கள் என்று நினைக்கிறேன். அதேபடிக்கு 5 ஏக்கர் வைத்துகொள்ள உரிமை கொடுப்போம் என்று சொன்னார்கள், பிறகு 3 எக்கர் வைத்துக்கொள்ளலாம் —ஸேல்ஸ்-டாக்ஸ் கொடுத்தாலும், இன்கம்-டாக்ஸ் கொடுத்தாலும்—என்று சொல்லப்பட்டது, செலெக்ட் கமிட்டியில் இன்கம்-டாக்ஸ் கொடுத்தால் கிடையாது என்று திருத்தம் செய்யப்பட்டது. இப்போது பார்த்தால் அடியோடு அவர்கள் கைவிடப்படிருக்கிறார்கள். அப்படியானால் அமைச்சர் அவர்கள் சிறு நிலவுடைமையாளர்களை என்ன நினைக்கிறார்கள்? அவர்களும் நாட்டில் வசதி படைத்தவர்கள் என்ற எண்ணம் போல் இருக்கிறது. அது அப்படி இல்லை. மூன்று ஏக்கர் ஒருவர் வைத்திருக்கிறார் என்று வைத்துக்கொண்டால், அவர் ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு பம்பாயிலோ மதராஸிலோ அல்லது கொழும்புவிலோ பிழைக்கப்போனபோது குத்தகைக்கு விட்டுச் செல்கிறார்கள். வசதி இல்லை என்று திரும்பி வந்தால், சொந்த நிலத்தை வைத்தாவது திரேக பாடுபட்டு பயிர் பண்ணி சாப்பிடவேண்டுமானால் அவருக்கு அந்த உரிமை இல்லை. நல்ல நிலமாக இருந்தால் ஏக்கருக்கு 200 ரூபாய் எச்செலவும் போகக் கிடைக்கும். கொஞ்சம் மட்டமாக இருந்தால் ஏக்கருக்கு 100 அல்லது 150 கிடைக்கும். இந்த மாதிரி குறைந்த வருமானத்தை வைத்து வாழ்க்கை நடத்தக் கூடிய லட்சக்கணக்கான குடும்பங்கள் இருக்கின்றன. இந்த நிலையில் ஏன் இப்படிச் செய்கிறார்கள் என்பதுதான் வருத்தத்திற்குரிய விஷயம். சர்க்காரிலே தற்சமயம் உள்ளவர்கள் சமயத்திற்குத் தகுந்தபடி போவோம் என்று அவர்களுடைய காரியங்களை நினைக்கிறார்களே தவிர மற்றப்படி சிறு நிலவுடைமையாளர்கள் மத்திய தர வகுப்பை விட கீழ் நிலையில் உள்ளவர்கள் என்பதை மறந்து விடுகிறார்கள். அவர்கள் விஷயத்தில் இந்த மாதிரி அமைச்சர்கள் பெரிய கடினமான மனது வைத்துக்கொள்ளக் கூடாது. தைரியம் புருஷ லட்சணம் என்று சொல்லுவார்கள். அதுவும் மந்திரி என்ற புருஷர்களுக்கு ரொம்பவும் தைரியம் வேண்டும். இந்த தைரியத்தை இழந்து ஒவ்வொரு காரியத்திற்கும் நியாயத்தைப் புறக்கணித்து அமெண்ட்மெண்ட்ஸ் கொண்டு வருகிறார்கள். இந்த மாதிரி காரியத்தை

10–00 a.m.

செய்வது கொஞ்சமும் நியாயமல்ல. ஏழைப் பங்காளன் என்று நமது முதன் மந்திரி காமராஜ் அவர்களைச் சொல்வார்கள். அந்த ஏழைப் பங்காளன் மந்திரி சபையில் இந்த 3 ஏக்கர் வைத்திருக்கக்கூடிய ஆட்களையும் ஏழைகள் என்று ஏன் கவனிக்கவில்லை என்று மிகவும் வருத்தத்துடன் கேட்கிறேன். ஆகவே இந்த மாதிரி நீங்கள் குறைகளைச் செய்து, வீணாக அவர்களைக் கஷ்டத்திற்கு உள்ளாக்க வேண்டாம் அல்லது 3 ஏக்கர் நிலம் வைத்திருக்கிறார் என்று சொன்னால், சொந்த சாகுபடிக்கு உரிமை

யிருந்தால், இன்று அவர் கடன்கட்சிகளிலே அல்லது தன் குடும்பத்திலே மகன் மகளுக்கு கல்யாணம் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்று சொன்னால், இந்த நிலச்சுவான்தார்களுக்கு உரிமையிருந்தால், அதிலே நல்ல விலேக்கு ஒரு ஏக்கரை விற்க முடியும். அந்த மாதிரி ஒரு ஏக்கர் நிலத்தை விற்று, தன் குடும்பக் கடனைத் தவிர்க்கலாம். பாக்கி இரண்டு ஏக்கர் நிலத்தை அவன் வைத்துக் கொள்ளலாம். அல்லது 3 ஏக்கர் நிலமும் நல்ல விலேக்கு வந்தால், விற்கலாம் என்றாலும் அவர் விற்க முடியாது. ஒரு ஏக்கர் நல்ல நஞ்சை என்று சொன்னால், கிட்டத் தட்ட அந்த ஏக்கர் 7,000, 8,000 மதிப்பு பெறும். இப்போது இந்தச் சட்டம் இருப்பதின் மூலம் அப்படி அதிக விலேக்கு வந்தாலும், விற்க முடியாது. ஆகவே இப்போது சிறு நிலச்சுவான்தார்கள் அவர்கள் கடன் துன்பங்களிலிருந்தோ அல்லது தங்களுடைய குடும்பத்தில் கல்யாணம் மற்றும் அதுபோன்ற காரியங்களைச் செய்வதற்கோ ஒன்றும் வசதி இல்லாத நிலைமையில் அவர்களுடைய கால்களையும், கைகளையும் கட்டப்பட்டிருக்கிறது. இதுதான் நியாயமா என்று கேட்கிறேன் ? இதற்குத் தான் சர்க்கார் இருக் கிறதா ? என்று கேட்கிறேன். சர்க்கார் என்று சொன்னால், சில தரப்பி னர்களுக்கு மட்டும் நியாயம் வழங்கிவிட்டு, மற்றவர்களுக்கு கெடுதல் செய்ய வேண்டுமென்பது எண்ணமா ? அவர்களுக்கும் நல்லது செய்ய வேண்டும் என்பதை கவனத்தில் வைக்க வேண்டாமா ? இந்த மாதிரி கடன் தொல்லைகள் அவர்களுக்கு ஏற்பட்டால், அவர்கள் அதிலிருந்து விடுதலை ஆவதற்கு வழியே இல்லையா ? கிடையாதா ? எத்தனை குடும் பங்கள் இது மாதிரி கவனிக்கப்படாததால், எத்தனைக் குடும்பங்கள் அனு தையாக ஆகியிருக்கிறது. இது எல்லாம் உங்கள் கவனத்திற்கு வர வில்லையா ? சர்க்காரில் புள்ளி விவரங்கள் சேகரிப்பவர்கள், இதை யெல் லாம் குறித்திருந்தால் அதாவது 100 செண்ட் நிலம் வைத்திருக்கக்கூடிய ஆட்கள் எத்தனை பேர், 200 செண்ட் நிலம் வைத்திருக்கக்கூடிய ஆட்கள் எத்தனை பேர், அவர்களுக்கு நாம் எப்படி கவனம் செலுத்த வேண்டு மென்பதை யெல்லாம் கவனித்தால் நல்லது. இப்படிக் கவனம் செலுத் தாததால், எனக்குத் தெரியும் இரண்டொரு இடத்தில் தற்கொலை கூட செய்து கொண்டிருக்கிறார்கள். சட்டத்தின் மூலம் என்ன தீங்கு ஏற்படு கிறது என்பது ஒரு பெண்ணுக்குத் தெரியாது. ஒரு பெண் சாணி எடுத்து, விரட்டித் தட்டி 2,500 ரூபாய் சம்பாதித்தாள். அம்பாசமுத்திரத்தைச் சேர்ந்தவள். அந்த பணத்தைக் கொண்டு அவள் நிலம் வாங்கினாள். ஆனால் அவளுக்கு இந்தச் சட்டம் இருப்பது தெரியாது. பின்னால் அந்த நிலத்தில் அவள் பயிர் வைக்கவும் முடியவில்லை. ஆகவே அவள் கடை சியில் நிலத்தை என்ன செய்வது என்று தெரியாமல், மனமுடைந்து இந்த நாட்டிலே ஒழுங்காக வாழ முடியாது என்று தீர்மானம் செய்து தற்கொலை செய்து கொண்டாள். இந்த மாதிரி துன்பங்கள் எல்லாம் ஏற்கனவேயே ஏற்பட்டிருக்கிறது. இந்த மாதிரி துன்பங்களுக்கெல்லாம் எப்படி முடிவு கட்டுவது என்பதிலே அரசாங்கம் கவனம் செலுத்த வேண் டாமா ? இந்த மாதிரி துன்பத்திற்கு ஒரு முடிவு வரும் என்று தானே இத்தனை நாட்களும் நாட்டிலே உள்ளவர்களும் எதிர்பார்த்து இருந் தார்கள் ? நீங்கள் ஏன் அவர்களை அடியோடு காலை வாரி விடுகிறீர்கள் ? இது நியாயம்தானா ? இப்போது சொல்கிறேன். இதையே ஒரு இஷ்ஷு வாக வைத்துக்கொண்டு எலக்ஷன் பிரசாரம் செய்து, இந்த மந்திரி சபை யிலுள்ள எந்த முக்கிய மந்திரியாகினும் நிற்பதற்குத் தயாராக இருந்தால், நான் அவர்களுக்கு எதிராக நிற்கத் தயாராக இருக்கிறேன். "I can challange even important ministers on this issue" இது ஒரு பெரிய அநீதியான காரியம். அநீதிக்கும் ஓரளவு உண்டு. அநீதியைச் செய்யாதீர்கள் என்று உங்களைத் தாழ்மையாகக் கேட்டுக்கொள்கிறேன். லட்சக்கணக்கான சிறு நிலச்சுவான்தார்கள் இத்தனை நாள் எதிர்பார்த்த பலன் கிடைக்கும்படி செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அது தர்மமல்ல. ஆகவே தான் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இந்தத் திருத்தத்தை சர்க்கார் தரப்பிலே ஒழுங்காக வாபஸ் வாங்கிக் கொள்ளுங்கள் என்று மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். வணக்கம்.

**Sri A. GOVINDASAMY :** சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, ஏற்கனவே சர்க்காரால் கொண்டு வரப்பட்ட 8-வது பிரிவானது சாகுபடியாளரையும், குத்தகைதாரரையும் பாதிக்குமோ என்ற ஐயம் இருந்தது. ஆனால் இன்றையத் தினம் சர்க்கார் தீவிரமாக ஆலோசித்து இந்தப் புதிய அத்தியாயத்தைக் கொண்டு வருவதன் மூலம் குத்தகைக்கு பயிரிடக்கூடிய சாகுபடியாளர்கள் பாதிக்காத அளவுக்கு இந்த ஷரத்து அமைவதாலே நான் இதை வரவேற்கிறேன். எனக்கு முன்னாலே பேசிய நண்பர் ஆதிமூலம் அவர்கள் சொன்னார்கள். ஏழை பங்காளர் இருக்கக் கூடிய ஆட்சியிலே, ஏழைகளுக்கு ஆபத்தா என்று சொன்னார்கள். குத் தகைக்கு பயிரிடக்கூடியவர்கள் இங்கே ஏழையாகக் கருதப்படுமே தவிர, சொந்த நிலம் வைத்திருக்கக்கூடிய சிறு நிலச்சுவான்தார்கள் 5 ஸ்டாண் டர்டு ஏக்கரா வைத்திருப்பார்களானால், அவர்கள் ஏழைகளாகக் கருதப் படமாட்டார்கள். நண்பர் ஆதிமூலம் அவர்கள் சொன்ன சவாலை ஏற்றுக் கொண்டு அவர்கள் தேர்தலில் நின்றால் அவர்கள்தான் பாதிக்கப்படுவார்கள். அதனால் இந்த சட்ட சபைக்கு ஒரு இழப்பாகத்தான் இருக்கும். நாட்டிலுள்ள ஏழைகள் அவர் சொல்லக்கூடிய காரணத்தை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதை இந்த ஷரத்திலுள்ள வாசகத்தின் மூலம் நான் அவர்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

ஏற்கனவேயே சர்க்காரால் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதிலே சில ஓட்டை ஒடைச்சல்கள் இருந்து, இப்போது விவாதிக்கப்படக்கூடிய நிலைமையிலேயே அது இருந்து வருகிறது. ஹைகோர்டிலே எல்லாம் இதைப்பற்றி எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. மூன்று ஆண்டுகளுக்குள்ளே இந்த ஆண்டு ஒரு நல்ல திருத்தத்தைக்கொண்டு வந்து, அது உண்மையிலேயே குத்தகைதாரர்களைப் பாதுகாக்க முடியும் என்ற அளவிலே இருப்பதால், இந்த ஷரத்தை நான் வரவேற்கிறேன். வணக்கம்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** Mr. Deputy Speaker, I am also of the opinion that the small landowners will be completely affected by this clause and they will be put to all sorts of hardships and difficulties. Though it is stated here that it will remain in force for a period of three years, we are sure that it will be extended form time to time as is being done in the case of so many other enactments. My submission is that clause 62 can be retained as it is in the Bill as the provison now sought to be introduced seems to be illusory. The protection given to the small landholders under the Cultivating Tenants Protection Act is illusory. The maximum extent of land that can be resumed under that Act has been limited to half the extent of land leased out to the cultivating tenants and that is 5 acres. Now, we have fixed a ceiling of 30 standard acres. Under the other Act, if a landowner was having about 13 1/3 acres, he cannot resume. That means, we are reducing the ceiling for resumption. My concern is that the poor landowner will not be able to resume all the lands and he will stand to suffer very much. This point should be taken into very serious consideration and the possibility of retaining clause 62 in all its aspects should also be examined.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** உதவி சபாநாயகர் அவர்களே, விவாதம் நடந்து சில கருத்துக்கள் இங்கு தெரிவிக்கப் பட்டன. கல்யாணசுந்தரம், கோவிந்தசாமி ஆகியோர் ஒரு பக்கம். ஆதி மூலமும், எதிர்க்கட்சித் தலைவர் ராமசாமி முதலியார் அவர்களும் இன் னொரு பக்கம். (ஒரு அங்கத்தினர் : தாங்கள் எந்தப் பக்கம் ?) நியாயம் வழங்குகின்ற பக்கத்திலே நாங்கள் இருக்கிறோம். இரண்டுக்கும் மத்தி யிலே நியாயம் வழங்குகிற சர்க்காராக நாங்கள் இருக்கவேண்டியிருக்கிறது.

27th September 1961] [Sri C. Subramaniam]

எப்படிப்பட்ட நியாயம் வழங்குவது என்பதுதான் இப்போது நம் முன்னுள்ள பிரச்னை. சர்க்காருடைய கொள்கை, காங்கிரசினுடைய கொள்கை, கூடிய வரையிலே யார் உழுகின்றார்களோ அவர்களுக்கு நிலம் சொந்தமாக இருக்க வேண்டுமென்பது. இந்த அடிப்படையிலேதான் விவசாயமே நடைபெற முடியும். அவ்வாறு இல்லாது உழுது பயிரிட்டு, உழுததற்குப் பிற்பாடு அதிலே பெரும் பகுதி என்றில்லாமல், கணிசமான பகுதி இன்னொருவருக்குப் போகிறது என்று சொல்லும்போது, அதிலே அக்கறையுடன் பாடுபடுவதற்கு முடிவதில்லை. இரண்டாவதாக, இன்னொருவருடைய நிலம் என்று சொல்லும்போது, அப்படி உழுது கொண்டிருக்கும் நிலத்திற்கு பல்வேறு மராமத்து வேலைகளோ அல்லது அபிவிருத்தி வேலைகளோ செய்வதென்றால், அதிலே எவராலும் முழுக் கவனமும் செலுத்த முடிவதில்லை. ஆகவே இந்த இரண்டும் ஒன்றாக இருக்க வேண்டுமென்பதுதான் காங்கிரசின் கொள்கையாக வகுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஒரு கொள்கை அளவிலே இதை வகுக்கப்படும்போதுகூட, அதிலே பல எக்சப்ஷன்கள் சூழ்நிலைக்கு ஏற்ப கொடுக்கக்கூடிய அவசியம் ஏற்படுகிறது என்பதையும் உணர்ந்துதான், நாம் இந்த விதிகள் பிரிவுகள் எல்லாம் போட வேண்டியதாக இருக்கிறது. இன்றைக்கு நிலத்திற்கு உச்ச வரம்பு 30 ஸ்டாண்டர்டு ஏக்கரா என்று வைத்திருக்கிறோம். அதோடு மாத்திரமல்ல. இன்றைக்கு இந்தச் சட்டத்தின் மூலமாகவும், வேறு சட்டங்களின் மூலமாகவும் குத்தகைதாரர்களுக்கு பாதுகாப்பு அளித்திருக்கிறோம். ஆகவே இந்த உச்ச வரம்பு சட்டத்தைப் பொறுத்த வரைக்கும், சிறுநிலச்சுவான்தார்கள் எந்த விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. 30 ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு உரிமை இந்தச் சட்டத்திலே வகுக்கப்பட்டிருப்பதால், அவர்கள் பாதிக்கப்படுவதில்லை. ஆகையினாலே இன்றைக்கு நிலச் சொந்தக்காரர்களுக்கு, சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு முன்பு இருக்கக் கூடிய சட்ட அடிப்படையிலே ஏதாவது அநீதி ஏற்பட்டிருக்குமானால், கஷ்டம் ஏற்பட்டிருக்குமானால், அதைப் பார்த்து தீர்க்கவேண்டியது மிகவும் அவசியம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். சர்க்கார் சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கு சில வாக்குறுதிகள் கொடுத்திருக்கிறார்கள். சர்க்கார் மட்டுமல்ல, எல்லாக் கட்சியினருமே சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கு சில சலுகைகள் கொடுக்கவேண்டும் என்று ஒப்புக்கொண்டு எல்லோரும் முடிவிலே வாக்குறுதி கொடுத்திருக்கிறார்கள். சர்க்கார் வாக்குறுதிகளை நிறைவேற்றவேண்டும் என்பதுதான் சர்க்காருடைய கொள்கை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த சட்டத்திற்கும் சிறுநிலச் சுவான்தார்களுக்கும் சம்பந்தமே கிடையாது. சிறு நிலச்சுவான்தார்களைப் பொறுத்தவரையில், குத்தகைதாரர்களுக்கும் அவர்களுக்கும் இருக்கக் கூடிய உரிமைகள் இன்னொரு சட்டத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. அதைப் பரிசீலனை செய்து பார்த்து, அதை எந்த அடிப்படையிலே திருத்த வேண்டும் என்பதற்கு உடனே நடவடிக்கை எடுப்பதற்கு பரிசீலனைகள் நடந்துகொண்டிருக்கின்றன. சிறு நிலச் சொந்தக்காரர்கள் இதைப்பற்றி கவலைப்படவேண்டியதில்லை.

ஆனால், ஒன்று யோசிக்க வேண்டும். சிறு நிலச் சொந்தக்காரர்கள் யார், எந்தச் சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டுமென்பது பற்றி கொஞ்சம் யோசிக்க வேண்டும். நான்கு, ஐந்து வருஷங்களுக்குள்ளாக இந்தச் சட்டம் வருகிறது என்பதற்காக பல சிறு நிலச்சொந்தக்காரர்கள் கிளம்பி இருக்கிறார்கள். அவர்களுக்கு இந்தப் பாதுகாப்பு கொடுக்கவேண்டுமா என்பதைப்பற்றி யோசிக்க வேண்டும். இதேமாதிரி சட்டம் இருக்கிறது, குத்தகைதார் பாதுகாப்புச் சட்டம் இருக்கிறது என்று தெரிந்து யாராவது 4 ஏகர், 5 ஏகர் நிலம் வாங்கியிருந்தால், அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கவேண்டுமா என்பது யோசிக்கவேண்டிய விஷயம். இது யோசித்து முடிவு செய்யவேண்டிய விஷயம். புதியதாக மூன்று ஏகர், 4 ஏகர் நிலம் வாங்கியிருந்தால்கூட எந்த சூழ்நிலையில், எந்த அடிப்படையில் எந்த நிபந்தனைக்குட்பட்டு அவர்களுக்கு உரிமை வழங்க வேண்டும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். பொதுவாக 3 ஏகர் நிலத்தை தங்களுடைய சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று

வைத்துவிட்டால், உண்மையாகவே கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த சிறு நிலச் சொந்தக்காரர்கள் மட்டுமல்ல, புதியதாக இந்தச் சட்டம் வரப்போகிறது என்று தெரிந்து 3, 4, 5 ஏகர் யார் யார் பேரிலாவது எழுதி வைத்திருந்தாலும் அல்லது யாராவது விலைக்கு வாங்கியிருந்தாலும், இப்பொழுது இருக்கக் கூடிய உரிமைகள் தெரிந்து விலைக்கு வாங்கியிருக்கக்கூடிய அவர்களுக்கும் இந்த உரிமை வழங்கப்படவேண்டுமா என்பதையெல்லாம் ஆலோசனை செய்து, உண்மையாக சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு, இதன் மூலம் கஷ்டம் ஏற்பட்டிருப்பவர்களுக்கு நிவாரணம் அளிப்பதற்கு கூடிய சீக்கிரம் சட்டம் கொண்டுவரப்படும் என்ற உறுதியை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகையினால் ஆதிமூலம் அவர்கள் ஏழைகளாக இருக்கக் கூடியவர்களை கைவிட்டுவிட்டார்கள் என்று சொல்லவேண்டிய அவசியம் இல்லை. எந்த ஏழையாக இருந்தாலும் கூட, அவர்களுக்குப் போதுமான அளவிலே நிவாரணம் அளிப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும். ஆனால் அந்த நிவாரணம் உண்மையாகவே உரியவர்களுக்காக இருக்க வேண்டும் என்பதுதான் சர்க்கார் கொள்கை. நிவாரணத்திற்கு அருகதை இல்லாதவர்களுக்கு நிவாரணம் கிடைத்து, குத்தகைதாரிடமிருந்து நிலத்தை எடுத்துக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடக்கூடாது என்பதுதான் சர்க்கார் கவலை. அதை நல்ல முறையில் பரிசீலனை செய்து அதற்கேற்ற சட்டம் சீக்கிரம் கொண்டு வரப் போகிறோம் என்பதைத்தான் ஆதிமூலம் அவர்களுக்கும், அவர்கள் மூலம் அவர்கள் யாருக்காக கண்ணீர் விட்டார்களோ அந்த ஏழைக் குடியானவர்களுக்கும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆதிமூலம் அவர்களுக்கும் அந்தக் குடியானவர்களுக்கும் சம்பந்தம் இருக்கிறதோ என்னவோ தெரியவில்லை. சம்பந்தம் இருக்குமானால் அவர்கள் மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். சம்பந்தம் இல்லாவிட்டால் நேரடியாக நாங்கள் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள முடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். சிறு நிலச்சுவான்தார்களைப் பொறுத்தவரையில் (குறுக்கீடு) ஆதிமூலம் அவர்கள் சபையிலே இருக்கிறார். கொஞ்சம் பின்னாலே போய்விட்டார், அவ்வளவுதான். சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு எந்த முறையிலே எந்த அளவுக்கு உரிமை கொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி பரிசீலனை செய்து சீக்கிரம் அதற்கான சட்டத்திற்கு திருத்தம் கொண்டுவருவதற்கோ அல்லது வேறு சட்டம் கொண்டு வருவதற்கோ முயற்சி எடுத்துக்கொள்ளப்படுகிறது என்ற உறுதியை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

பல பேர்கள் குத்தகைக்கு பூமியை விட்டிருக்கிறார்கள். அவர்கள் குத்தகைக்கு விட்ட காலத்தில், இம்மாதிரி தொடர்ந்து குத்தகைதாரராக இருந்தால் அவர்களுக்குச் சொந்தமாகிவிடும், அவர்களை விலக்க முடியாது என்று தெரியாது. குத்தகைக்கு ஒருக்கால் விட்டுவிட்டால் போதும், அதற்குப் பின்னால் அவர்கள் வழிக்கே வரமுடியாது என்கின்ற நிலைமையிலே சட்டம் இயற்றுவது சரியல்ல என்பது என்னுடைய கருத்து. ஆகையினால், 30 ஏகரா உச்ச வரம்பு என்று சொல்லும்பொழுது 30 ஏகரா வைத்திருக்கக்கூடிய நிலச்சுவான்தார், நிலத்திற்கு சொந்தக்காரர் அவரே உண்மையிலேயே விவசாயம் செய்யவேண்டும் என்று சொல்லுவது, அவரே உழவேண்டுமென்று சொல்லுவது என்றால், அதற்கும் காங்கிரஸ் கொள்கையான உழுகிறவர்களுக்கு நிலம் சொந்தம் என்பதற்கும் வித்தியாசம் கிடையாது. அவர்களே விவசாயம் செய்வதாகச் சொன்னால், அதற்கு அவர்களுக்கு உரிமை கொடுக்கவேண்டும். அதை அவர்கள் வாங்கி நிலத்தை இன்னொருவருக்கு நினைத்தபடி குத்தகைக்கு விட்டு, அதிக குத்தகை வாங்கிக் கொண்டு இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் அந்த உரிமை வழங்க வேண்டியதில்லை. விவசாயக் குடும்பமாக இருக்குமானால், சூழ்நிலை மாறும்பொழுது அந்த விவசாயக் குடும்பம் மறுபடியும் போய் விவசாயம் செய்ய உரிமை இருக்கவேண்டுமா, இல்லையா என்பதுபற்றி எந்தக் கட்சியாக இருந்தாலும் சரி முடிவு சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள். விவசாயக் குடும்பமாக இருந்தால் கூட அவர்கள் சொந்த நிலத்தில் விவசாயம் செய்ய விரும்பினால் அவர்களுக்கு அந்த உரிமை கொடுக்கக்கூடாது என்ற நிலைமை இருக்கவேண்டுமென்ற கருத்து யாருக்கும் இருக்காது

என்று நான் நினைக்கிறேன். அதேமாதிரி குத்தகைதாரராக இருந்து, அதையே நம்பி வாழக்கூடியவர்களும் பாதிக்கப்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். இரண்டுக்கும் நடுவில் நியாயம் வழங்க வேண்டுமென்பதுதான் கருத்து. கம்யூனிஸ்டு கொள்கை நிலச் சொந்தக்காரர் எப்படியாவது போகிறார், குத்தகைதாரருக்கு புதிய சலுகைகள், தனிசலுகைகள் கொடுக்கவேண்டும் என்பது. குத்தகைதாரர் என்று ஒதுக்கி வைப்பதற்குமில்லை. நிலச்சொந்தக்காரர் என்று ஒதுக்கிவைப்பதற்கும் இல்லை. கொள்கை அடிப்படையில் எது நியாயம் என்பதை அனுசரித்துச் செய்ய வேண்டும். ஒரு சூழ்நிலையில் ஒரு சில குத்தகைதாரர்கள் பாதிக்கப்படலாம். இன்னொரு பகுதியிலே பெரிய அளவுக்கு நிலச் சொந்தக்காரர்கள் பாதிக்கப்படலாம். எது சரி, எது நியாயம், எது நேர்மை, எது விவசாயத்தினுடைய வளர்ச்சிக்கு உகந்தது, சமுதாயத்தினுடைய வளர்ச்சிக்கு உகந்தது என்ற அடிப்படையில் முடிவு எடுக்க வேண்டும். இந்த அடிப்படையில்தான் இதுபற்றி சர்க்கார் ஆலோசனை செய்துவருகிறது என்ற கருத்தை வலியுறுத்திச் சொல்லிக்கொள்ளுகிறேன். ஆகையினால் இதில் யாரும் கவலைப்படவேண்டிய அவசியம் இல்லை. நியாயம் வழங்கக்கூடிய முறையில் குத்தகைதாரர் சட்டம் திருத்தப்படுவதற்கான நடவடிக்கை எடுக்கப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதே சமயத்தில் இதையே நம்பி வாழக்கூடிய ஏழைகளுடைய வாழ்க்கை பாதிக்கப்பட்டு விடக்கூடாது. அவர்களுக்குப் புதிய வேலைவாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். அல்லது, அவர்கள் ஓரளவுக்கு தொடர்ந்து விவசாயத் தொழில் செய்து வாழ்வதற்கான சூழ்நிலையை ஏற்படுத்திக்கொடுக்கவேண்டும். ஆகையினால் இது மேலோடியாகப் பார்த்து முடிவு செய்யக்கூடிய விஷயம் அல்ல. இது சம்பந்தமாக 1955-வது வருஷத்திய சட்டத்தை சரியாக பரிசீலனை செய்து நியாயம் வழங்கக்கூடிய முறையில், அதே சமயத்தில் ஏழைகளின் வாழ்க்கை பாதிக்கப்படாத முறையில் திருத்துவதற்கு இப்பொழுது ஆலோசனை நடந்துகொண்டு வருகிறது. அந்த அடிப்படையில் சட்டத்தைத் திருத்துவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்படும்.

இந்தச் சட்டம் போட்டால்கூட, இந்தச் சட்டம் அமுலுக்கு வந்து நிலங்களை ஆங்காங்கு எடுத்துக் கொடுக்கும்பொழுதுதான் நிலச்சுவான்தார்கள் குத்தகைதாரர்களை அப்புறப்படுத்த முடியும். குத்தகைதாரர்களை அப்புறப்படுத்துவதற்கு முன்பு குத்தகைதாரர்கள் வாழ்க்கை நடத்திக் கொள்வதற்கு அவர்களுக்கு வேறு நிலம் கொடுப்பதற்கு சுலபமாக வழி வகை செய்யவேண்டும், அப்பொழுதுதான் சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கும் நிவாரணம் கொடுக்க முடியும். புதிய அத்தியாயத்தின் மூலம் ஓரளவு நிலமாவது உடனடியாக கிடைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதைப் அடிப்படையாகக்கொண்டு, பெரிய குத்தகைதாரரிடமிருந்து வரக்கூடிய நிலத்தை வைத்துக்கொண்டு, சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கும் குத்தகைதாரர்களுக்கும் நியாயம் வழங்குவதற்கு, உண்மையான சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு நிவாரணம் அளிக்கக்கூடிய முறையில் ஏற்பாடு செய்வதற்குத்தான் இந்த அத்தியாயம் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை ஏழைப் பங்காளி ஆதிமூலம் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். உண்மையாகவே நிவாரணம் சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கும் கிடைக்கப் போகிறது, குத்தகைதார்களுக்கும் கிடைக்கப் போகிறது. இரண்டு பேர்களுக்கும் நியாயம் வழங்கக்கூடிய முறையில் ஆலோசனை செய்துதான் கொண்டு வந்திருக்கக்கூடிய திருத்தம் இது. ஆகையினால், இதன் மூலம் ஏதோ கொடுக்கப்பட்ட வாக்குறுதிகள் போய்விட்டது என்று யாரும் நினைக்கவேண்டிய அவசியம் இல்லை. வாக்குறுதிகளைக் காப்பாற்றும் முறையிலேதான், ஒரு பகுதியினருக்கும் எந்த விதத்திலும் கஷ்டம் வராமல் இருக்கக்கூடிய முறையில்தான் இந்த அத்தியாயம் வகுக்கப்பட்டிருக்கிறது. இதிலே ஒரு சிறு திருத்தம் செய்யவேண்டியிருக்கிறது. நான் முன்பு சொன்னது போல அந்தத் திருத்தத்தையும் ஏற்றுக்கொண்டு, இந்த அத்தியாயத்தை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நாட்டில் எல்லோருக்கும் திருப்தி அளிக்கக்கூடிய முறையில், நியாயம் வழங்கக்கூடிய முறையில்

இதை அமுல் நடத்த வேண்டுமென்பதுதான் சர்க்கார் கொள்கை. அப்படி அமுல் நடத்த முடியும் என்ற நம்பிக்கையுடன் இந்த அத்தியாயத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. R. KANDASWAMY MUDALIYAR : தலைவர் அவர்களே, 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் வரை வைத்துக் கொள்ளலாம் என்று இருக்கிறது. இதில் ஒரு 20 ஸ்டாண்டர்ட் ஏக்கர் உள்ள ஒருவர், வாரத் திற்கோ, குத்தகைக்கோ விட்டு இருந்தால், அதில் ஒரு 5 ஏக்கரை கல்யாணத்திற்காகவோ அல்லது படிப்புக்காகவோ விற்பனை செய்ய வேண்டு மென்றால், சாகுபடி செய்யும், உழுது பயிர் செய்யும் குத்தகைக்காரரை அப்புறப்படுத்திவிட்டு விற்பதா இல்லாவிட்டால், சொந்தக்காரருக்கு விற்க உரிமை இருக்கிறதா இல்லையா என்று விளக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நிலத்தை விற்கலாம். விற்பதற்கும் குத்தகைக்கும் சம்பந்தமில்லை. ஆனால், குத்தகைதாரர் உரிமையை அனுசரித்துத்தான் விற்கவேண்டியிருக்கும். இன்றைக்கும் குத்தகையில் இருக்கும்போதே விற்பனைகள் நடைபெறுகின்றன.

SRIMATHI T. N. ANANDANAYAKI : குத்தகைக்காரரையும் சேர்த்துத்தான் விற்கவேண்டுமா ?

* THE HON. SRI M. A. MANICKAVELU : அங்கத்தினர் கேட்ட தற்குத் தெளிவாகச் சொல்ல வேண்டுமென்றால், இப்பொழுது எந்த நிலத்தை விற்றாலும், அதிலுள்ள மரம், செடி அவைகளை யெல்லாம் சேர்த்துத்தான் விற்கிறோம். அதேபோல, குத்தகை கல்டிவேஷனில் இருந்தால், அந்த லயபிலிடியையும் சேர்த்துத்தான் விற்கவேண்டும். (சிரிப்பு.)

ஸார், இப்பொழுது கனம் நிதி அமைச்சர் பேசியதைத் தொடர்ந்தும், கனம் ஸ்ரீனிவாச அய்யர் விரிவாகச் சொன்னதைத் தொடர்ந்தும் சுருக்க மாகவும், தெளிவாகவும் சொல்ல விரும்புகிறேன். கனம் ஸ்ரீனிவாச அய்யர் ஆரம்பத்தில் இது எப்படி இருந்தது என்று சொன்னார்கள். அவர்கள் சொன்னது போல, முதலில், ஒரு மிராசுதார் 5 எக்கர் வரை தன்னுடைய சொந்த சாகுபடிக்கு எடுக்கலாம் என்று இருந்தது. ஒரு ரெஸ்ட்ரிக்ஷனோடு சேல்ஸ் டாக்ஸ், இன்கம்டாக்ஸ் இருக்கக் கூடாது என்று இருந்தது. இப்பொழுது இரண்டாவது அடிப்படையில், சேல்ஸ் டாக்ஸ் பர்செண்டேஜ் ரொம்பக் குறைவாக இருந்தாலும் பாதிக்கப்படுவார்கள் என்று இன்கம்டாக்ஸை வைத்து, 5 எக்கருக்கு மேற்பட்டவர்கள் இரண்டு வருஷத்திற்குப் பிறகு ரெஸ்யூம் பண்ணலாம் என்பது. இன்னொன்று, 5 ஏக்கருக்கு உள்பட்ட மிராசுதார்கள், உடனடியாக 3 எக்கருக்கு எடுக்க லாம் என்று இருந்தது, இப்பொழுது அப்படி யில்லாமல், திருத்தத்தில் இன்னும் மூன்று வருஷத்திற்கு எடுத்துக் கொள்ளும் சமாசாரமே தள்ளிப் போடப்பட்டிருக்கிறது. ஏனென்றால், இன்னும் சரியாக நிலைமை தெரிய வில்லை. மற்ற அங்கத்தினர்கள் சொன்னது போல, அநேக மாறுதல்கள் ஏற்பட்டு இருக்கின்றன. அதனால், "நியூலிமேட் ரிச்" புதிதாகப் பணம் படைத்தவர்கள் ஏற்பட்டிருக்கிறார்கள் ; "நியூ ஸ்மால் ஹோல்டர்கள்" நிறைய ஏற்பட்டு இருக்கிறார்கள். இந்த சட்டத்தை அனுசரித்து புதுப்புது நிலச்சுவாந்தார்கள் ஏற்பட்டிருக்கிறார்கள். முதலிலே இருந்த கருத்து என்னவென்றால், சின்ன மிராசுதார்களுக்கும் பாதுகாப்பு கொடுக்கவேண்டு மென்பது. ஆனால், ஒரு சட்டத்தை, மீறுவதற்காக, பிரித்துவைப்பதனால், சொந்தக்காரர்களாக இருப்பவர்களுக்கு ப்ரொடெக்ஷன் கொடுக்க வேண்டுமா என்று பரிசீலனை செய்ய வேண்டும். இப்பொழுது இருக்கும் சூழ்நிலையில் எடுக்கும் உரிமை கொடுத்தால், அது எங்கே போய்விடுமோ ஒன்றுமே தெரியவில்லை. முக்கியமான கருத்து ஏதோ ஒரு திருத்தம் கொண்டு வருவதால், "அக்ரேரியன் அப்ஸெட்", ஒரு பெரிய மாறுதலினால் விவசாயத்திற்கே கேடு, இடையூறு ஏற்படுவதானால், அதைத்

27th September 1961] [Sri M. A. Manickavelu]

தவிர்க்க வேண்டும். ஆகவே, தாற்காலிகமாக நிலைமை தெளிவாகத் தெரிகிற வரையில், மூன்று வருஷம் என்று போட்டிருக்கிறோம் ; அது "எக்ஸ்ட்ரீம் லிமிட்". யார் உண்மையிலேயே சின்ன சொந்தக்காரர், யாருக்கு உண்மையிலேயே பாதுகாப்பு கொடுக்க வேண்டும் என்பதை யெல்லாம் பார்த்துச் செய்ய வேண்டும். அந்த அளவில் இப்பொழுது திருத்தம் ஏற்படுத்தியிருக்கிறோம்.

முதலிலே பிரேரேபித்த பிரகாரம், ஒரு டெனன்ட் இருந்தால், அவனே சாகுபடி செய்தால், ஒரு 20 எக்கர் வைத்திருந்தால், பரவாயில்லை ; இதற்கு உட்பட்டு பிரித்துக் கொடுத்தால், 5 எக்கருக்குள்ளே வைக்கலாம் என்று இருந்தது. இருபது ஏக்கரை வைத்துக்கொண்டு, அவனும் சாகுபடி செய்யாமல், ஒரு ஏஜெண்டை, குமாஸ்தாவை வைத்துக்கொண்டு விவசாயம் செய்தால், அப்பொழுது, முதல் கொடுத்திருந்த பிரிவுப்பிரகாரம், அவனைக் கட்டுப்படுத்த முடியாது. புதுத்திருத்தத்திலே, அந்த நிலம் அவன் "பொஸெஷனில்" இருக்கவேண்டும். நேரிடையாகவோ, ஆளை வைத்துச் செய்தாலோகூட, அப்பொழுதும் கட்டுப்படுத்தும் என்று திருத்தம் கொண்டு வந்திருக்கிறது. அவனை மூன்று விதமாகப் பிரித்தோம், ஒன்று அவனே சாகுபடி செய்ய வேண்டும், இரண்டாவதாக பிரித்துக் கொடுத்தாலும் பரவாயில்லை, இப்படி இரண்டும் இல்லாமல், நிலத்தில் மட்டும் சொந்தமாக இருந்துக்கொண்டு செய்தால், அப்படி ஏற்படக்கூடிய இண்டர்மீடியரி ஸ்டேஜை எடுத்துவிடுகிறோம். அதுதான் திருத்தம்.

SRI G. ANNAMALAI MUTHURAJA : ஸார் . . .

DEPUTY SPEAKER : கனம் மந்திரி பேசி முடிந்த பிறகு நீங்கள் கேளுங்கள்.

THE HON. SRI M. A. MANICKAVELU : என் கருத்தை ஓட விட்டு, அது நின்ற பிறகு கேளுங்கள். கனம் கல்யாணசுந்தரம் சொன்னார்கள், இந்த திருத்தம் செய்தாலும், கல்டிவேடிங் டெனன்ட் வெளியேற்றப்படக் கூடாது (ஸ்ரீ கல்யாணசுந்தரம் : கூடியவரை) கூடிய வரை. இந்தக் "கூடியவரை" என்பது நமக்கு எவ்வளவு உபரி நிலம் கிடைக்கும் என்பதை ஒட்டித்தான் இருக்கிறது. ஐந்து எக்கர் கல்டிவேடிங் டெனன்டுக்கு என்றால், வருகிறது குறைவாக இருந்தால், ஒன்றும் செய்ய முடியாது. வருகிற நிலத்தை அனுசரித்துத்தான் செய்ய முடியும். அரசாங்கத்தின் முக்கியமான கருத்து, அவர்கள் வெளியேற்றப்படும் நிலைமை ஏற்பட்டால், அவனுக்கு நிலம் கொடுக்கப்பட்டு, பழையபடி சாகுபடி செய்ய வேண்டும். அப்படி முதலிலே கல்டிவேடிங் டெனன்டுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டும். அது 2, 3, 4 அல்லது 5 என்று இப்பொழுது சொல்லமுடியாது. உபரி நிலம் எவ்வளவு கிடைக்கிறது என்பதைப் பொருத்திருக்கிறது. அந்த முறையில் வழிவகை செய்யப்போகிறோம். அப்படித்தான் ஷராவில் போட்டிருக்கிறும். ஆகவே, அவர்களைப்பற்றிக் கவலை வேண்டாம் என்று சொல்ல விரும்புகிறேன்.

புது ஸ்மால் ஓனர்களுக்கு பாதுகாப்பு கொடுக்காவிட்டால் அவர்களுக்கும் அதிருப்தி ஏற்படும் என்று சொல்லப்பட்டது. ஆனால், அவர்கள் விஷயத்தில், "They were alerted ; they knew". ஆகவே, அவர்கள் தெரிந்தும் செய்தால், அவர்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை. யாருக்கு உண்மையாகப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டும் என்று தீர்மானிக்கவேண்டும். நிலத்தைச் சொந்த சாகுபடிக்குக் கொண்டுவருவதில், கல்டிவேடிங் டெனன்ட்ஸ் ப்ரொடக்ஷன் ஆக்டுபடி எந்த விவசாயியையும் நிலத்தை விட்டு அப்புறப்படுத்த முடியாது. இந்த ஷராக்களை ஏற்படுத்தி தாற்காலிகமாக, வெளியேற்றம் அடையாமல் இருக்க ஏற்பாடு ஆகியிருக்கிறது. சின்ன நிலச்சுவாந்தார்களுக்கு பாதுகாப்புச் செய்யவேண்டும் என்றும் அரசாங்கத்தின் மனதில் இருக்கிறது. எந்தக் காலத்தில் இந்த விஷயங்கள் தெளிவாகத் தெரிகிறதோ, அப்பொழுது அவர்களுக்கும் பாதுகாப்பு தீர்மானிக்கப்படும்.

10-30 a.m.

SRI G. ANNAMALAI MUTHURAJA : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, யார் நிலத்திற்குச் சொந்தக்காரரோ அவர் நிலத்திலே பாடுபட வேண்டும், அவரே கலப்பையைப் பிடித்து உழவேண்டும், ஏஜென்டு கூடாது, ஆள் கூடாது என்று சொன்னால் எப்படி அந்த நிலத்தைச் சாகுபடி செய்வது ? அமைச்சர்கூட, தாங்களே வேலை எல்லாவற்றையும் பார்த்துவிட முடியுமா ? அவருக்குக்கீழ் பல அதிகாரிகள் செக்ரடேரியட்டில் இருக்கிறார்கள். அப்படியிருக்க, ஆள் முதலியவர்களை வைத்துக் கொள்ளாமல் நிலச் சொந்தக்காரரே எப்படிச் சாகுபடி செய்ய முடியும் ? ஆகையால், அமைச்சர் அவர்கள் அதைப்பற்றி விளக்கமாகச் சொன்னால் நல்லது.

THE HON. SRI M. A. MANICKAVELU : சொந்த சாகுபடி என்றால் என்ன என்பதைப்பற்றி முன்பே விளக்கமாகச் சொல்லியிருக்கிறேன். அதை ரொம்பவும் தளர்த்திவிட்டோம் என்று சில கனம் அங்கத்தினர்கள் சொன்னார்கள். நிலத்திலே போய் இருந்தால்தான் சொந்த சாகுபடி ஆகும் என்று கூடச் சொன்னார்கள். அது வேண்டாம். தூரத்திலே இருந்தும் சொந்த சாகுபடி செய்யலாம், தூரத்திலே இருந்து மூளையை உபயோகப்படுத்தி வேலை செய்யலாம் என்று சொல்கிறோம்.

Proposed Clause 59 was put and carried.

*Proposed Clause* 60

DEPUTY SPEAKER : The question is—

'That the proposed clause 60 do sand part of the Bill.'

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment ;—

'To the proposed Clause 60, *add* the following explanation—

"*Explanation*—For the purpose of this Chapter, 'Cultivating Tenant' includes any tenant who is in actual possession of land but does not contribute his own physical labour or that of any member of his family in the cultivation of such land".'

SRI R. SRINIVASA IYER : Sir, I move the following amendments—

'In the marginal note to proposed clause 60, *omit* the words "Definition of cultivating". '

'In the proposed clause 60, *for* the words beginning with "In this Chapter" and ending with "cultivating tenant", *substitute* the following :—

"On and from the date of publication of this Act, no tenant shall hold land in excess of five standard acres whether as tenant, or partly as tenant or partly as owner, or partly as tenant and partly as cultivating tenant or as cultivating tenant".'

The amendments were duly seconded.

27th September 1961]

Sri N. K. PALANISAMI : Sir, I move the following amendment—

'At the end of the proposed clause 60, *add* the following words " according to the 1961 Census ". '

The amendment was duly seconded.

Sri M. KALYANASUNDARAM : கனம் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொடுத்த திருத்தத்திற்கு பிறகு என்னுடைய திருத்தத்திற்கு அவசியம் இல்லை. ஆகையால், இந்தப் பிரிவுக்கு நான் கொடுத்திருக்கும் திருத்தத்தைப் பிரேரேபிக்கவில்லை.

DEPUTY SPEAKER : The proposed Clause and the amendments are before the House for discussion.

*Sri R. SRINIVASA IYER : ஸார், சர்க்கார் 60-வது பிரிவுக்குக் கொடுத்திருக்கும் திருத்தம்—

" 60. *Definition of cultivating tenant's ceiling area.*—In this Chapter, 'cultivating tenant's ceiling area' means 5 standard acres held by any person partly as cultivating tenant and partly as owner or wholly as cultivating tenant. "

என்று இருக்கிறது. இப்பொழுது சர்க்கார் கொடுத்திருக்கும் " எக்ஸ்ப்ளனேஷன் "படி இந்த " சாப்டரு "க்காக சொந்தத்திலே சாகுபடி செய்யாத குத்தகைதாரர்கூட கல்டிவேடிங் டெனன்ட் மாதிரி பாவிக்கப் படுவார் என்று வந்துவிட்டது. அந்த தாத்பர்யத்தை வைத்துக்கொண்டு தான் என்னுடைய திருத்தமும் கொடுக்கப்பட்டிருக்கிறது, அதற்காகவே தான் கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்களுடைய திருத்தமும் கொடுக்கப்பட்டிருப்பதாக நான் நினைக்கிறேன். ஆனால், இதிலே ஒரு விஷயம்.

DEPUTY SPEAKER : The hon. Member Sri M. Kalyanasundaram has not moved his amendment.

Sri R. SRINIVASA IYER : " திருத்தம் கொடுத்திருக்கிறார் " என்று சொன்னேன். " மூவ் " பண்ணினதாகச் சொல்லவில்லை. அதிலே " **Tenants ceiling area** " என்று சொல்லியாய்விட்டது. 5-வது செக்ஷனிலே பார்த்தால், " பர்ஸனுக்கு ஸீலிங் எரியா முப்பது ஸ்டாண்டர்டு ஏக்கர் " என்று சொன்னோம். 7-வது செக்ஷனிலே, " குறிப்பிட்ட தேதியிலே அந்த முப்பது ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு மேலே ஒருவரும் வைத்திருக்கக்கூடாது " என்று சொன்னோம். அம்மாதிரி ஒவ்வொரு க்ளாஸிலேயும் இருக்கிறது. ஆனால், இந்த " சாப்டரி "லே இல்லை. அதற்காகத்தான் நான் கொடுத்திருக்கும் திருத்தம்—

" On and from the date of publication of this Act, no tenant shall hold land in excess of five standard acres whether as tenant, or partly as tenant or partly as owner, or partly as tenant and partly as cultivating tenant, or as cultivating tenant."

என்று இருக்கிறது. ஐந்து ஏக்கர் என்று உச்ச வரம்பை நிர்ணயித்து விட்டு, அதற்குமேல் வைத்துக்கொள்ளக்கூடாது என்று போடவேண்டும். அப்படி 8-வது சாப்டரிலே எங்காவது ஒரு இடத்தில் போட்டாலும் சரிதான். பின்னால் இருக்கக்கூடிய ஒரு க்ளாஸை அமல் நடத்த அதிகாரம் தேவை, ஆதரைஸ்டு ஆபீஸருக்கு. ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் வைத்துக் கொள்ளக்கூடாது என்ற விதி இருந்தால்தான் " எக்ஸெஸ் " ஆக இருப்பதை எடுத்துக்கொள்ள வழிவகை ஏற்படும். அதற்காகத்தான் 60-வது க்ளாசுக்கு இப்படி நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை

இருக்கிறபடியே வைத்துக்கொண்டாலும் சரி, மாற்றினாலும் சரி, ஏதாவது ஒரு வழியிலே சொல்லிவிட்டால்தான் நன்றாக இருக்கும். ஏனென்றால், "ஓனர்" சம்பந்தப்பட்டவரையில் 5-வது க்ளாஸிலும், 7-வது க்ளாஸிலும் அம்மாதிரி சொல்லியிருக்கிறோம். ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு, அவரவருக்கு நிர்ணயிக்கப்பட்ட உச்ச வரம்புக்குமேல் நிலம் வைத்திருக்கக்கூடாது என்ற விதி இருக்கவேண்டியது அவசியம். அதற்காகத்தான், என்னுடைய 297-வது திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன். ஆனால், "எக்ஸ்ப்ளனேஷன்" கூட இப்பொழுது கொடுக்கப்பட்டிருப்பதால், என்னுடைய திருத்தத்தை அதற்குத் தகுந்தவாறு திருத்திக்கொள்ளவேண்டும். "டெனன்ட்" என்று போட்டால் "கல்டிவேடிங் டெனன்ட்" என்று வைத்துக்கொள்ளலாம். நான் கொடுத்த திருத்தத்திற்குப் பிறகு சர்க்கார் "எக்ஸ்ப்ளனேஷன்" கொண்டுவந்ததால், அதற்குப் பிறகு நான் திருத்தம் கொடுக்க நேரம் இல்லை. ஆகையால், விஷயத்தைச் சொல்கிறேன். "third reading stage"லே கூட திருத்தம் பண்ணிக்கொள்ளலாம். நான் சொல்வது என்னவென்றால்—"கல்டிவேடிங் டெனன்ட்" என்ற இடத்தில் "டெனன்ட்" என்று இந்த சாப்டரில் போட்டால் "எக்ஸ்ப்ளனேஷ"னோடு சேர்த்துப் பார்க்கும்போது சரியாக வந்துவிடுகிறது. எல்லோருடைய அபிப்பிராயமும் நிறைவேறுகிறது. ஆனால், அந்தக் குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு, அந்த "டெனன்ட்" அல்லது "கல்டிவேடிங் டெனன்ட்"டுக்கு உள்ள உச்ச வரம்புக்குப் மேற்பட்ட விஸ்தீரணம் உள்ள நிலம், அவர்களுடைய "பொஸெஷனி"ல் வைத்துக்கொள்ளக்கூடாது, ஸ்வாதீனத்திலே வைத்துக்கொள்ளக்கூடாது. Sanction behind an order என்று சொல்வார்களே, அம்மாதிரி விதி இருக்கவேண்டுமென்ற அபிப்பிராயத்தோடு என்னுடைய 297-வது திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். நிதி அமைச்சர் அவர்களும், ரெவினியூ அமைச்சர் அவர்களும் விளக்கமாகச் சொன்ன பிறகு, 1955-வது வருஷத்திய 25-வது சட்டப்படி, நிலச்சுவாந்தாருக்கும், சாகுபடிதாருக்கும், குத்தகைதாருக்கும் இருக்கும் உறவு, அதிலே பாத்தியங்கள், கோர்ட்டுக்குப் போகும் உரிமைகள் பாதிக்கப்படாத வகையில் இந்தச் சட்டம் ஏற்படுத்தியிருப்பதை நிலச்சுவாந்தார்களும், குத்தகைதார்களும், சொந்த சாகுபடிதார்களும் வரவேற்கவேண்டும். அதிலே இம்மாதிரி திருத்தம் இருக்கவேண்டியது அவசியம். பாக்கியைப்பற்றிப் பின்னால் யோசிக்கலாம். சிறு நிலச்சுவாந்தார்களுக்குச் சலுகை கொடுத்த பிறகு சட்டம் கொண்டுவருவதாகச் சொன்னதற்காக அமைச்சருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். அவர்களுக்கும் கூடிய சீக்கிரம் நிவாரணம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய திருத்தத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

* SRI N. K. PALANISAMI : கனம் சபைத் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் திருத்தம், "according to the 1961 Census" என்பதைச் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்பது. 1961-வது வருஷ ஸென்ஸஸ் பிரகாரம், யார் யார் குத்தகைதாரர்களாக இருக்கிறார்களோ அவர்களையும் கட்டுப்படுத்தும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். "டாக்குமெண்ட்" இருக்கக்கூடியவர்களுக்குத்தான் இதுவரையிலும் பாதுகாப்பு கொடுக்கப்பட்டு வந்தது. கல்டிவேடிங் டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் ஆக்டிலே குத்தகைதாருக்குப் பாதுகாப்பு கொடுக்கப்பட்டபோதிலும், ரெவினியூ டிவிஷனல் ஆபீசர்கள் குத்தகைதார்களுக்கு நேர் விரோதமாகத்தான் தீர்ப்பு பண்ணுவது வழக்கம். டாக்குமெண்டிலே இருந்தால்மட்டும் அவர்களுக்குச் சாதகமான தீர்ப்பு கொடுக்கப்படுகிறது. நாம் இந்தச் சபையில் பல வருஷங்களாக வற்புறுத்தி வந்திருக்கிறோம். கிராமக் கர்ணம் "க்ராப் ரிபோர்ட்" தயாரிக்கும்போது இன்னாருடைய பூமியை இன்னார் குத்தகைக்குப் பார்க்கவேண்டும் என்ற அடிப்படையில் கணக்கு வைக்கவேண்டும். அப்படி வைத்தால்தான், அவர்கள் குத்தகைதாரரா, இல்லையா என்று தெரியும். விவகாரம் வரும்போது யார் குத்தகைதாரர் என்று தீர்ப்புக் கூறுவதற்கு வசதியாக இருக்கும். இந்த முறை

யிலே இந்தச் சபையிலே வற்புறுத்திவந்தோம். இன்றையதினம் என்ன நிலைமை ? 1961-ம் வருஷத்திலே "டெய்ல்டு" ஆக ஸென்ஸஸ் எடுக்கப்பட்டிருக்கிறது. யாருடைய பூமியை யார் உழுதுகொண்டிருக்கிறார்கள், எவ்வளவு மாடு இருக்கிறது என்றெல்லாம் விவரமாக 1961-ம் வருஷத்திய ஸென்ஸஸ் காட்டுகிறது. டாக்குமெண்டை வைத்துக்கொண்டிருக்கக்கூடியவர்கள், டாக்குமெண்ட் இல்லாமல் இருக்கக்கூடியவர்கள் யாராக இருந்தாலும், 1961-ம் வருஷ சென்ஸஸ் பிரகாரம் யாருடைய பூமியை யார் குத்தகை பார்க்கிறார்களோ அத்தனை பேருக்கும் இது பொருத்தமாக இருக்கவேண்டுமென்ற முறையில் நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவித் தலைவர் அவர்களே, இந்த ஷராவில் கல்டிவேடிங் டெனன்டுக்கு 5 ஏக்கராவுக்கு மேல் இருக்கக் கூடாது என்று சீலிங் ஏரியாவை வரையறை செய்கிறது இந்தப் பிரிவு. ஸ்ரீ சீனுவாச ஐயர் சுட்டிக்காட்டியபடி இதில் இன்னொரு பிரிவைச் சேர்க்கவேண்டியது அவசியமா, இல்லையா என்பதைப்பற்றி முடிவு செய்ய சட்ட நிபுணர்களுக்கே விட்டுவிடுகிறேன். என்னைப் பொறுத்தவரையில் சொல்வேன். 62-வது பிரிவு ரொம்பத் தெளிவாக இருக்கிறது. அதன் படியே அதிகமாக இருக்கிற நிலத்தை எடுத்துக்கொள்ள முடியும். இன்னொரு பிரிவைப் போடுவதனால் வீணாகக் காலதாமதம்தான் ஆகும். இதில் போட்டு இருக்கிற வழி கொஞ்சம் குறுக்கு வழி என்றாலும் துரிதமாக நடவடிக்கை எடுக்க இது மிகவும் உதவியாக இருக்கும். ஆனால் இதை அப்படியே நிறைவேற்றி, அது கோர்ட்டில் செல்லாது என்ற அளவுக்குப் போகுமா, போகாதா என்பதைச் சட்ட நிபுணர்கள்தான் பரிசிலனை செய்யவேண்டும். அப்படி ஒரு ஆபத்து வரக்கூடும் என்று நான் நினைக்கவில்லை. இந்த 60-வது பிரிவையும், 62-வது பிரிவையும் சேர்த்துப் பார்க்கவேண்டும். இன்னொன்று. கல்டிவேடிங் டெனன்டுக்கு நாம் நிர்ணயிக்கிற 5 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்பது போதுமானதா, இல்லையா என்பது ஒரு பக்கத்தில் இருக்கட்டும். உழுபவனுக்கு நிலம் சொந்தமாக்கவேண்டுமென்பது ஓரளவுக்குத்தான் சாத்தியம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். சிறு நிலச் சொந்தக்காரர்களுடைய நிலத்தை எடுத்து நிலம் இல்லாத ஏழைகளுக்குக் கொடுத்துவிடவேண்டுமென்று கம்யூனிஸ்டுக் கட்சியோ, நானோ இங்கோ வெளியிலோ கூறியது கிடையாது. நிதி அமைச்சர் அவர்கள் அப்படி பொருள்படும்படி பேசினார். சிறு நிலச் சுவாந்தார்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டுமென்று நினைத்தாலும் கூட பெரு நிலச்சுவாந்தார்களுக்கு மறைமுகமாக உதவி செய்ய நினைத்ததன் விளைவாக முடியாமல் போய்விட்டது. சிறு நிலச்சுவாந்தார்களுக்குப் பாதுகாப்பு இருக்கவேண்டும், குத்தகைதாரர்களுக்குப் பாதுகாப்பு இருக்கவேண்டுமென்றால் உச்சவரம்பைக் குறைத்தால்தான் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுகிறவர்களுக்கு நிலம் கிடைக்கும். அதனால் உச்ச வரம்பைக் குறைக்க வேண்டும். அது இல்லாதவரையில் ஆபத்துதான். ஆகவேதான் அந்த சீலிங்கை எப்படிக் குறைப்பது என்று ஆலோசிக்கவேண்டும்.

இதைச் சொல்லும்போது நிலம் இல்லாதவர்களுக்கு எல்லாம் நிலம் கொடுப்பது என்பது முடியாது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். நிலம் இல்லாதவர்களுக்கு எல்லாம் நிலம் கொடுக்கவேண்டுமென்றோ, இரண்டு இரண்டு செண்டாக எல்லோருக்கும் கொடுத்துவிடலாம் என்றோ, நானோ, என் கட்சியைச் சேர்ந்தவர்களோ நினைக்கவில்லை, பேசவும் இல்லை. இந்த மசோதாவினால் அந்தப் பயன் ஏற்படாது. இவ்வளவு தாராளமாக உச்சவரம்பு வைக்காவிட்டால் சிறு நிலச்சுவாந்தார்கள், குத்தகைதாரர்கள் பாதிக்கப்படமாட்டார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். அதைக் குறைத்திருந்தால் நல்லது என்று சொல்லி இந்த கல்டிவேடிங் டெனன்டுக்கு 5 ஸ்டாண்டர்டு ஏக்கர் உச்சவரம்பு என்று வைத்திருப்பதை நான் ஆதரிக்கின்றேன்.

[27th September 1961

* THE HON. SRI M. A. MANICKAVELU : உச்சவரம்பு எந்த அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டது என்பதை முன்பே சொன்னேன். திரும்பத் திரும்ப அதைப்பற்றி வேறு ஷராவில் இழுத்துவிட்டால் அதற்கே பதில் சொல்லிக்கொண்டிருக்க முடியாது. ஆகவே அதைப்பற்றி இப்போது சொல்ல வேண்டியது இல்லையென்று நினைக்கிறேன். கனம் சீனுவாச ஐயர் கொடுத்திருக்கும் திருத்தம் வேண்டியது இல்லையென்று நினைக்கிறேன். சட்டத்தில் ஏற்கெனவே நன்றாக, தெளிவாக இருக்கிறது. இதில் உள்ள 72-வது பிரிவைப் பார்த்தாலே **The provisions of this chapter, shall subject to the provisions of Section 17, have effect notwithstanding anything** என்று இருக்கிறது. அதிலே ஹோல்டிங் என்பதுபற்றிச் சொல்லியிருக்கிறது. முப்பது எக்கர் வரையில் வைத்திருக்கலாம் என்று சொல்லியிருக்கிறது. இதுபோதும். திரு. கல்யாணசுந்தரம் சொன்னதுபோல இது குறுக்குவழிதான். கொஞ்சம் துரிதமாக செயல்பட முடியும். 'கல்டிவேடிங் டெனன்டு' என்பதுபற்றி வேறுவிதமாக தேவையில்லை. விளக்கம் சரியான முறையில் இருக்கிறது. இதை இப்படித்தான் வைக்க வேண்டுமென்று வேறொரு ஷரத்து போட்டுக் குறுக்க வேண்டியது இல்லை. ஆகவே அந்தத் திருத்தத்திற்கு அவசியம் இல்லையென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : 72-வது பிரிவு இதைக் குறிப்பிடுகிறது என்றால் 17-வது பிரிவுப்படி டெனன்டிடம் 30 ஸ்டாண்டர்டு எக்கருக்கு மேல் இருந்தால் அந்த நிலத்தை நிலச்சுவாந்தாரிடமே விட வேண்டும் என்றுதான் இருக்கிறது. இந்தப் பிரிவின்படியும் நிலச்சுவாந்தாரிடம்தான் விடமுடியும். ஆனால் 17-வது பிரிவுப்படி 5 எக்கருக்கு மேல் இருந்தால் 30 எக்கர் வரை அதை அரசாங்கம் எடுத்துக்கொண்டு, விநியோகிக்க இடம் உண்டு. இதுதான் நான் புரிந்துகொண்டிருப்பது ? இது சரியா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் எவ்வளவு ஹோல்டிங் வைத்துக்கொள்ளலாம் என்பதற்கு அதில் குறிப்பிடப்பட்டிருப்பதை எடுத்துக் காட்டினேன். அதைத் தவிர எடுத்துக்கொள்கிற பிரச்னை இதில் இல்லை.

The amendments of Sri R. Srinivasa Iyer were, by leave, withdrawn.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

The Government amendment was put and carried.

Proposed Clause 60 as amended was put and carried.

*Proposed Clause* 61.

DEPUTY SPEAKER : The question is—

"That the proposed Clause 61 do stand part of the Bill."

I think Sri M. Kalyanasundaram's amendment is not necessary.

SRI R. SRINIVASA IYER : In view of the explanation now added to Clause 60, my amendment is not necessary and I am not moving it.

Proposed Clause 61 was put and carried.

**27th September 1961]**

*Proposed Clause 62.*

DEPUTY SPEAKER: The question is—

"That the proposed Clause 62 do stand part of the Bill."

SRI R. SRINIVASA IYER: Sir, I move the following amendment:—

*For* the first proviso to proposed clause 62, *substitute* the following:—

"Provided that the authorized officer shall not take possession of such land unless he has given to the landowner and the tenant concerned a reasonable opportunity of being heard."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER: The Clause and the amendment are before the House for discussion.

SRI R. SRINIVASA IYER: சார், இந்த 62-வது கிளாஸ் '**The authorised officer to take possession of land in excess of cultivating tenant's ceiling area' 5** எக்கருக்குமேலிட்டிருக்கிற நிலத்தை உத்தியோகஸ்தர் எடுத்துக்கொள்வது ஒரு விஷயம். இதில் வேறு சிலயிடங்களில் போட்டிருக்கிறபடி லாண்ட் ஓனரையும், டெனன்ட்டையும் கேட்டு அவர்கள் அபிப்பிராயம் தெரிந்து அதற்கு மேல் எப்படி இருக்கலாம் என்பதைப்பற்றி ஆலோசனை செய்யலாமென்று இருக்கிறது. அதேபோன்று ஒரு அடிஷனல் ப்ரொவைஸோ போடலாம் என்று சொல்கிறேன்.

Sir, in the amendment which I have given notice of, I have stated "Provided that the authorised officer shall *not* take possession of such land . . . . . . . etc.". I find that the **word 'not'** has been omitted. Perhaps it is a typing mistake. It must be "**shall** *not* take possession". ஒரு டெனன்டை மாற்றி வேறு ஒருவருக்கு ஆதரைஸ்ட் ஆபீஸர் கொடுக்கப் போகிறார். லாண்ட் ஓனருக்கு அவர் திருப்திகரமாகயிருக்கிறாரா? புதிதாக வருபவர் நன்றாக இருக்கிறாரா என்று பார்ப்பதற்கு ஒரு "ஆப்பர்சூனிட்டி" கொடுக்கலாம் என்று சொல்கிறேன். எனது யோசனைப்படி இதில் வருமென்றால் எனது திருத்தத்திற்கே அவசியமில்லை.

* THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, in the first place, the hon. Member Sri R. Srinivasa Iyer says that it is a mistake, and that it must be "shall not". There is already a proviso in Clause 62 to that effect: "Provided that the authorised Officer shall not take possession of such land unless he has given a reasonable opportunity of being heard to the landowner and the cultivating tenant concerned". The hon. Member says "unless". I think the meaning is the same in both the cases and that there is no difference.

The amendment was, by leave, withdrawn.

Proposed Clause 62 was put and carried.

Proposed Clause 63 was put and carried.

[27th September 1961

*Proposed Clause* 64.

DEPUTY SPEAKER : The question is—

"That the proposed Clause 64 do stand part of the Bill".

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment :—

In Sub-clause (1) of the proposed clause 64, after the words and figures " under Section 62 ", *insert* the words " to the persons evicted or".

The amendment was duly seconded.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move the following amendment—

After sub-clause (2) of the proposed Clause 64, *add* the following proviso :—

" Provided no eviction shall be ordered under this section, without giving a reasonable opportunity to the cultivating tenant for making his representations. "

The amendment was duly seconded.

*SRI N. K. PALANISAMI : இந்தத் திருத்தம் கொடுத்தது, "லாண்ட்லெஸ் புவர்" என்று மட்டுமல்லாமல் இந்த சட்டம் வரும் என்று சொல்லி முன்பே பலர் வெளியேற்றப்பட்டிருக்கிருர்கள். அவர்களுக்கு இதில் முதல் இடம் கொடுக்கப்படவேண்டும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது, வெளியேற்றப்படும் குத்தகை விவசாயிகளுக்கு ஒவ்வொரு மாகாணமும் சட்டம் செய்யவேண்டுமென்று. அவர்களாக போனுலும்கூட வெளியே போகிருேம் என்ற முறையில் ரெஜிஸ்தரில் கையெழுத்து போடும் முறையில் சட்டம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டம் எந்தளவு குத்தகை விவசாயிகளுக்கு தெரியுமென்று சொல்ல முடியாது. எங்கெங்கு விவசாய இயக்கங்கள் இருக்கின்றனவோ அந்தப் பகுதிகளில்தான் இப்படி இந்தச் சட்டம் இருக்கிறது என்று விவசாயிகளுக்குத் தெரியும். உதாரணமாக கோபி இருக்கிறது. அங்கு குத்தகை விவசாயிகளுக்கு, அவர்களைப் பாதுகாக்க சட்டம் இருக்கிறது என்று தெரியாது. அங்கு சொந்தக்காரர்கள் அவர்கள் இஷ்டம்போல் வெளியேற்றலாம், வேறு யாரையும் வைக்கும் முறையிருக்கிறது. இந்தச் சட்டம் வருமென்று பலர் வெளியேற்றப்பட்டிருக்கிருர்கள். அவர்களுக்கு அதனுல் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அவர்களுக்கு இதில் முதலிடம் கொடுக்கவேண்டுமென்பது என் திருத்தம். இதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : 64-வது பிரிவு, இந்த அத்தியாயப்படி குத்தகை சாகுபடியாளரிடமிருந்து எடுத்துக்கொள்ளும் மிச்சம் நிலம் விநியோகிப்பது சம்பந்தமானது. இதை விநியோகிக்கும் அதிகாரம் பூராவும் ஒரு அதிகாரியிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆதரைஸ்ட் ஆபீஸர் ஒரு கெஜட்டட் ஆபீஸராக இருப்பது என்பது உண்மை. விநியோகிப்பது எந்த அடிப்படையில், என்ன கொள்கைப்படி என்பதை விதிகளில் சேர்ப்பதற்கு அதிகாரம் எடுத்துக்கொண்டிருக்கிருர்கள். விநியோகிக்கும் அதிகாரத்தை ஒரு அதிகாரியிடம் கொடுத்து வைத்திருப்பது நன்மையா என்று யோசிக்க வேண்டும். அரசாங்கத்திற்கு சொந்தமான புறம்போக்கு நிலத்தை விநியோகம் செய்வதிலேயே எவ்வளவோ ஊழல்கள் ஏற்பட்டு, எவ்வளவோ அதிகாரிகள் வீட்டிற்கு போக நேர்ந்தது.

எவ்வளவோ அதிகாரிகள் ட்ரிப்யூனலுக்கு முன் போக நேர்ந்தது, என்பதை பார்த்திருக்கிறோம். அப்படியிருக்க, நன்றாக பக்குவப்படுத்தி சாகுபடிக்கு லாயக்காகவுள்ள நல்ல நிலம் கூட மிச்சம் வரலாம். எவ்வளவு கிடைக்கு மென்பது ஒரு பக்கத்தில் இருக்கட்டும். தோழர் பழனிசுவாமி அவர்கள் திருத்தப்படி, நிலம் விநியோகிப்பதில், சம்பந்தப்பட்ட கிராமத்தில் நிலம் இழந்தவர்கள் இருந்தால், குத்தகை சாகுபடி செய்து வந்த நிலத்தை இழந்திருந்தால் அப்படி நிலம் இழந்தவர்களுக்கு முன் பாத்தியதை கொடுக்கவேண்டும். அதை விதிகளில் சேர்க்கிறேன் என்று அமைச்சர் அவர்கள் சொன்னாலும் போதுமானது. இரண்டாவது உப பிரிவில் விதிகள் பிறப்பிக்கும் அதிகாரத்தை எடுத்துக்கொள்கிறார்கள், அரசாங்கம். இது விதிகளில் சேர்க்கப்படுமென்று உறுதி கூறினால் அது போதுமானது. எனது திருத்தத்தின் நோக்கம், மேலும், நிலம் கொடுத்து பிறகு அந்த நிலத்திலிருந்து சாகுபடியாளர்களை வெளியேற்ற வேண்டுமானால் அதற்கு என்ன நிபந்தனை ? கொடுக்கக்கூடிய அதிகாரம் ஒரு அதிகாரியிடமும், வெளியேற்றக்கூடிய அதிகாரமும் அவரிடமே இருக்கிறது. அப்படி அவர் இஷ்டப்படி கொடுக்கலாம், இஷ்டப்படி வெளியேற்றலாம் என்றிருந்தால் அது எவ்வளவு ஆபத்தானது என்று பார்க்கவேண்டும். அது எவ்வளவு ஊழல்களுக்கு இடம் கொடுக்குமென்று பார்க்க வேண்டும். அந்த அதிகாரி ஒரு சர்வாதிகாரியாக ஆகிவிடுகிறார் இந்த நிலம் சம்பந்தப்பட்ட மட்டில். வெளியேற்ற வேண்டுமென்று சொன்னாலும் காரணம் இருக்க வேண்டும், ஆட்சேபணை கேட்கவேண்டும், அது சட்டத்திலே இல்லை. அமைச்சர் அவர்கள் சொல்லலாம் விதிகள் பிறப்பிக்கும்போது இதை கணக்கில் எடுத்துக் கொள்கிறோம் என்று. வெளியேற்றக்கூடிய முறை எப்படி இருக்க, வேண்டுமென்பதை விதிகளில் சொல்வோம் என்று கூறலாம். வெளி யேற்றுவதற்கு முன் சம்பந்தப்பட்ட அதிகாரி குடியானவருக்கு நோட்டீஸ் கொடுத்து அவர் சமாதானத்தைக் கேட்டு பிறகு முடிவு எடுக்கவேண்டும் என்பது என் ப்ரொவைஸோவின் நோக்கம். அதனால் அரசாங்கம் எடுத் துக்கொள்ளும் அதிகாரத்திற்கும் முரண்பாடு ஏற்படாது. அது அரசாங்கத்தின் அதிகாரத்தை விளக்குவதாயிருக்கும். வார்த்தைகளை வேண்டுமானால் திருத்திக்கொண்டு எனது திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

*SRI R. SRINIVASA IYER : 64-வது பிரிவிற்கு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. நானும் ஒரு திருத்தம் கொடுத்திருந்தேன். பிரேரேபிக்காத காரணம், 2-வது பிரிவுபடி ரூல்ஸ் போடுவதற்கு வழி இருக்கிறதென்று நினைத்து சொன்னேன். பின்னால் யோசித்துப் பார்க்கும் போது 64 (1)-படி—

"*Clause* 64 (1) : The authorized officer shall distribute possession of the land, the possession of which he has taken under Section 62, to the landless persons or to persons holding land below the cultivating tenant's ceiling area."

இதில் இரண்டு ஆசாமிகளை குறிப்பிட்டாய்விட்டது. To this must be added "or to such other person or persons as may be prescribed" என்று நான் திருத்தம் கொடுத்திருந்தேன். நிலம் இல்லாத விவசாயிகளுக்கும் கொடுக்க வழியிருக்கவேண்டும். "to the landless persons or to persons holding land below the cultivating tenant's ceiling area" என்றுதான் இருக்கிறது. வேறு யாராவது இருந் தாலும் கொடுக்கலாம் என்று செய்ய வேண்டும். ஆனால் 347-வது திருத்தத்தைப்பார்த்தால் இதிலுள்ள விஷயங்கள் செக்ஷன் 63-ல் வரு கிறது. கல்யாணசுந்தரம் அவர்கள் கொடுத்திருக்கின்ற திருத்தமானது, (குறுக்கீடு) நல்லது, ஆம் 63-ல் சொல்லவில்லை 62-ல் சொல்லப்பட்டிருக் கிறது. பொஸஷனை எப்படி எடுத்துக்கொள்வது எவ்வாறு நோட்டீஸ் கொடுப்பது என்பதைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது அமென் மெண்டில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்த்தால், இன்னொரு மனிதனிடத் தில் நிலத்தை கொடுத்துவிட்ட பிறகு எப்படி எவிக்ட் பண்ணுவது,

11 a.m.

அதை எப்படி பாதுகாப்பது என்பதைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. 63-வது கிளாஸ் பிரகாரம் கவர்ன்மென்டே டெனன்டாக்கிவிடக் கூடும். ஆனுல் இப்போது 64-ல் கொடுத்திருக்கக் கூடிய திருத்தம் 62-ல் வந்து விடும். இன்னொருவருக்கு கொடுத்த பின்னுல் நிலத்திலிருந்து எப்படி ரென்ட் வசூல் பண்ணுவது அதில் ஏதாவது தகராறு ஏற்பட்டால் எப்படி எவிக்ட் பண்ணுவது என்பதைப்பற்றி யெல்லாம் ரூல்கள் இயற்றும்போது கவனித்துக்கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 63-ன் படி கவர்ன்மெண்டே டெனண்டாகிவிடுகிறது. அவ்விதம் டென்ன்டாகிவிடும் போது கல்டிவேட்டிங் டெனண்ட் ஆக்ட் பிரகாரம் எல்லா விதிகளும் இதற்கும் பொருந்தும்.

**The cultivating tenant will become another tenant under the Government. There are three categories; Landowner, Government becoming a tenant and Government having another sub-tenant under them. It is a new innovation in this State.** என்று வருவது ஒரு புதிய ரிலேஷன்ஷிப். இது நமது ஸ்டேட்டில் என்று தான் நூதனமாக இருக்கிறது. இப்போது கொடுக்கப்பட்டிருக்கும் திருத்தம் 64-வது பிரிவில் போட்டால் எப்படி பொருத்தம் என்று தெரிய வில்லே. 64-வது பிரிவில் யார் யாருக்கு எப்படி எப்படி கொடுப் பது என்பதைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. அதோடு 63-வது பிரகாரம் கவர்ன்மெண்ட் டெனன்ட் என்கிற உரிமையையும் பெறும். இதில் எந்தமாதிரியான முறைகள் எல்லாம் இருக்க வேண்டும் என்பதைப் பற்றி ரூல்ஸ் கொண்டு வரலாம் என்றும், இம்மாதிரியாக வரக் கூடிய ரூல்ஸ் எல்லாம் அசெம்பிளிக்கு முன்னுல் கொண்டுவரப்படும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி வரும்போது இதைப்பற்றி விரிவாக பரி சீலனே செய்வதற்கு சந்தர்ப்பம் இருக்கிறது. ஆகவே இப்போது இருப்பது போலவே இந்த 64-வது கிளாசை நிறைவேற்றலாம். இப்போது கொடுக் கப்பட்டிருக்கிற திருத்தம் முரணுகவும் இருக்கிறது.

**SRI G. ANNAMALAI MUTHURAJA:** டெபுடி ஸ்பீக்கர் ஸார், ஐந்து ஏக்கருக்கு மேலே குத்தகை சாகுபடி செய்பவர்களே இந்தச் சட்டத் தின்படி வெளியேற்றலாம் என்றிருக்கிறது. ஒரு குடும்பத்திற்கு ஐந்து ஏக்கர் என்று வரையறுக்கும்போது அது போதுமா என்பதையும் நாம் பார்க்கவேண்டும். ஒரு குடும்பம் என்றுல் நாலேந்து பேர்கள் இருப்பார் கள். அவர்கள் எல்லோரும் இந்த ஐந்து ஏக்கரை மட்டும் வைத்துக் கொண்டு காலட்சேபம் நடத்துவது மிகவும் கஷ்டம். சாதாரணமாக பாகம் பிரியாத ஒரு குடும்பத்தை எடுத்துக்கொண்டால் இதிலுள்ள வருமானத்தை வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்துவது மிகவும் கஷ்டமாயிருக்கும். . .

**DEPUTY SPEAKER:** இந்தப் பிரிவுக்கும் தங்களுடைய பேச்சுக்கும் சம்பந்தமில்லேயே . . .

**SRI G. ANNAMALAI MUTHURAJA:** நான் இதில் சொல்லவிரும்பு வது இப்போது ஐந்து ஏக்கர் என்று கொடுத்திருப்பது மிகவும் குறைவாக இருக்கிறது என்பதை சொல்வதற்காகத்தான். இதனுல் அதிகப்படியான விவசாயிகள் பாதிக்கப்படுவார்கள் என்பதை தெரிவித்துக்கொண்டு என் வார்த்தைகளே முடித்துக்கொள்கிறேன்.

***SRIMATHI T. N. ANANDANAYAKI:** ஸார், கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் கொடுத்திருக்கின்ற திருத்தம் அனுவசியமானது என்பதை எனக்கு முன்னுல் விளக்கிச் சொல்லப்பட்டது. 64-ல் கொடுத்திருக்கக் கூடிய திருத்தம் 62-லேயே வந்துவிட்டது . . .

DEPUTY SPEAKER: The hon. Member is repeating the same points put forward by the hon. Member Sri R. Srinivasa Iyer. What is the use in it?

27th September 1961]

**SRIMATHI T. N. ANANDANAYAKI** : கிளாஸ் 62-ல், " **either to the landless poor or to the cultivating tenant below the ceiling area** " என்று போடப்பட்டிருக்கிறது. 64-ல் ஆதரைஸ்ட் ஆபீஸர் எவ்விதம் பிரித்துக் கொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி எல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் 'நெப்பாடிஸம்' இருப்பதற்கு எந்தவிதமான இடமும் இல்லை. மேலும் இதில் ஏதாவது தவறுதல்கள் நடந்தாலும் அது அரசாங்கத்தைத்தான் சாரும். ரூல்ஸ் அமைக்கும்போது இதில்—

" We shall show preference to the landless poor first and then to the cultivating tenant below the ceiling area." என்றிருந்தால் வரவேற்கத் தக்கதாய் இருக்கும்.

In Clause 64, it is stated—' The authorised officer shall distribute possession of the land, the possesion of which he has taken under section 62, to the landless persons *or* to persons holding land below the cultivating tenant's ceiling area.' Here the word ' or ' will not indicate preference to the landless poor.

**We must make it clear that preference will be shown to the landless poor.** இவ்விதம் இல்லாவிட்டால் யார் யாருக்கு அதிகாரம் என்பதில் பல தகராறுகள் வரும். ஆகவே இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் விளக்கிச் சொன்னால் நன்றாக இருக்கும். **We must specifically state that we shall show preference to the landless poor first and then only to cultivating tenants.** இதை விளக்கிச் சொன்னால் தான் பின்னால் எந்தவிதமான கஷ்டமும் இல்லாமல் இருக்கும். **'Either in the rules or through special instructions, we must indicate that preference shall be given to the landless poor and then only to the cultivating tenants below the ceiling area'** என்பது தான் என்னுடைய யோசனை.

* **THE HON. SRI M. A. MANICKAVELU** : இதில் ப்ரஃபரன்ஸ் என்பதை எடுத்துக் கொண்டு பார்த்தால் விவசாயம் குறைவாக செய்யக் கூடியவர்களைத்தான் குறிப்பிட்டிருக்கிறோம். மேலும் " லாண்ட்லஸ் பெர்ஸன் " என்றும் குறிப்பிட்டிருக்கிறோம். இதை விரிவாக போட்டிருக்கிறோம். யார் முதலில் வருவது என்றால், நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள் முதலில், மூன்று ஏக்கருக்கு குறைவாக இருக்கிறவர்கள் இரண்டாவது, அதற்கு பிற்பாடு படிப்படியாக வரும். நிலத்திலிருந்து நோட்டீஸ் கொடுத்து எப்படி வெளியேற்றுவது என்பதைப்பற்றி இரண்டாவது சப்-கிளாஸில் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற விஷயங்களை எல்லாம் ரூல்-ஸில் போடலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எப்போது இதைக் கொடுப்பது, எந்த அக்ரிகல்சர் வருஷத்தில் இதை எடுப்பது என்கிற விவரங்களை எல்லாம் இதில் போட முடியாது. ஆகவே இந்தத் திருத்தம் அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

DEPUTY SPEAKER : As the hon. Member Sri M. Kalyanasundaram is not in his seat, his amendment is deemed to have been withdrawn.

Proposed Clause 64 was put and carried.

Proposed Clauses 65 to 67 were put and carried.

*Proposed Clause* 68.

DEPUTY SPEAKER : The question is—

" That the proposed clause 68 do stand part of the Bill."

Hon. Member Sri N. K. Palanisami has given me an amendment just now. He may move it. I would like the hon. Member to read his amendment as it has not been circulated to the Members.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

' After clause 68 *insert* the following as new clause 68-A :—

"(1) A cultivating tenant on land not resumed and on land declared to be surplus shall be given permanent occupancy rights and a fair-rent of 25 per cent in the case of nanjai lands and 16½ per cent in the case of punjai lands collected from such cutivating tenant subject to tenant's ceiling limit.

(2) A person who pays to the Government fair-rent regularly for a period of twelve years shall be entitled to become the owner of the land after that period." '

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

* SRI N. K. PALANISAMI : கனம் சபைத் தலைவர் அவர்களே, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத்தைப் பற்றி பரிசீலனை செய்யும் காலத்தில் ஏற்கெனவேயே குத்தகை விவசாயிகளுக்கு அதிகச் செலவு ஆகிறது, ஆகையால் இப்போது இருக்கும் சட்டம் போதாது, குறைந்தபட்சம் 5-ல் ஒரு பங்காவது, 6-ல் ஒரு பங்காவது குத்தகைத் தொகையைக் குறைக்கவேண்டும் என்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது. அதன்படி குஜராத், மஹாராஷ்டிரா, ராஜஸ்தான் போன்ற பல மாகாணங்களிலே 6-ல் ஒரு பங்காகவும், அஸ்ஸாம், கேரளா ஆகிய மாகாணங்களிலே 4-ல் ஒரு பங்காகவும் குறைக்கப்பட்டிருக்கிறது. இங்கு மாத்திரம் 60–40 என்று இருக்கிறது. ஆகவே இதை குறைந்தபட்சம் 4-ல் ஒரு பங்காகக் குறைக்கவேண்டும். பர்ஸனல் கல்டிவேஷனுக்கு ரிஸம்ப்ஷன் வரும்போது குத்தகைதாரர்களை வெளியேற்றக் கூடாது, அது மட்டுமல்லாமல் 12 வருஷம் அந்த பூமியை அவர்களுக்கே உரிமை கொடுத்து விட்டு குத்தகைதாரர்களை ஓனராக நியமித்து விட்டு, 20 வருஷ காலத்தில் என்ன விலை ஆகிறதோ அதை கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் கொடுத்து ஓனர்ஷிப் கொடுக்கவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இது இரண்டாவது திட்டத்திலும் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. மூன்றாவது திட்டத்தில் இதை நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஓனர்ஷிப் அவசியம் வேண்டுமென்று சொல்லிவிட்டு, அதாவது 2277-ம் பக்கத்தில் தேர்ட் ஃபைவ் இயர் ப்ளான் என்ற புத்தகத்தில் "Security of tenure and reduction of rents are the first stage in tenancy reform ; the goal is to confer rights of ownership on as large a body of tenants as possible. In the Second Plan it was suggested that each State should have a programme for converting tenants of nonresumable areas into owners and putting an end to vestiges of the landlord-tenant relationship. It was urged that instead of optional rights to tenants to purchase lands cultivated by them, all tenants of non-resumable areas should be brought into direct relationship with the State." என்று சொல்லிவிட்டு . . .

27th September 1961]

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, on a point of order. I am not able to understand how the hon. Member can speak on his amendment now when we are considering Clause 68 under the heading " Landowner's right to resume under Madras Act XXV of 1955 not affected."

DEPUTY SPEAKER : The hon. Member has proposed a New Clause 68-A and I have allowed him to speak on it. I have not yet put Clause 68 to vote. I should have put Clause 68 first . . .

SRI R. SRINIVASA IYER : Sir, the amendment has not been circulated.

DEPUTY SPEAKER : Yes, I have told the House that it has not been circulated.

SRI N. K. PALANISAMI : ஏற்கெனவே இந்த மசோதாவைப் பிரேரேபிக்கும்போது கனம் அமைச்சர் சொன்னார்கள், ஓனர்ஷிப் பற்றி ரூல்ஸிலே செய்யப்போகிறோம் என்று. அதைப் பற்றி இதிலே ஒரு வார்த்தை கூட இல்லை. இதை அடிப்படையாகச் செய்யவேண்டுமென்று திட்டத்தில் இருக்கிறது. திட்டத்தில் ஒரு விதமாகவும் நடைமுறையில் ஒரு விதமாகவும் இருக்கிறது. இவர்கள் திட்டத்தை நிறைவேற்றுவது எந்த முறையில் இருக்கிறது என்பது இதிலிருந்தே தெரிகிறது. பல மாகாணங்களில் ஓனர்ஷிப் ரைட் கொடுக்கப்பட்டிருக்கிறது. இங்கேயும் ஓனர்ஷிப் ரைட் கொடுப்பதாகச் சொல்லி விட்டு, அதைப்பற்றி ஒரு வார்த்தை கூட இல்லாமல் இருப்பது வருத்தப்படவேண்டியதாக இருக்கிறது. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

*SRI R. SRINIVASA IYER : 68-A கிளாஸை தலைவர் அவர்கள் அனுமதித்தாலும் கூட, இது இந்த 8-வது சாப்டருக்கு விரோதமானது. ஆகையால் இதை எதிர்க்கின்ற முறையிலே சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். செலக்ட் கமிட்டிக்குப் போகும் முன்னால் முதன் முதலாக . . .

SRI A. GOVINDASAMY : On a point of order, " தலைவர் அவர்கள் அனுமதித்தாலும் கூட " என்று சொல்லுவது, அனுமதித்தது தவறு என்று குறிப்பிடுவதாக இருக்கிறது. அது சரியா என்று கேட்க விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member has not meant any disrespect to the Chair.

SRI R. SRINIVASA IYER : அந்தத் திருத்தம் ஸர்க்குலேட் ஆகாததால் இந்த சாப்டருக்கு முரணானது, அனுமதிக்கக் கூடாதது என்று ஆக்ஷேபிக்க எனக்கு சந்தர்ப்பம் இல்லையாகிலும் கனம் தலைவர் அவர்கள் சொன்னதைத் தலை வணங்கி ஒப்புக்கொண்டு, அந்தத் திருத்தத்தைச் செய்யக்கூடாது என்று சொல்ல வருகிறேன் என்று சொன்னதற்கு ஆட்சேபணை சொல்லி, அதை இன்னும் நன்றாக வற்புறுத்திச் சொல்வதற்கு எனக்கு சந்தர்ப்பம் கொடுத்ததற்காக அந்த அங்கத்தினருக்கு நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

பர்மனென்ட் ஆக்குபென்ஸி டெனென்ட்ஸ் ஜமீன் அல்லது இனாமில் இருக்கலாம். முதலில் போட்ட மசோதாவிலே டெனன்டை லைஃப் டெனென்ட்ஸ்-ஆகப் போட்டோம். அவர்கள் மட்டுமல்ல, வாரிசுகளுக்குக்கூட லைப் டெனென்ஸி இருக்கவேண்டும் என்று போட்டோம்.

டெனென்ட்ஸ் சம்பந்தப்பட்ட வரையில் காம்ப்ரஹென்ஸிவ் லெஜிஸ்லேஷன் கொண்டுவரலாம் என்று ஒப்புக்கொண்டு சில திருத்தங்கள் கொடுத்து சேப்டரையே மாற்றி விட்டோம். மாற்றியதன் விளைவைப் பார்க்கும்போது லாண்ட்லார்ட்ஸும் வரவேற்கக் கூடியது இந்தப் புதிய மாற்றம். ஏற்கெனவே இருக்கக்கூடிய ஆக்ட் 25 ஆஃப் 1955-ஐயும் பாதிக்கவில்லை. கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் 60—40 என்று இருப்பதை 25-ஆகக் கொண்டுவரவேண்டும் என்று சொல்லி **Third Five-Year Plan** புஸ்தகத்திலிருந்து ஒரு சில வார்த்தைகளைப் படித்துக் காட்டினார்கள். அதே புஸ்தகத்தில் சிறு நிலச்சுவாந்தார்களுக்கு சொந்த சாகுபடிக்கு நிலம் எடுத்துக்கொள்ளும் உரிமை வழங்கப்பட வேண்டுமென்றும் அதை அவர்கள் பிறருக்கு குத்தகைக்கு விட உரிமை இருக்கவேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறதே அதையும் கூட அவர் படித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 60—40 என்று இருப்பதை 25-ஆகக் கொண்டுவரவேண்டுமா, 15 ஆகக் கொண்டுவர வேண்டுமா அல்லது 50 ஆகக் கொண்டுவர வேண்டுமா என்பது ஒருபுறம் இருக்கட்டும். அநேக இடங்களில் 60—40 என்ற அடிப்படையில் ஒழுங்காக வாங்கிக்கொண்டு வருகிறார்கள். அதாவது கிடைத்தால் போதும் என்று நினைக்கிறார்கள். 25 என்று பண்ண வேண்டுமானால் வேறு என்ன வெல்லாமோ வரவேண்டும். அவர்களை சொந்தக்காரர்களாகச் செய்ய வேண்டுமென்று சொன்னார். மணிப்பூர், கேரளா, ஒரிஸா ஆக்ட்களில் குடியானவன் காம்பென்ஸேஷனை 10 அல்லது 12 அல்லது 20 வருஷங்களில் சொல்ப வட்டியுடன் திருப்பிக் கொடுத்தால் ஓனர்ஷிப் டிக்ளேர் செய்து விடலாம் என்று இருக்கிறது. இதிலே விலையைக் கூட ஆதரைஸ்ட் ஆஃபீஸர் நிர்ணயம் பண்ணலாம் அல்லது லாண்ட் ட்ரிப்யூனல் நிர்ணயம் பண்ணலாம் என்று இருக்கிறது. கன்ஸாலிடேட்டெட் ஃபண்ட் ஆஃப் தி ஸ்டேட்டிலிருந்து குறைந்த காம்பென்ஸெஷன் கொடுத்து நிலத்தை வாங்கி விட்டு அதை பிறருக்கு இனமாகக் கொடுப்பது சரியல்ல, நியாயமுமல்ல. குடியானவனுக்கும் சொந்தமாகக் கிரயம் கொடுத்து வாங்கினால்தான் நல்ல முறையில் பயிர் செய்ய ஊக்கம் ஏற்படும். உபரி நிலத்தை கொடுத்த சொந்தக்காரருக்கு சர்க்கார் கஜானாவிலிருந்து சரிவர பணமும் கிடைத்துவிடும். சர்க்காருக்கும் நஷ்டமில்லாமல் நஷ்ட ஈட்டுப்பணம் வசூலாகிவிடும். குடியானவனிடமிருந்து மார்ச் மாதம் 31-ம் தேதியன்று மணியக்காரர் லாண்ட் ரெவனியூ மாதிரி கண்டிப்பாக வசூல் செய்து விடுவார். ஒரு பக்கம் இடைஞ்சல், ஒரு பக்கம் நல்லது. நான் டெனன்டுக்கு ஓனர்ஷிப் பற்றி திருத்தம் கொடுத்தேன். அது ஒப்புக்கொள்ளப்பட வில்லை. போனால்போகட்டும். ஓனர்ஷிப் சம்பந்தப்பட்ட மட்டில் காம்ப்ரஹென்ஸிவ் லெஜிஸ்லேஷனில் செய்வதாக எல்லோருக்கும் கொள்கை. அந்த முறையில் இப்போது அவர்கள் கொடுத்திருக்கிற திருத்தம் அவசியமில்லை. அதை இந்த சேப்டரில் கொண்டுவரக் கூடாது. பின்னால் காம்ப்ரஹென்ஸிவ் லெஜிஸ்லேஷனில் என்னென்ன செய்யப்போகிறோம் என்று சொன்னபிறகு இதற்கு அவசியமில்லை என்று சொல்லிக்கொள்கிறேன்.

**THE HON. SRI M. A. MANICKAVELU** : ஸார், இந்த கிளாஸ் 68-லே "**Land owner's right to resume**" என்றிருக்கிறது. அதோடு இன்னும் **68-A** என்று புதிதாக ஒரு சமாசாரத்தைக் கொண்டு வந்து இதிலே புகுத்தப்பட்டிருக்கிறது. நாம் ஏற்கனவே இருக்கிற ஆக்டிலே வெளியேற்றப்படக் கூடாது என்று செய்திருக்கின்றோம். ஆனால் இவர் பேர் ரெண்ட், 60 : 40 என்ற விஷயங்களையெல்லாம் கொண்டு வந்து, சாகுபடியாளரை சொந்தக்காரர்களாக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். இதிலே அது வரவில்லை. டெனன்ஸி லெஜிஸ்லேஷன் வரக்கூடிய காலத்திலே 10 வருஷத்திற்குள் கொடுக்கவேண்டுமா, 20 வருஷத்திற்குள் கொடுக்க வேண்டுமா என்பதையெல்லாம் அப்போது தான் நிர்ணயம் செய்ய வேண்டும். இந்த ஆக்ட் இம்ப்ளிமென்டேஷன் ஆன பிற்பாடுதான் அந்தக் கட்டத்திற்கு போக முடியுமே தவிர,

தனியாக " ஏ " என்று ஒரு கிளாசைப் போட்டு, அதிலே சாகுபடியாளர்களை யெல்லாம் நிலத்தின் சொந்தக்காரர்கள் என்று ஆக்கி விட முடியாது. இதற்கும், அதற்கும் ஒருவித சம்பந்தமும் இல்லை. ஆகவே, இந்தத் திருத்தத்தை ஒத்துக்கொள்ள முடியாது.

The amendment to add a new Clause 68-A was put and lost.

Proposed Clause 68 was put and carried.

Proposed Clauses 69 to 72 were put and carried.

DEPUTY SPEAKER : The question is—

' Under Chapter VIII, for the heading " General provisions regarding tenancies" and clauses 59 to 69, *substitute* the following heading "Cultivating tenant's ceiling area" and the proposed Clauses 59 to 72.'

The amendment was put and carried.

DEPUTY SPEAKER : The amendments moved to the original clauses are out of order and they are not necessary because the Hiose has given its verdict on the new heading and clauses.

Now the Hon. Minister will move a motion for the reopening of clauses.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" That Clauses 3, 5, 7 and 40 be reopened."

The motion was put and carried and clauses 3, 5, 7 and 40 were reopened.

*Clause 3.*

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendments :—

' In sub-clause (24) of clause 3, *for* the expression " section 94 ", *substitute* the expression " section 97 ".'

' In sub-clause (26) of clause 3, *for* the expression " section 73 ", *substitute* the expression " section 76 ".'

' *Omit* sub-clause (35) and renumber sub-clauses (36) to (50) as amended, as sub-clauses (35) to (49) respectively.'

' In sub-clause (40) of clause 3, as renumbered, in Explanations I, II, III, V and V as amended, *for* the expression " clause (41)" wherever it occurs, substitute the expression "clause (40)".'

* SRI R. SRINIVASA IYER : இந்தத் திருத்தங்களை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இந்த 70 முதல் 109 என்று இருக்கிற கிளாஸ்களை, 73 முதல் 112 என்று முதலிலே திருத்தினால்தான், இப்போது 317, 318, 319, 320 என்று உள்ள திருத்தங்களில் சொல்லும் கிளாஸ்கள் சரியாக வரும். அதற்காகத்தான் 325-வது திருத்தத்தை முதலிலே பிரேரித்து முடித்து விட்டு, பிறகு இந்த 317, 318, 319, 320 என்பதை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டேன். ஏனென்று

கேட்டால், இந்தத் திருத்தங்கள் இப்போது நம்முடைய திருத்தங்களாக சொல்லப்படுகிறது. அதற்காகத்தான் 70 முதல் 109 என்று இப்போது இருக்கக்கூடியதை 73 முதல் 112 என்று சொன்னால்தான், பின்னாலே திருத்த முடியும்.

DEPUTY SPEAKER : I understand it. Let the Hon. Minister move his amendment relating to the renumbering of clauses.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

'Renumber Clauses 70 to 109 as Clauses 73 to 112 respectively.'

The amendment was put and carried.

The amendments to clause 3 were put and carried.

Clause 3 as amended was put and carried.

*Clause* 5.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendments :—

'In sub-clause (1) of clause 5, after the expression "sub-sections (4) and (5)" in the two places where it occurs, *insert* the expression "and of Chapter VIII".'

'In sub-clause (5) of clause 5, after the expression "in sub-section (4)", *insert* the expression "and in Chapter VIII".'

The amendments were put and carried.

Clause 5 as amended was put and carried.

*Clause* 7.

11-30 a.m.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 7, after the words "except as otherwise provided in this Act", *insert* the words "but subject to the provisions of Chapter VIII".

The amendment was put and carried.

Clause 7 as amended was put and carried.

*Clause* 40.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 40, in sub-clause (3), *for* the expression "Section 91", *substitute* the expression "Section 94".

The amendment was put and carried.

Clause 40 as amended was put and carried.

27th September 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" That the renumbered clauses 75, 78, 79, 80, 81, 82, 83, 85, 86, 90, 95, 108, 112 and Schedule III be reopened ".

DEPUTY SPEAKER : I think the House has no objection to the re-opening of the above renumbered clauses.

The question is—

" That the renumbered clauses 75, 78, 79, 80, 81, 82, 83, 85, 86, 90, 95, 108, 112 and Schedule III be reopened ".

The motion was put and carried.

*Renumbered Clause* 75.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 75 as renumbered, *for* the expression " Section 71 " in the two places where it occurs, *substitute* the expression " Section 74 ".

The amendment was put and carried.

Renumbered Clause 75, as amended, was put and carried.

*Renumbered Clause* 78.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 78 as renumbered, *for* the word, figures, brackets and letter " or 99 (2) (*b*) " *substitute* the figures, brackets, letters and word " 61 (3) (*b*) or 102 (2) (*b*) ".

The amendment was put and carried.

Renumbered Clause 78, as amended, was put and carried.

*Renumbered Clause* 79.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendments :—

In sub-clause (1) of clause 79 as renumbered, *for* the figures and brackets " 74 (2) " *substitute* the figures and brackets " 77 (2) ".

In the Explanation to sub-clause (2) of Clause 79 as renumbered *for* the expression " section 75 " *substitute* the expression " section 78 "

The amendments were put and carried.

Renumbered Clause 79, as amended, was put and carried.

*Renumbered Clause* 80.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 80 as renumbered, *for* the expression " section 75 or 76 ", in the two places where it occurs, *substitute* the expression " section 78 or 79 ".

The amendment was put and carried.

Renumbered Clause 80, as amended, was put and carried.

*Renumbered Clause* 81.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 81 as renumbered, *for* the figures, brackets, and word " 50 (5), (9), 60 (2), 65(1), (2) or 66 ", *substitute* the figures, brackets and word " 50 (5) or 50 (9) ".

The amendment was put and carried.

Renumbered Clause 82, as amended, was put and carried.

*Renumbered Clause* 82.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 82, as renumbered, *for* the figures, brackets and word " 18 (4) or 68(2) ", *substitute* the word, figures and brackets " or 18 (4) ".

The amendment was put and carried.

Renumbered Clause 82, as amended, was put and carried.

*Renumbered Clause* 83.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 83 as renumbered, *for* the expression " section 76 ", *substitute* the expression " section 79 ".

The amendment was put and carried.

Renumbered Clause 83, as amended, was put and carried.

*Renumbered Clause* 85.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 85 as renumbered, in sub-clause (1), *for* the expression "under sub-section (1) of section 9 or within the further time, if any, allowed by the authorized officer under that sub-section ", *substitute* the expression " under sub-section (1) of

27th September 1961] [Sri M. A. Manickavelu]

section 9 or under sub-section (2) of section 61 or within the further time, if any, allowed by the authorized officer under those sub-sections ".

The amendment was put and carried.

Renumbered Clause 85, as amended, was put and carried.

*Renumbered Clause* 86.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In Clause 86 as renumbered, *for* the expression ' section 99 ' in the two places where it occurs, *substitute* the expression ' section 102 '.

The amendment was put and carried.

Renumbered Clause 86, as amended, was put and carried.

*Renumbered Clause* 90.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In clause 90 as renumbered, *for* the words " lawfully taking possession of any land acquired by the Government under this Act ", *substitute* the words " lawfully taking possession of any land under any of the provisions of this Act ".

The amendment was put and carried.

Renumbered Clause 90, as amended, was put and carried.

*Renumbered Clause* 95.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In Clause 95 as renumbered *for* the expression ' clause (42) ' *substitute* the expression ' clause (40) '.

The amendment was put and carried.

Renumbered Clause 95, as amended, was put and carried.

*Renumbered Clause* 108.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment : —

In sub-clause (*b*) of Clause 108 as renumbered *for* the expression ' section 75 ' *substitute* the expression ' section 78 '.

In sub-clause (*c*) of Clause 108 as renumbered, *for* the expression " section 76 ", *substitute* the expression " section 79 ".

In sub-clause (*d*) of Clause 108 as renumbered, *for* the expressions " section 78 " and " section 79 ", *substitute* the expressions " section 81 " and " section 82 " respectively.

In sub-clause (*e*) of Clause 108 as renumbered, *for* the expression " section 80 ", *substitute* the expression " section 83 ".

The amendments were put and carried.

Renumbered Clause 108, as amended, was put and carried.

*Renumbered Clause* 112.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In Clause 112 as renumbered, *for* the expression " section 91 " in the two places where it occurs, *substitute* the expression " section 94 " and for the expression " section 108 " in the two places where it occurs, substitute the expression " section 111 ".

The amendment was put and carried.

Renumbered Clause 112, as amended, was put and carried.

*Schedule III.*

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

In Schedule III, in Part I,

(*a*) in the Explanation to paragraph 3,—

(i) in clause (*a*), *for* the expression " section 3 (42) ", *substitute* the expression " section 3 (40) " ;

(ii) in the Table under clause (*b*), in item (1), *for* the expression " clause (42) ", *substitute* the expression " clause (40) ".

(*b*) in paragraph 5, *for* the words " under personal cultivation ", *substitute* the words " cultivated by the owner ".

The amendment was put and carried.

Schedule III, as amended, was put and carried.

*Clause* 1 *and the Preamble.*

DEPUTY SPEAKER : The question is—

" That Clause 1 and the Preamble do stand part of the Bill ".

The amendment of Sri N. K. Palanisami to add a new clause is out of order. So I shall put Clause 1 and the Preamble to the vote of the House.

Clause 1 and the Preamble were put and carried.

DEPUTY SPEAKER : We can have the third reading of the Bill to-morrow. There are two other Bills, the Madras Local Authorities Finance Bill, 1961 and the Madras Estates (Supplementary) Amendment Bill, 1961. We can take them up now.

27th September 1961]

(2) THE MADRAS LOCAL AUTHORITIES FINANCE BILL, 1961 (L.A. BILL NO. 34 OF 1961).

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: Sir, I move—

"That the Madras Local Authorities Finance Bill, 1961 (L.A. Bill No. 34 of 1961) be taken into consideration."

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Madras Local Authorities Finance Bill, 1961 (L.A. Bill No. 34 of 1961) be taken into consideration."

SRI V. K. KOTHANDARAMAN: Sir, I move the following amendment:—

"That the Madras Local Authorities Finance Bill, 1961 (L.A. Bill No. 34 of 1961) be referred to a Select Committee."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER: The motion and the amendment are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், இந்த ஸ்தல ஸ்தாபன நிதி மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு விட வேண்டுமாக என் அபிப்பிராயத்தைக் கொடுத்திருக்கிறேன். காரணம், நமக்கு முன் உள்ள மசோதாவில் பிரதானமாக, குறிப்பாக இருப்பது, எண்டர்டெயின் மெண்ட் டாக்ஸுக்கு சர்சார்ஜ் விதிப்பதைப் பற்றிய விஷயம். இப்பொழுது சர்சார்ஜ் விதிக்க வேண்டும் என்று சொல்லப்படும் நேரத்திலே, அது மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட நிதிக்காக வசூலிக்க வேண்டிய பகுதிகளில் ஒரு பகுதி என்று நினைக்கிறேன். கார்ப்பொரேஷன், முனிசிபல் கவுன்சில், டௌன்ஷிப், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் இவை சர்சார்ஜ் விதிக்கும்போது, எல்லா ஸ்தாபனங்களும் ஏககாலத்தில் விதிக்கும் என்ற முறை இல்லை என்று நினைக்கிறேன். ஆகவே, இந்த நிலையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் சர்சார்ஜ் விதித்தும், ஒரு சில இடங்களில் விதிக்காமலும் விட்டு விட்டால், அது குழப்பத்தைத்தான் ஏற்படுத்தும். ஆகவே தான்—அந்த மாதிரி சர்சார்ஜ் போடக்கூடாது என்று சொல்லவில்லை—இந்த சர்சார்ஜ் என்பதை எந்த அடிப்படையில் போடவேண்டும் என்பதையெல்லாம் தீர்க்கமாக பரிசீலனை செய்து கொண்டு வரவேண்டுமென்பதுதான் இதை செலக்ட் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும் என்பதற்குக் காரணம். அதே போலச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI R. SRINIVASA IYER: Sir, this legislation is welcome, though it has been brought forward after some delay. Act XXXV of 1958 was passed in 1958 and that has come into force from January 1960 and all the Panchayats and Local authorities have been complaining that their resources are not enough. That has been recognised by the Government now. The method of increasing the resources for the purpose of providing essential civic amenities such as good roads, lighting, sanitation and protected water-supply in a satisfactory manner is now envisaged. The hon. Member Sri Kothandaraman says that the Bill should be referred to a Select Committee. Sir, it is not necessary. Because, the Local Authority concerned is given the discretion to levy the tax.

[Sri R. Srinivasa Iyer] [27th September 1961

They cannot complain that the Government have not given them enough finance and at the same time refuse to levy this tax when an opportunity to levy this tax is given to them Sections 115 and 116 of the Act XXXV provide for the levy of a surcharge on land revenue. Now, when additional revenue is necessary for them, the Government have to find out ways and means to augment the financial resources of the local bodies. The items on which additional tax can be levied are also found in Clause 3. Sir, it is proper that discretion should be given. It is not necessary that they should compulsorily levy these taxes. If they can invite shows and entertainments without levying any additional taxes, let them do so.

In this connexion, I also wish to refer to another matter. I have always been suggesting that the Motor Vehicles Taxation Act has got to be amended. When the Government are trying to augment the finances of the Local Bodies, this suggestion also deserves to be considered. When the Tolls were abolished, the tax collected from the motor cars, lorries and buses that was the criterion for giving aid to the municipal authorities. From 1931 to 1961 in these 30 years—we have increased the number of motor vehicles and the tax. The number of vehicles has also been increasing. During the Third Plan period, we will have three lakhs of motor vehicles. It is proper that the Motor Vehicles Act is also amended suitably. The distribution of funds should also be done in an equitable way. Because, there are certain local authorities which have long distances of roads to maintain and some of them have very good roads, connecting big towns and municipalities like Madurai, Tiruchirappalli, Tanjore, Coimbatore, Salem, etc. In such cases, the panchayat unions will have the maximum distance of roads to maintain. They will find it very difficult to undertake this work with the '40 naye Paise per head of population' grant. It is proper that the road development fund available with the Government should be distributed on a mileage basis. Even the panchayat unions which had very good roads within their jurisdiction will find it difficult to maintain these good roads with the present allotment. Some of the backward areas will find it difficult to maintain the roads for want of funds. In the first two Plan periods, we have laid large extents of new roads and we have also formed metalled roads. If they are not provided with enough funds for the maintenance of these roads laid in the past 10 years, all those roads will become non-existent. We have a 20-Year Plan for laying more and more roads and also metalling them so that a metalled road will be available within one mile's radius from every village, and every village will have a good village road. Whatever it is, they must first and foremost try to maintain the existing roads in a proper condition and for this purpose they must have sufficient funds.

We must also have a larger share from the Income-tax and Petrol Cess for the development of our roads. Even now, some

27th September 1961] [Sri R. Srinivasa Iyer]

foreign Associations are giving several crores for India for the development of certain roads and we expected that the Madras—Bangalore road will also benefit from the same. But, unfortunately; that has been omitted and has not received adequate attention. We must try to get a higher share from all these things. Now, sales-tax in respect of certain items is taken away by the Central Government (though they are guaranteeing to make good the loss) by the introduction of the Excise Duty in respect of those items. We must be careful in trying to get larger share from this levy also and also by the proper administration of the Sales-Tax Act. As I said already, the distribution should be made on the mileage basis in respect of the roads maintained by the panchayat union councils. This small Bill need not go before a Select Committee as the object of the Bill is laudable and useful. Hence, it should be passed as quickly as possible.

**Sri A. GOVINDASAMY :** கனம் தலைவர் அவர்களே, ஸ்தல ஸ்தாபனங்கள் தங்களுடைய வருவாயைப் பெருக்கிக்கொள்ளும் பொருட்டு சிலவரிகள் விதித்துக்கொள்ளலாம் என்ற நிலைமையில் இந்த மசோதா இங்கு கொண்டுவரப்படுகிறது. களியாட்டத்திற்கு மேலும் வரிபோடுகின்ற நிலைமை இதில் வருகிறது. இந்த மசோதா அவசர அவசரமாக இப்போது நிறைவேற்றினால் எதிர்காலத்தில் சில சிக்கல்கள் ஏற்படும் என்ற காரணத்தினால் இதைப் பொறுக்கு கமிட்டிக்கு விட்டு, பரிசிலனைசெய்யவேண்டுமென்று நாங்கள் கருதுகிறோம். பொறுக்குக் கமிட்டியில் ஒன்றிரண்டு நாட்கள் பரிசீலனை செய்து, வருகிற நவம்பர் கூட்டத்திலேகூட இந்த மசோதாவைச் சட்டமாக்கிவிடலாம். அப்படிச் செய்தால், இதனால் நல்ல விளைவுகள் ஏற்படும் என்ற காரணத்தால்தான் இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்குப் போக வேண்டுமென்ற கருத்தை நாங்கள் ஒத்துக்கொள்கிறோம்.

அது மட்டுமல்ல. என்டர்டெயின்மெண்ட்ஸ் டாக்ஸ் ஆக்டில் 4-ஏ பிரிவில் கண்டுள்ள விகிதத்தைவிட மூன்று மடங்கு கூட வரி விதிக்க "லோகல் அதாரிடி" க்கு அதிகாரம் தரப்படுகிறது. இந்த மசோதாவில் அவர்கள் நினைக்கிறபடி வரி போடுவதற்கு வேண்டிய ஒரு ஷரத்து இதிலே இருக்கிற காரணத்தால்தான் இதைக் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

பஞ்சாயத்துக்களுக்கு எந்த அளவு நிதி கொடுத்து உதவ முடியுமோ அந்த அளவுக்குச் சர்க்காரே கொடுக்க முன் வரவேண்டும். அது மாத்திரமல்லாமல், பஞ்சாயத்து யூனியனுக்கு இந்த அதிகாரத்தைக் கொடுக்கும் போது, சில பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் மீது, சில உறுப்பினர்கள் மீது அதிருப்தி ஏற்படும் சூழ்நிலை ஏற்படக்கூடும். ஆகையால், சர்க்காரே வரி விதித்து, அதன் மூலம் வரும் தொகையில் பங்குத்தொகை லோகல் அதாரிடிக்குக் கொடுக்க முன் வரலாம். அது மாத்திரமல்ல. முனிசிபாலிட்டிக்கும் கார்ப்பரேஷனுக்கும் கொடுக்க வேண்டிய தொகை சர்க்காரிடமிருந்து உரிய காலத்தில் கொடுக்கப்படாததன் காரணமாக, ரோடு போடும் வேலை, சுகாதார வசதி செய்வது,–இன்னும் மற்ற பல சௌகரியங்கள் செய்வதிலே கூட தடை ஏற்பட்டியிருக்கிறது என்பது உண்மைதான். சர்க்கார் பணம் கொடுப்பதிலே காலதாமதம் தவிர்க்கப்பட வேண்டும். சர்க்கார் பல வரிகள் போடுவதால், கார்ப்பரேஷனுக்கு உதவி செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சொத்து வரியை 20 சதவிகிதத்திலிருந்து 30 சதவிகிதத்துக்கு உயர்த்துவதனால் பாதகம் ஏற்படுமா, அதனால் எவ்வளவு வருமானம் என்பதை ஆர அமர சிந்தித்து முடிவு செய்ய வேண்டும். நவம்பர் மாதத்தில் ஒரு நாள், இரண்டு நாள் கூடி இதைப் பரிசீலனை செய்து கொள்ளலாம் என்ற காரணத்தால், இதை செலக்ட் கமிட்டிக்கு விட வேண்டுமென்ற கருத்தை நானும் ஆதரிக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதா ஏற்கனவே விதித்திருக்கக்கூடிய தமாஷாவரியை அதிகரிப்பதற்கு முயற்சிக்கிறது. புதிதாக நியமிக்கப்பட்ட பஞ்சாயத்து யூனியன்களுக்குப் பண வசதி செய்து கொடுக்க வேண்டும் என்ற பிரச்னை ஒன்று. அது தனி. ஆனால், இந்த மசோதாவின் நோக்கம் என்ன ? பஞ்சாயத்து யூனியன்கள், நகரசபைகள், சென்னை கார்ப்பரேஷன் இன்னும் ஏற்கனவே உள்ள டவுன்ஷிப்கள் இவைகளுக்கு வரி விதிக்கும் அதிகாரங்கள் தரப்பட்டுள்ளன. மூன்று டவுன்ஷிப்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மற்றவையும் சேர்க்கப்படும் என்று நினைக்கிறேன்—திருத்தங்கள் மூலம். டவுன்ஷப், பஞ்சாயத்து யூனியன் இவையெல்லாம் இரண்டு வகையாக வரியை உயர்த்தலாம். ஒவ்வொரு பிரதேசத்தில் விதிக்கக்கூடிய வரி மீது மேல் வரி, சர்ச்சாஜ் என்ற முறையில் போட்டு வசூலிக்கலாம். சினிமாப் படக் காட்சி ஒவ்வொன்றுக்கும், மொத்தமாக இவ்வளவு தொகை என்று ஒரு தொகை நிர்ணயிக்கலாம். (கனம் ஸ்ரீ சுப்பிரமணியம் : குறுக்கீடு) " டாக்ஸ் ஆன் ஈச் ஷோ ஆப் ஸினிமாடோக்ராப் எக்ஸிபிஷன் " என்று இருக்கிறது. " ஈச் ஷோ " என்று போட்டிருக்கிறது. ஷோ டாக்ஸ் இருக்கிறது. புதிது என்று சொல்லவில்லை. ஒவ்வொரு காட்சிக்கும் இவ்வளவு வரி என்று விதிக்கலாம், இரண்டையும் விதிக்கலாம், ஒன்றை மட்டும் விதிக்கலாம், இரண்டையும் விதிக்காமல் இருக்கலாம், புதிதாக விதிக்காலம், இருப்பதை ரத்து செய்யலாம். சில காட்சிகளுக்கு விதிவிலக்குக் கொடுக்கலாம் என்று பின்னால் பிரிவுகள் வருகின்றன. இதிலே எதிர்பார்ப்பவர்களுக்கு என்ன வரும் என்பதைப் பார்க்க வேண்டும். சில பஞ்சாயத்து யூனியன்கள் தங்கள் எல்லைக்குள்ளே டூரிங் சினிமாக் கொட்டகை வந்தால் வருமானம் அவர்களுக்குக் கிடைக்கும் என்பதிலே ஆர்வத்தோடு இருக்கிறார்கள். ஏற்கனவே இருக்கும் எண்டர்டெயின்மெண்ட் டாக்ஸில் அவர்களுக்குப் பங்கு கிடைக்க வேண்டும் என்பதற்காக ஒரு பஞ்சாயத்துக்கும் இன்னொரு பஞ்சாயத்துக்கும், நகர சபைக்கும் கூட எல்லை சம்பந்தமாகப் போட்டி வந்து, இந்தப் பிரச்னைகளெல்லாம் மாவட்ட வளர்ச்சி மன்றங்கள் முன்பும் கன்ஸல்டேடிவ் கமிட்டி முன்பும் வந்து, எப்படி பங்கு போடலாம் என்பதை விவாதித்துக் கொண்டிருக்கிறோம். இப்படி சர்ச்சார்ஜ் போடுவதற்கு உரிமை கொடுக்கிறபோது சில தொந்தரவுகள் வரும். அந்தப் பஞ்சாயத்துக்களுக்கு வரக்கூடிய உபரி வரியும், ஷோ டாக்சும் குறையுமா ? அல்லது அதன் நிலைமை என்ன என்பது தெளிவாக வேண்டும். இப்படியெல்லாம் ஒன்றுக்கொன்று மோதல் ஏற்படும். நான் தாமாஷா வரி கூடாது என்று சொல்ல வரவில்லை. இன்றைய தினம் பஸ் தொழிலுக்கும், சினிமாவுக்கும் அதிக வரி விதிப்பது பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை. தமாஷா வரி மூலம் நமக்கு 1958–59-இல் ஒரு கோடியே எழுபது லட்சம் ரூபாய் வந்திருக்கிறது. 1959–60-ல் ஒரு கோடியே எண்பத்தோரு லட்சம் ரூபாய் வந்திருக்கிறது. நடப்பு வருஷத்தில் கிட்டதட்ட ஒரு கோடியே தொண்ணூற்றெட்டு லட்சம் வரும் என்று எஸ்டிமெட் போடப்பட்டிருக்கிறது. கிட்டத்தட்ட 2 கோடி அளவுக்கு எதிர்ப்பார்க்கப்படுகிறது. ஆனால், இந்த வரியும் கூட பூராவாக வசூலிக்கப்படுவதாகச் சொல்ல முடியாது. இந்த வரியை ஏமாற்ற பல சூழ்ச்சிகள் கையாளப்படுகின்றன. அதிகாரியும் சரி, சினிமாக் கொட்டகைக்காரர்களும் சரி சேர்ந்து கொண்டு அரசாங்கத்தை ஏமாற்றுவதற்கான புகார் அரசாங்கத்திற்கு வந்து, அதை விசாரிக்க ஒரு அதிகாரியையும் போட்டு அவர் திடீரென்று ஷோவுக்குப் போன போது 400 பேர்கள் உட்கார்ந்து பார்த்த கொட்டகையில் எட்டே எட்டு முத்திரை டிக்கட் விற்கப்பட்டிருக்கிறது என்பதான விவரங்கள் எல்லாம் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு வந்திருக்கும் என்று நினைக்கிறேன். ஏற்கெனவேயிருக்கிற விகிதாச்சாரப்படியே இந்த வரியைச் சரியானபடி வசூலிக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். அப்போது இந்த இரண்டு கோடிக்கு அதிகமாகவே வசூலாகும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். இன்னும் விகிதாச்சாரத்தை உயர்த்திவிட்டால் ஏற்றத்தாழ்வு அதிகமுள்ளது குறையும் என்பது நோக்கம். இந்த மசோதாவை எதிர்க்கவில்லை. இருந்தாலும் நண்பர் திரு. கோதண்டராமன் சொன்னது போல் இதைப்

12-00 noon

27th September 1961] [Sri M. Kalyanasundaram]

பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனைக்கு விட்டு நன்ருகப் பரிசீலனை செய்து நிறைவேற்றலாம் என்பது என் கருத்து. இந்தமாதிரிப் பிரச்னைகளை ஆலோசிக்க எல்லாக் கட்சித் தலைவர்களையும் கொண்ட கமிட்டி இருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் இதைப் பற்றி விவாதிக்கவும் வழியிருக்கிறது. முன்பே வெளியிடுவதற்கு முன் இந்த மசோதா பற்றி அறிவிக்கப்பட்டிருந்தால் நல்ல உருப்படியான யோசனைகள் சொல்ல முடியும். இப்போதும் இதைப் பொறுக்குக் கமிட்டிக்கு விடுவதில் ஒன்றும் கஷ்டம் இருக்காது என்று நினைக்கிறேன். நவம்பர் மாதம் 9-ம் தேதி மீண்டும் கூடுகிருேம். அதற்குள் ஒன்றிரண்டு நாள் கூடி விவாதித்தால் போதுமானது. இரண்டு நாளைக்குள் அதைப் பரிசீலனை செய்ய முடியும். அந்தப் பரிசீலனையின் அடிப்படையில் மசோதாவை நன்கு திருத்தி அமைக்க வேண்டும். ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் திரு. கோதண்டராமனுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

*SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் கோதண்டராமன் அவர்கள்கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். முன்பே லோகல்பாடி மூலம் பல காரியங்கள் செய்வதற்கும் சட்டம் போட்டோம். இப்போதும் வருமானத்தை அவற்றுக்கு அதிகப்படுத்த வேண்டும் என்றே ஆலோசித்துக் கொண்டிருக்கிருேம். ஆனுல் திடீரென்று ஒரு மசோதாவைக் கொண்டு வருவது அவ்வளவு பொருத்தமல்ல. இதைப் பற்றி முன்பே ஆலோசிக்க இடமும், சந்தர்ப்பமும் இல்லாவிட்டாலும்—இப்போது இதைப் பொறுக்கு கமிட்டிக்கு விட்டால் மசோதாவை நல்லபடியாக உருவாக்க சந்தர்ப்பம் ஏற்படும். இது முக்கியமான மசோதா. நவம்பர் மாத செஷனிலேயே இதை மீண்டும் எடுத்துக் கொள்ளலாம். ஆகவே இதை இப்போது பொறுக்குக் கமிட்டிக்கு விட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The Hon. Minister will now reply.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Mr. Deputy Speaker, Sir, I tried to catch the eye of the Chair to give me an opportunity to speak but I could not catch the eye of the Chair. This is a Bill which affects the Corporation and also the citizens. . . .

DEPUTY SPEAKER : Before I called the Hon. Minister to speak, the hon. Member should have caught my eye.

SRIMATHI T. N. ANANDANAYAKI : If the Chair says that no hon. Member should speak hereafter, I am prepared to sit down.

DEPUTY SPEAKER : Now the hon. Member can speak.

SRIMATHI T. N. ANANDANAYAKI : 'It is also proposed to amend the Madras City Municipal Act, 1919, so as to raise the maximum rate of property tax in the case of any land or building from 20 per cent to 25 per cent of its annual value.' என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் சட்டத்திலே அதைக் காணேம் உயர்த்தப்போகிருர்கள் என்றுல் பின்னுலே வருவதற்கு இப்போது தயார் செய்து வைக்கிருர்களா என்று தெரியவில்லே. இதனுல் பின்னுல் நகரசபைக்குப் பெரிய தொல்லேதான் விளேயும். ஏற்கனவே தொந்தரவு பலவற்றேடு கட்டுகிற வரியை மேலும் சிக்கலானதாக நகரசபைகளுக்குத் தொந்தரவு விளேவிக்கக்கூடியதாக ஆக்கக் கூடாது. இந்த எண்டர்டெய்ன்மெண்டு டாக்ஸைப் போல சர்சார்ஜையும் அரசாங்கமே வாங்கிக்கூடப் பஞ்சாயத்துக்களுக்கு கொடுக்கலாம். அது ஓரளவு வரவேற்கத்தக்கதாக இருக்கும். இருந்தாலும் கர்ப்பரேஷன் போன்றவைகளுக்குத் தொந்தரவு

[Sri T. N. Anandanayaki] [27th September 1961

ஏற்படாத வகையில் இதை அமைக்க வேண்டும். ஆகவே அதையும் விளக்கிச் சொன்னால் நன்றாக இருக்கும். அதோடு பொறுக்குக் கமிட்டிக்கு விடுவதற்கு இசைந்தாலும் கூட மிகவும் உபயோகமாக இருக்கும் என்று சொல்லிக் கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இந்த மசோதா எந்த நோக்கத்தின் அடிப்படையில் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதைச் சொன்னேன். ஆனால் கனம் அங்கத்தினர்கள் பேசும் போது பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பினால் நல்லது என்று சொன்னார்கள். ஆகவே அதை ஏற்றுக் கொண்டு இந்த மசோதாவை பொறுக்கு கமிட்டிக்கு அனுப்ப ஒப்புக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

'That the Madras Local Authorities Finance Bill, 1961 (L.A. Bil No. 34 of 1961), be referred to a Select Committee consisting of the following Members of the Assembly:—

1. Sri V. K. Kothandaraman.
2. Sri M. Selvaraj.
3. Sri K. R. Nallasivam.
4. Sri D. S. Authimoolam.
5. Sri V. K. Ramasamy Mudaliyar.
6. The Hon. Srimathi Lourdhammal Simon.
7. The Hon. Sri C. Subramaniam.
8. Srimathi T. N. Anandanayaki.
9. Sri P. G. Karuthiruman.
10. Sri V. K. Krishnamurthy.
11. Sri R. Srinivasa Iyer.
12. Sri K. R. Viswanathan.
13. Sri M. S. Selvarajan.
14. Sri J. Matha Gowder.
15. Srimathi Kolandai Ammal.

The motion was put and carried.

DEPUTY SPEAKER: The original motion and the amendment will not be put to note in view of the decision of the House on the motion to refer the Bill to a Select Committee.

Under Rule 99 (1) of the Madras Legislative Assembly Rules I nominate the Hon. Minister for Local Administration as the Chairman of the Committee.

(3) THE MADRAS ESTATES (SUPPLEMENTARY) AMENDMENT BILL, 1961.

* THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I beg to introduce the Madras Estates (Supplementary) Amendment, Bill [a], 1961, and move—

'That the Bill be taken into consideration.'

It has become necessary to amend the Madras Estates (Supplementary) Act, 1956, in the following circumstances:—

Section 11 (1) of the Madras Estates (Supplementary) Act, 1956 (Madras Act XXX of 1956), lays down that all suits, appeals or other proceedings (other than those pending before the High

[a] Published in the *Fort St. George Gazette*, Extraordinary.

(4) *Kalasamudram.*—The work will be executed during the year 1962-63.

(5) *Nammiyandal.*—There is already one well to cater to the needs of the villagers.

*Irrigation facilities for Thirupathur taluk*

422 Q.—SRI V. K. KOTHNDARAMAN : கனம் பொதுமராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மார்க்கண்டேய நதி தண்ணீர் வடாற்காடு ஜில்லாவிலுள்ள திருப்பத்தூர் தாலூகாவில் 30 கிராமங்களுக்கு பாய்வதற்கான ஏற்பாடு செய்யும்படி கோரி 1961-ம் வருஷம் மே மீ 16-ம் தேதி மேட்டூர் எக்ஸிகூட்டிவ் இன்ஜினீயருக்கு வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ., அவர்களால் எழுதிய லெட்டரும், கிராம வாசிகளின் மனுவும் கிடைத்ததா ?

(இ) அவைகளின்மேல் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

A.—(a) Yes Sir.

(b) No action has been considered necessary in view of the fact that the proposal of the ryots will affect the Krishnagiri Reservoir Project.

*Flood banks (Ongur river)*

423 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) Whether the Government have received a petition in May 1961 from the Harijans of Vellankondagaram and Chunampat villages, Madurantakam taluk regarding the repair to the breaches of the Ongur river on the border of Chingleput and South Arcot districts ; and

(b) If so, the action taken thereon ?

A.—(a) Yes, Sir.

(b) A Section Officer who has been put on special duty, is taking levels and preparing plans and estimates for forming flood banks in Vellankondagaram and Chunampet limits.

*Bridge across Cheyyar*

424 Q.—SRI P. U. SHANMUGHAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வட. ஆற்காடு மாவட்டம், செங்கம் தாலூகா காஞ்சி ஆற்றின் மீது கட்டப்பட வேண்டிய பாலம் எந்த நிலையிலுள்ளது ?

A.—Presumably, the member refers to the work of constructing a bed level causeway across Cheyyar at Mile 12/0 of Tiruvannamalai Kanchi Road. The approval of the Government of India was obtained in 1959 for the execution of this work (estimated cost Rs. 3,60,000) from the State's allocations in the Central Road Fund. Subsequently, it has been proposed to construct a High Level Bridge at an estimated cost of Rs.2,39,000 and this estimate is now under scrutiny in the Office of the Chief Engineer (Highways and Rural Works). The work will be taken up soon after the technical sanction is accorded for the estimate.

*Work Centre for North Arcot district*

425 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்டம் போளூர் தாலூகா களம்பூரில் ' Semi-skilled Workers' Service Centre " ஆரம்பிப்பது எந்த நிலையிலுள்ளது ?

28th September 1961]

*A.*—There is no proposal before the Government for setting up a Service Centre for Semi-skilled Workers in the North Arcot district but the establishment of a Work Centre for semi educated youths in the districts has been sanctioned by the Government recently and steps are being taken to select a site for the centre.

*Tamilians in Ceylon*

426 *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) இலங்கைத் தமிழர்களின் நிலையைக் குறித்து மத்திய சர்க்காரிடம் முதல் அமைச்சா அவர்கள் முறையிட்டார்களா ?

(இ) அப்படியாயின் அதன் விவரமென்ன ?

*A.*—(*a*) and (*b*). The Government had received certain representations about the plight of Tamils in Ceylon and these were forwarded to the Government of India for taking such action as they consider necessary.

427 *Q* —Sri M. P. SARATHI : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) இலங்கைவாழ் தமிழர்களுடைய அவல நிலை அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்ததா ?

(இ) அதுபற்றி இந்த அரசு மத்திய அரசுடன் தொடர்பு கொண்டுள்ளதா ?

(உ) இந்த அரசாங்கம் இதுபற்றி எடுத்துள்ள நடவடிக்கைகளின் விவரமென்ன ?

*A.*—(*a*) The Government received certain representations about the plight of Tamils in Ceylon.

(*b*) and (*c*) The representations were forwarded to the Government of India for taking such action as they consider necessary.

*Deaths in the State*

428 *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் 1959–1960-ம் ஆண்டுகளில் இறந்தவர்கள் எத்தனை பேர் ?

(இ) இதில், ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எத்தனை பேர் ?

(உ) அதிகமாக எந்த நோயால் இறந்தார்கள் ?

| *A.*— (*a*) | 1959 | 1960 |
|---|---|---|
| | 3,95,749 | 4,08,461 |
| (*b*) Men .. .. .. .. | 1,99,036 | 2,05,026 |
| Women .. .. .. | 1.96,713 | 2,03,435 |
| *Children*— | | |
| Under 1 year .. .. .. | 86,161 | 82,439 |
| 1—5 years .. .. .. .. | 74,558 | 83,136 |
| 5—10 years .. .. .. | 13,737 | 16,411 |

(*c*) The recorded causes of death are not entirely reliable as no medical certification of deaths is produced. However, as per the known groups of causes, the highest number of deaths was recorded under "Fevers other than Malaria".

[28th September 1961

*Sugarcane*

429 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் சராசரி ஒரு ஏக்கரில் கரும்பு உற்பத்தி எவ்வளவு ?

(இ) மற்ற மாநிலங்களை விட நம் மாநிலத்தில் அதிகமென்பது உண்மையா ?

A.—(அ) The average yield of sugarcane for the whole of this State for the year 1959–60 was 25·89 tons while the average yield in the Development Zone where the Sugarcane Development Scheme is implemented with the Special Staff was 42·20 tons.

(இ) Yes, Sir, with the exception of the Andhra, Maharashtra and Gujarat as will be seen from the average yield for 1959–60 in other States furnished below :—

| | TONS. |
|---|---|
| Uttar Pradesh .. .. .. .. | 11·00 |
| Bihar .. .. .. .. | 14·6 |
| Punjab .. .. .. .. | 14·5 |
| Rajasthan .. .. .. .. | 8·6 |
| Madhya Pradesh .. .. .. | 10·7 |
| Orissa .. .. .. .. | 13·3 |
| West Bengal .. .. .. | 15·8 |
| Assam .. .. .. .. | 14·2 |
| Maharashtra and Gujarat .. | 26·8 |
| Andhra Pradesh .. .. .. | 34·3 |
| Mysore .. .. .. .. | 26·1 |
| Kerala .. .. .. .. | 16·3 |

*Sathanur Project House*

430 *Q.*—SRI P. U. SHANMUGHAM : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சாத்தனூர் நீர் தேக்கத்தின் அருகில் கட்டப்பட்டுள்ள பிரயாணிகள் விடுதியில் (Project House) தொலைபேசி (Telephone) அமைக்க உத்தேச முண்டா ?

*A.*—No, Sir.

*Santhome Colony*

431 *Q.*—SRI M. P. SARATHI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை சாந்தோம் கடற்கரையில் அமைக்கப்பட்டுள்ள காலனியில் எத்தனை வீடுகள் ஒதுக்கப்பட்டுள்ளன ?

(இ) அந்த வீடுகள் யார், யாருக்கு ஒதுக்கப்பட்டுள்ளது ?

(உ) ஒவ்வொரு வீட்டிற்கும் நிர்ணயிக்கப்பட்டுள்ள வாடகை எவ்வளவு ?

(எ) வாடகை விகிதத்தைப்பற்றி புனராலோசனை செய்யக் கோரிக்கை வந்ததா ? அது என்னவாயிற்று ?

*A.*—(*a*) 500 apartments have been constructed in the Foreshore Estate.

(*b*) The apartments have been allotted to State Government employees alone.

28th September 1961]

(c) Rents have been provisionally fixed at Rs. 31 for a first floor apartment and Rs. 33 for a ground floor apartment, per month.

(d) Yes. The petition received from the Foreshore Residents' Association for reduction of rent is under consideration.

*Road for Venkatapuram*

432 *Q.*—SRI M. P. SARATHI : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் தாலுகா, வெங்கடபுரம், சம்பங்கி நல்லூர் கிராமங்களிடையே நல்ல ரோடு வசதி கொடுக்க அரசாங்கத்தினிடம் திட்டம் உண்டா ?

(இ) அந்த ரோடு எப்போது போட்டுக்கொடுக்கப்படும் ?

*A.*—(அ) No, Sir.

(இ) Does not arise.

*Political Pensions*

433 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the Government have received any petition about the non-payment of political pension from any one from the Thovala taluk of Kanyakumari district after the States Re-organization ;

(b) if so, the details thereof ; and

(c) the steps taken by the Government to dispose of this petition expeditiously.

*A.*—(a) Yes, Sir.

(b) and (c)—One Sri Soundara Pandian Ambalathandava Pillai of the Thovala taluk, Kanyakumari district was in receipt of a pension of Rs. 31-2-0 per mensem plus a temporary increase of Rs. 9 per mensem. The pension was stopped from July 1956. The pension is in lieu of his one-fourth share of certain land relinquished by him in favour of the Government. The pension is in the nature of assignment and compensation in lieu of resumed lands. The question of sanctioning the continuance of the pension granted to him is under correspondence with the Board of Revenue and the Government of Kerala. Every effort is being made to expedite the issue of a final order in the matter.

*Thenthirupperai temple*

434 *Q.*—SRI. A. E. CHANDRASEKARA NAYAGAR : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) தென்திருப்பேரை என்னும் ஊரில் பெருமாள் பத்து வருஷங்களாக கருட சேர்வை உற்சவத்தில் எழுந்தருளாத காரணம் என்ன ?

(இ) இது சம்பந்தமாக சர்க்காருக்கு மகஜர்கள் ஏதாவது வந்து இருக்கின்றனவா ?

*A.*—(அ) The deity was not taken in procession during the Vaikasi Festival for the last two years due to a dispute between the authorities of the temple at Thenthirupperai and Alwarthirunagari on the question as to who is to carry the Sadagopam from the Perumal deity to Sri Nammalwar (i.e., whether the Paricharakan or the Archakar).

(இ) No, Sir.

[28th September 1961.

*Scholarships*

**435—*Q*.—Sri. S. M. ANNAMALAI: கனம் பொதுமராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—**

**(அ) வடாற்காடு மாவட்டம், போளூர் தாலூகா களம்பூர் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் பிற்பட்ட தாழ்ந்த இனத்தைச் சேர்ந்த மாணவர் களுக்கு 1960–61-ம் ஆண்டில் எத்தனை ஸ்காலர்ஷிப்புகள் புதுப்பித்துத் தரப்பட்டன ?**

**(இ) எத்தனை தள்ளுபடி செய்யப்பட்டன ? காரணமென்ன ?**

**A.—(அ) The number of scholarship applications renewed during 1960–61 for the students studying in Board High School, Kalambur is as follows :—**

**(*a*) Backward Classes—3.**

**(*b*) Eligible communities—5.**

**(இ) Number of scholarship applications (renewals) rejected during 1960–61 is 'Nil'.**

**[Note.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II. PRIVILEGE MATTER.

### PICKETTING BEFORE THE ASSEMBLY.

DEPUTY SPEAKER : Hon. Members will remember that yesterday I referred to the notice of a motion under rule 184 of the Madras Legislative Assembly Rules, given by Sri R. Srinivasa Iyer for permission to raise a matter of privilege and I said that I would take it up today.

The Notice refers to " the disrespect, contempt, and breach of privilege of this House committed by the members of the Madras Communist Party led by (1) Sri Manali Kandasami, (2) Sri K. Gajapathi, (3) Sri K. Murugesan, (4) Sri P. Karuppannan, (5) Sri G. Krishnan and (6) Sri M. Kalyanasundaram on the 19th, 20th, 21st, 22nd and 23rd September 1961 " and to the obstruction, molestation, annoyance and intimidation caused to some Hon. Ministers and hon. Members of the Assembly. The notice also refers to the prevention of entry of the Hon. Ministers for Home and Electricity, the hon. Member himself and other hon. Members, into the Assembly and the performance of their legitimate duties.

Under clause (3) of Article 193 of the Constitution. . . . .

SRI M. KALYANASUNDARAM : **Even on that motion, I have to raise a point of order.**

DEPUTY SPEAKER : The hon. Member can raise the point of order after I finish.

SRI M. KALYANASUNDARAM : **Sir, the Hon. Deputy Speaker may kindly listen to my point of order and dispose it of. I am in your hands. I am not going to argue on your ruling. I do not propose to argue anything. I only want to raise a point of order.**

DEPUTY SPEAKER : All right.

28th September 1961]

SRI M. KALYANASUNDARAM : The persons referred to in that motion have been arrested and remanded to custody. They are now in the Central Jail, Madras. They are all arrested under section 7 (1) of the Criminal Law Amendment Act. The jail warrant is there and they are remanded to custody. Charge-sheets are likely to be filed and I am sure they will be proceeded against. So the matter is sub-judice. When a matter is sub-judice, is it proper for this House to canvass opinion either for or against since the subject-matter of both this motion and the charge-sheet are the same? So I am of opinion that this matter is sub-judice and the Hon. Home Minister is very careful to uphold the dignity of the Court and also the dignity of the House. Unfortunately, the Leader of the House is not here and we are not able to know his views. He will uphold the dignity of the Courts so long as it suits him.

9-30 a.m.

SRI C. R. RAMASWAMI : The hon. Member should withdraw his remarks made against the Hon. the Leader of the House.

SRI P. G. KARUTHIRUMAN : Sir, the hon. Member Sri M. Kalyanasundaram should withdraw his remarks.

DEPUTY SPEAKER : The hon. Member should withdraw the remark.

SRI M. KALYANASUNDARAM : Sir, I withdraw it.

My second point is this. When a member has with the consent of the Speaker raised a matter of privilege, under rule 188 of the Madras Legislative Assembly Rules the Speaker shall read the matter to the House and decide whether a *prima facie* case of breach of privilege has been made out or not therein. That means that the stage of permitting the member to raise is over.

DEPUTY SPEAKER : I have not given my permission yet.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இப்பொழுது கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுவதுபற்றி நான் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இது ஒழுங்கு முறையற்றது என்பது அவர்கள் வாதம். இந்த மோஷன்பற்றி நேற்று படிக்கப்பட்டது. இன்று இதில் "பிரைமாபேஷி கேஸ்" இருக்கிறதா இல்லையா என்பது பற்றி தாங்கள் எழுந்து நின்று படிக்கக்கூட ஆரம்பித்து விட்டீர்கள். அப்பொழுது கனம் அங்கத்தினர் குறுக்கிட்டு ஒழுங்குமுறைப் பிரச்னையை கிளப்பினார்கள். இதில் ஒழுங்கு முறைப் பிரச்னைக்கு இடமில்லையென்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். போலீஸார் நடவடிக்கை எடுத்து கோர்ட் முன்பு நடவடிக்கை இருக்கிறது. அவர்கள் சிறைப்படுத்தப்பட்டு சட்டப்படி அவர்கள் குற்றம் செய்தார்களா இல்லையா என்பதை கோர்ட் கவனிக்க வேண்டும். அது குற்றமா இல்லையா என்பதைப்பற்றி பேசுவது தான் "ஸப்ஜுடீஸ்". கண்டிப்பாக அப்படி பேசிவதை நான் ஆட்சேபிப்பேன். இந்தப் பிரச்னை வேறு. சட்டமன்றத்தின் உரிமை பாதிக்கப்படுகிறது. சட்டம் என்பது வேறு. வெளியே நின்று கொடி வைத்திருப்பவர்கள் அங்கத்தினர்களை, நீங்கள் போகக்கூடாது என்று சொன்னால் போலீசார் கிட்ட வரமாட்டார்கள். அவர்கள் தலையிட வேண்டுமென்று உத்தரவில்லை. அவர்கள் கிட்ட வரமாட்டார்கள். ஆனால் அது உரிமைப் பிரச்னையாக வரலாம். இப்பொழுது தாங்கள் சொல்லப்போவது, இந்த சட்டசபை கருதுவது உரிமை மீறப்பட்டிருக்கிறதா என்று கூட தாங்கள் சொல்லப்

போவதில்லை. ப்ரிவிலெஜ் கமிட்டி இதைக் கவனிக்க வேண்டுமென்பது தான். "பிரைமாபேஸி கேஸ்" இருக்கிறது என்று தாங்கள் அபிப்பிராயப் பட்டால் "ப்ரிவிலேஜ் கமிட்டிக்கு" "ரெபர்" செய்து அவர்கள்தான் எடுத்துக் கொள்ளப்போகிறார்கள். ஆக, ஒழுங்குமுறை பற்றிய பிரச்னை என்பதே இதில் இல்லை என்று நான் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : Sir, on a point of clarification . . . .

DEPUTY SPEAKER : There can be no clarification on this. Now I shall deal with the first point raised by the hon. Member.

The motion of privilege is confined to the disrespect and contempt involved to the House and does not go into the details of the case, which does not directly concern the House.

The motion given notice of by Sri R. Srinivasa Iyer relates to " the grave disrespect and contempt and breach of privilege of this House and refers only to the obstruction, molestation and intimidation caused to some Hon. Ministers and some hon. Members." The motion does not make any mention of the merits of the case. There is no information that a case has already been filed in a Court. The matter cannot be said to be under adjudication. It cannot, therefore, be said to be *sub-judice.* Moreover, the privilege motion relates to matters distinct and independent of matters that may be raised in a Court of Law in any action under Criminal Law. So I rule it out of order.

As regards the second point raised by Sri M. Kalyanasundaram, I have not yet given my consent to the hon. Member to move. Yesterday I only read the privilege matter which has been given notice of by the hon. Member. I did not give my decision yesterday and the hon. Member has not yet moved it.

Under clause (3) of Article 193 of the Constitution of India, the powers, privileges and immunities of a House of the Legislature of a State and of its members shall be such as may be defined by the Legislature by law, and, until so defined, shall be those in the House of Commons of Parliament of the United Kingdom and of its members at the commencement of the Constitution.

According to ' May ', it is a breach of privilege to molest a member of either House while attending such House or when coming to or going from it.

On 12th April 1733, when a complaint was made by several Members that on their return from the House they were menaced, insulted and assaulted by a tumultuous crowd of people in the passages to the House, the House of Commons resolved—

" that the assaulting, insulting or menacing any Member of this House, in his coming to or going from the House, or upon the account of his behaviour in Parliament, is a high infringement of the privilege of this House, a most outrageous and dangerous violation of the rights of Parliament and a high crime and misdemeanour."

28th September 1961] [Deputy Speaker]

Similarly, on the 6th June 1780, the House of Commons resolved as follows :

" that it is a gross breach of privilege of this House for any person to obstruct and insult the Member of this House in the coming to, or the going from, the House, and to endeavour to compel members by force to declare themselves in favour of, or against any propositions then depending or expected to be brought before the House."

On the 13th March 1951, the Chief Minister of Madhya Pradesh raised a question of breach of privilege in regard to the grave disrespect and contempt involved in the prevention of ingress and egress of members to the Assembly and the disturbances and picketing carried on in the vicinity of the House by a member and others. The Privileges Committee of the Madhya Pradesh Legislative Assembly, to whom the question of privilege was referred, pointed out in its Report as follows :—

" It may be stated generally that any act or omission which obstructs or impedes either House or Parliament in the performance of its functions, or which obstructs or impedes any member or officer of such House in the discharge of his duty, or which has a tendency, directly or indirectly, to produce such results may be treated as a contempt even though there is no precedent of the offence ".

The Committee held that squatting of persons at the gates of the Assembly was obviously intended to obstruct the passage to the Assembly Hall.

On the facts stated in the notice given by Sri R. Srinivasa Iyer I am of opinion that the matter proposed to be raised refers to a matter of recent occurrence and does involve a question of privilege of this House. I, therefore, give my consent to the matter being raised. The hon. Member may now move the motion.

SRI M. KALYANASUNDARAM : Sir, the motion should be read only by the Speaker.

DEPUTY SPEAKER : The hon. Member Sri R. Srinivasa Iyer may now raise the matter and can say a few words about it.

* SRI R. SRINIVASA IYER : Sir, I raise a matter of privilege and bring to your notice and the notice of this House—

" the disrespect, contempt and breach of privilege of this House committed by the members of the Madras Communist Party led by (1) Sri Manali Kandasami, (2) Sri K. Gajapathi, (3) Sri K. Murugesan, (4) Sri P. Karuppannan, (5) Sri G. Krishnan and (6) Sri M. Kalyanasundaram, M.L.A.,on the 19th, 20th, 21st, 22nd and 23rd September 1961 by picketing before the Assembly and causing obstruction, molestation, annoyance and intimidation to the Members of the Assembly including some of the Hon. Ministers by preventing them from entering the premises of the Assembly and carrying on their legitimate duties [while the Legislative

[Sri R. Srinivasa Iyer] [28th September 1961

Assembly was in session considering the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960] with the intention of intimidating the members and compelling them to declare themselves in favour of the amendments moved by the members of the Communist Party in the Assembly to the provisions of the Bill."

On Thursday, the 21st September 1961 the Hon. Minister Sri M. Bhaktavatsalam, Home Minister, was obstructed while entering the Fort premises of the Assembly. On Saturday, the 23rd September 1961, the Hon. Minister for Electricity Sri V. Ramaiah was obstructed.

On Friday, the 22nd September 1961 myself and other members coming by the Government Transport bus were obstructed.

Sri N. K. PALANISWAMI : Sir, how is reference to the hon. Member Sri Kalyanasundaram relevant here?

DEPUTY SPEAKER : Whether it is relevant or not is not a matter to be decided now.

Sri R. SRINIVASA IYER : Sir, I move . . .

DEPUTY SPEAKER : The hon. Member cannot move the motion now. Only if and after I rule that there is a *prima facie* case of breach of privilege, the hon. Member can move that the matter may be referred to the Committee of Privileges. Now, I have only given him consent only to his raising the matter.

Under rule 188 of the Madras Legislative Assembly Rules, I hold that the matter raised by the hon. Member Sri R. Srinivasa Iyer does involve a question of privilege and a *prima facie* case of breach of privilege has been made out. It is now open to any Member of the House to make a motion that the alleged breach of privilege be referred to the Committee of Privileges or in the alternative that it be dealt with by the House itself.

Sri R. SRINIVASA IYER : Sir, I move—

"that the question of privilege raised by me be referred to the Committee of Privileges."

Sri P. G. KARUTHIRUMAN : I second the motion, Sir.

Sri M. KALYANASUNDARAM : Under rule 189, there are two atlernatives, viz., the matter may be referred to the Committee of Privileges or it may be dealt with by the House itself. This is a very important matter concerning a Political Party and myself, a Member of this House. I am also a Member of the Committee of Privileges. In view of all these factors, I move—

"that the question of privilege raised by the hon. Member Sri R. Srinivasa Iyer be dealt with by the House itself."

Sri N. K. PALANISAMI : I second the motion, Sir.

DEPUTY SPEAKER : The motion moved by the hon. Member Sri R. Srinivasa Iyer and the one moved by the hon. Member Sri M. Kalyanasundaram are now before the House for discussion.

28th September 1961]

*THE HON. SRI M. BHAKTAVATSALAM : டிபுடி ஸ்பீக்கர் ஸார், போன்ற பிரச்னைகளை பிரிவிலெஜ் கமிட்டிக்கு இது அனுப்புவது தான் முறை. பிரிவிலெஜ் கமிட்டி முடிவு தெரிவித்த பின்னால் அதை இந்த மன்றம் ஏற்றுக்கொள்ளும் முன்னால் அதைப்பற்றி விவாதிக்கலாம். பிரிவிலேஜ் கமிட்டி எந்தவிதமான முடிவு எடுத்தாலும் இந்த மன்றத்தில் தான் அந்த முடிவு அங்கீகரிக்கப்படவேண்டும். ஆகவே கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் அவர்கள் கொடுத்திருக்கின்ற பிரேரணை அவசியமில்லை என்று நினைக்கிறேன். பிரிவிலேஜ் கமிட்டி முடிவு எடுத்த பின்னாலும் அதைப்பற்றி இந்த சபையில் விவாதிப்பதற்கு சந்தர்ப்பம் கிடைக்கின்றது. ஆகவே இந்த உரிமைப் பிரச்னையை இந்த சபையிலேயே விவாதிக்கவேண்டும் என்ற கருத்தை நான் ஒத்துக்கொள்ள முடியாது.

*SRI K. ANBAZHAGAN : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, இதற்கு முன்னால் உரிமைக்குழு எந்த முடிவு எடுத்தாலும், அதை இந்த சபைதான் அங்கீகரிக்கவேண்டும் என்றும், இந்தச் சபையில் வருகின்ற நேரத்தில் சபையிலுள்ள அங்கத்தினர்களுக்கு விவாதிப்பதற்கு சந்தர்ப்பம் கிடைக்கும் என்றும் ஆகவே இப்போதே இதை இந்தச் சபையிலேயே விவாதிக்கவேண்டும் என்று தீர்மானிக்கத் தேவையில்லை என்றும் கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிக்கின்றார்கள். அவர்களுக்கு நான் பணிவோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன், ஏற்கனவே ஒருபிரச்னை உரிமைக் குழுவுக்கு போய்விட்டு சபையின் முன் வந்தபோது அதைப்பற்றி விவாதிக்க வேண்டும் என்று இந்த மன்றத்திலுள்ள பல அங்கத்தினர்கள் விரும்பிய நேரத்தில் ஆளும் கட்சித் தலைவர் அமைச்சர் உயர்திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் சபையிலுள்ள எல்லா அங்கத்தினர்களும் இதில் பேசவேண்டிய அவசியமில்லை என்றும், பிரிவிலேஜ் கமிட்டிக்கு போய்விட்டு முடிவு எடுத்த தன் பின்னால் மற்ற அங்கத்தினர்கள் இதில் பேச வேண்டிய தேவையில்லை என்றும் கூறி அன்றையதினம் தடுத்தார்கள். அதுதான் கையாளப்படும் முறை என்றும் அன்றையதினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் பேசினார்கள். உரிமைக் குழுவுக்குப் போய்விட்டு வந்ததன் பின்னர் மற்றவர்கள் பேச இடமில்லை என்ற கொள்கை இதற்கு முன் கைக்கொள்ளப்பட்டிருக்கின்ற காரணத்தால் நிச்சயமாக இந்தப் பிரச்னையை இந்த சட்டமன்றத்திலேயே விவாதிப்பதற்கு இடம் அளிக்கவேண்டும். அவ்விதமில்லாமல் உரிமைக்குழுவில் மட்டும் விவாதித்து விஷயத்தை மூடி வைத்துவிடக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடக்கூடாது. எல்லாச் சட்ட மன்ற உறுப்பினர்களுக்கும் இதைப்பற்றிய கருத்து தெரிவிப்பதற்கு, அல்லது இதைப் பற்றி விவாதிப்பதற்குள்ள சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும். அந்த முறையில் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய பிரேரணையை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

*THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் அன்றைய தினம் குறிப்பிட்டது, கொண்டு வரப்பட்ட மோஷனை எதிர்த்துப் பேசுவதாக இருந்தால்தான் பேசவேண்டும், ஆதரித்துப்பேச வேண்டும் என்றால் மற்றவர்கள் பேச வேண்டிய அவசியமில்லை என்றுதான். பிரிவிலேஜ் கமிட்டிக்குப் போய்விட்டு வந்ததன் பின்னால் யாராவது எதிர்த்துப் பேச வேண்டுமானால் அதற்கு இங்கு எந்தவிதமான தடையும் இருக்கப்போவதில்லை. அதன் மீது யார் வேண்டுமானாலும் அப்போது பேசலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI K. ANBAZHAGAN : எதிர்ப்பதாக இருந்தால் பேசலாம் என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிக்கிறார்கள். அன்றைய தினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் அந்தத் தீர்மானத்தை முன் மொழிந்து பேசினார்களே தவிர, அவர் அதைப்பற்றி கருத்தளவில் எதிர்த்துத்தான் பேசினார்கள். அதே போன்று பலவேறு கட்சி உறுப்பினர்கள் அடங்கிய இந்த மன்றத்தில் இம்மாதிரியான கருத்துக்கள் வரும்போது பலவிதமானகருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஆகவே உரிமைக்குழுவுக்கு விட்டு அதனுடைய தீர்ப்பை மட்டும் எதிர்பார்ப்பதைவிட இதை இந்தச் சட்டமன்றத்திலேயே விவாதிப்பதற்கு விடுவது நல்லது என்று கருதுகிறேன்.

[28th September 1961

DEPUTY SPEAKER : It is for the Chair to decide whether or not the House can discuss the matter after receiving the report of the Committee of Privileges, and it is not for the Hon. Leader of the House or any other Minister to decide it. The other day, we came to a certain conclusion on the merits of that case. But, it is not a precedent and it is for the Chair to take a decision in the matter on the merits of each case.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இது சாதாரணமாக வரக்கூடிய உரிமைப் பிரச்னை அல்ல. இது ஒரு அங்கத்தினர் மீது நடவடிக்கை எடுக்கும் பிரச்னை என்று தான் நான் இதைக் கருதுகிறேன். இதைக்கொண்டு வந்த கனம் அங்கத்தினராக இருந்தாலும் சரி அதை ஆதரிக்கக்கூடிய கட்சியாக இருந்தாலும் சரி, இதை ஏனோதானோ என்று இதைப்பற்றி சிந்திக்காமல் இதைக் கொண்டு வந்துவிட்டதாக நான் கருதுவதற்கில்லை. நான் கொண்டிருக்கக்கூடிய கருத்துக்கு அல்லது கொள்கைக்கு அல்லது நான் கொண்டிருக்கக்கூடிய கொள்கைகளை கொண்ட கட்சியையோ அல்லது என்னையோ பழிவாங்கும் நோக்கத்துடன்தான் இது கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று நான் கருதுகிறேன். இது ஒரு முக்கியமான பிரச்னை, இதை ஒரு கமிட்டிக்கு முன்னால் மட்டும் விட்டுவிடுவது சரியல்ல. இதைப்பற்றி இந்த சபையிலுள்ள எல்லோரும் பேசட்டுமே. இதை பகிரங்கமாக விவாதித்தால் தான் இதைப்பற்றியுள்ள உண்மை நிலை என்ன என்பதை ஜனங்கள் அறிந்து கொள்ள முடியும். இது தனிப்பட்ட நபர் ஒருவரை மட்டும் பாதிக்கின்ற பிரச்னை அல்ல. ஒரு கட்சியையே பாதிக்கின்ற பிரச்னை, 14 ஆயிரம் பேர்களை ஜெயிலுக்கு அனுப்பி ஒரு இயக்கத்தை நடத்திக்கொண்டிருக்கிற ஒரு கட்சியின் பிரச்னை. இன்றைக்கு கொண்டுவரப்பட்டிருக்கின்ற பிரச்னை இங்கு போராடுகின்றவர்களை மட்டும் பாதிப்பதல்ல. எல்லா இடங்களிலும் கலெக்டர் ஆபீஸ்களின் முன்னால் எல்லாம் மறியல் செய்கின்றார்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள், அவர்களை எல்லாம் பாதிக்கின்ற பிரச்னை. இந்தப் போராட்டத்தைப் பொறுத்தவரையில் யாரையும் எந்தத் தனிப்பட்ட நபரையும் புண்படுத்த வேண்டும் என்பது இதன் நோக்கமல்ல. இது முக்கியமான ஒரு அரசியல் பிரச்னை. மக்களுடைய கருத்தை வலியுறுத்திக்கூற வேண்டும் என்கின்ற காரணத்தினால்தான் இந்தப் போராட்டத்தை நடத்துகிறார்கள். ஆகவே இவைப்பற்றி கொண்டுவரப்பட்டிருக்கின்ற இந்தப் பிரச்னையை இந்த மக்கள் மன்றத்தில் விவாதித்தால் தான் பொதுமக்கள் இதைநன்கு புரிந்துகொள்ளமுடியும். ஆகவேதான்இதை இந்த மன்றத்திலேயே விவாதிக்கவேண்டும் என்ற திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன். இங்கு மெஜாரிட்டியாக இருக்கும் ஆளும்கட்சி ஏன் இதைக் கண்டு அஞ்ச வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. பகிரங்கமாக விவாதிக்கவேண்டும் என்று சொல்லுவதை ஏன் இவர்கள் மறுக்கவேண்டும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. குற்றம் புரிந்தவன் என்று சொல்லப்படும் நானே இதைப்பற்றி மன்றத்தில் விவாதிக்கலாம் என்று ஒத்துக்கொள்ளும்போது, குற்றம் சாட்டக்கூடியவர்கள் ஏன் ஒத்துக்கொள்ள மறுக்கிறார்கள் என்று தெரியவில்லை.

**Sri K. R. NALLASIVAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, உங்களுடைய கவனத்திற்கு ஒரு முக்கியமான விஷயத்தைக்கொண்டு வர விரும்புகிறேன். இந்த உரிமைப் பிரச்னையில் கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் உரிமைப் பிரச்னை கமிட்டியில் ஒரு அங்கத்தினர் பதவி வகித்து வருகிறார்கள். ஆகவே இந்தப் பிரச்னை உரிமைக் கமிட்டியில் வரும்போது அவருடைய நிலை என்ன என்பது விளங்காத ஒரு புதிராக இருக்கிறது. ஆகவே சட்டசபையிலேயே இதை விவாதிப்பதுதான் நல்லது என்கின்ற என்னுடைய கருத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.

(Sri N. K. Palanisami rose)

28th September 1961]

DEPUTY SPEAKER : I am not going to allow all the hon. Members to speak on the matter. I am going to hear the views of only the Leaders of Parties. The hon. Member Sri V. K. Ramaswamy Mudaliar may now speak.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Mr. Deputy Speaker, an important question of privilege has been raised by one of the hon. Members of this House and it has also been read out to the House. Now, the question for consideration is whether the matter should be referred to the Committee of Privileges or whether it could be dealt with by the House itself. While there can be no objection to discuss the whole matter on the floor of the House itself, it should be seriously considered whether all the materials will be available for the House and whether evidence can be let in before the House itself. All those things will become necessary when once the House itself begins to consider the matter of privilege. When the matter is referred to the Committee of Privileges, the matter may get prolonged indefinitely and it may take some months for the Committee to arrive at some decision. Therefore if the Hon. Minister is pleased, there can be no objection to discuss the whole matter on the floor of the House itself if sufficient materials are available for consideration in the House itself. Or, in the alternative, if it is not possible to make available sufficient materials before the House and it is not also possible to arrange for letting in evidence before the House itself, the matter may be referred to the Committee of Privileges. There are these aspects to be considered and it is now for the Hon. Minister in charge to decide whether the matter can be referred to the Committee of Privileges or whether the matter can be dealt with by the House itself.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, நான் முன்பே குறிப்பிட்டேன். கமிட்டி ஆஃப் பிரிவிலெஜெஸ்-ஐ இந்த மன்றம்தான் அமைத்திருக்கின்றது. எந்த உரிமையை மீறுகின்ற பிரச்னையாக இருந்தாலும் சாதாரணமாக அதை கமிட்டி ஆஃப் பிரிவிலெஜெஸ்ஸுக்குத்தான் அனுப்புவது வழக்கம். அவர்கள் கூறுவது சிபாரிசுகள்தான்—கடைசியில் இந்த மன்றம்தான் தீர்ப்பளிக்கவேண்டும், சிபாரிசுகளை ஒப்புக்கொள்ளவேண்டும். அதைப் பற்றி கனம் அங்கத்தினர்கள் எதிர்ப்பு தெரிவித்தால் முழு விவாதமே நடக்கலாம். ஆகையால் இப்போது நான் கூறுவது இதை கமிட்டி ஆஃப் பிரிவிலெஜெஸ்ஸுக்கு விடவேண்டும் என்பதுதான்.

DEPUTY SPEAKER : Now I shall put the motion moved by the hon. Member, Sri Kalyanasundaram, to the vote of the House.

The question is—

'that the question of privilege raised by the hon. Member, Sri R. Srinivasa Iyer be dealt with by the House itself.'

The motion was put and lost.

DEPUTY SPEAKER : I shall now put the motion moved by the hon. Member, Sri Srinivasa Iyer, to the vote of the House.

The question is—

'that the question of privilege raised by the hon. Member, Sri R. Srinivasa Iyer, be referred to the Committee of Privileges.'

The motion was put and carried.

## III. PRESENTATION OF THE REPORT OF THE COMMITTEE ON SUBORDINATE LEGISLATION,

SRI K. VINAYAKAM : Mr. Deputy Speaker, Sir, I, being the Chairman of the Committee on Subordinate Legislation, beg to present the Fifteenth and Sixteenth (Second Assembly) Reports of the Committee.

## IV. GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS PAYMENT OF SALARIES AND REMOVAL OF DISQUALIFICATIONS (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1961.

DEPUTY SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1961.'

The motion was put and carried, and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

### (2) THE MADRAS FOREST (AMENDMENT) BILL, 1961 (L A. BILL NO. 42 OF 1961).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Forest (Amendment) Bill, 1961 (L.A. Bill No 42 of 1961), be taken into consideration.'

இது ஒரு சிறிய மசோதா. மெட்ராஸ் ஃபாரெஸ்ட் ஆக்ட்-ஐத் திருத்தம் செய்வதற்காக ஒரே ஒரு திருத்தத்தைக் கொண்டிருக்கிற மசோதா இது. இந்தத் திருத்தம் சந்தன மரங்கள் விற்பனையைப் பற்றியது. சந்தன மரத்தில் ஒரு சிறு துண்டாக இருந்தாலும் விலை அதிகமாக இருக்கிறது. அதனுடைய விலை ஒவ்வொரு ஆண்டு ஏலத்திலும் அதிகரித்துக்கொண்டு இருக்கிறது. இவ்வளவு விலை மதிப்புள்ளதாக இருப்பதால் இதைத் திருடுவதற்கும் பல வழிகளைக் கையாளுகின்றார்கள் திருடுகின்றவர்கள். ஆகையால் இதை நிறுத்தவேண்டும். இப்போது இருக்கின்ற தண்டனை போதாது. இன்னும் கடுமையான தண்டனை கொடுத்து இந்தக் குற்றத்தைத் தடுக்கின்ற முறையிலேதான் இந்தத் திருத்தம் கொண்டுவரப்பட்டுள்ளது. இப்போது எவ்வளவு சந்தன மரம் இருந்தாலும் அதை வைத்துக் கொண்டு நடவடிக்கை எடுக்க முடியாது. இந்தத் திருத்தத்தின் மூலமாக இனி லைஸென்ஸ் வாங்கவேண்டும். 5 கிலோ கிராமுக்கு மேல் கையில் சந்தனக் கட்டை இருந்தால் லைஸென்ஸ் வாங்கவேண்டும், அப்படி லைஸென்ஸ் இல்லாமல் வைத்திருந்தால் தண்டனை கொடுப்பது என்று திருத்தம். இந்தத் திருத்தத்தை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள் என்று கருதுகிறேன்.

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras Forest (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 42 of 1961), be taken into consideration.'

28th September 1961]

**Sri M. KALYANASUNDARAM** : ஸார், இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன். காரணம் நம்முடைய காடுகளில் சந்தன மரம் தானுக உற்பத்தியாகக் கூடிய ஒரு செல்வம் என்றே சொல்லலாம். அதைப் பாதுகாப்பது மட்டுமல்லாமல் அபிவிருத்தி செய்யவேண்டும், திருடு கிறவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கவேண்டும். இப்போது சாதாரண மரம் வெட்டக்கூடியவர்கள் தவறிப் போய் சந்தன மரத்தை வெட்டிவிட்டால் கடுமையான தண்டனை கொடுக்கப்படுகிறது. ஆனல் லாரியில் போகும் சந்தன மரம் பிடிபடுவது குறைவாக இருக்கிறது. இருந்தாலும் சமீபத்தில் சில கேஸ்கள் பிடிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்படுவதைப் பற்றியும் நான் அறியாமலில்லை. கட்டுப்பாடுகளையும் மீறி, சந்தன மரங் களை வெட்டி எடுத்து வருவதிலும், அப்படி ஏதாவது மாட்டிக்கொண்டு வழக்கு போடப்பட்டாலும் அதிலிருந்து தப்பிக்கொள்வதைக் கலையாகப் பயின்ற சில அதிகாரிகளும் சில கண்ட்ராக்டர்களும் சேர்ந்து இதை ஒரு தொழிலாகவே நடத்தி வருகிறார்கள் என்பது நமக்குத் தெரிகிறது. அதற்கென்றே ஒரு காங்கே இருந்துகொண்டிருக்கிறது. அந்த காங்கை வேரோடு கெல்லி எறிய வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன். இப்போது 5 கிலோகிராமுக்கு அதிகமாக வைத்திருக்கக்கூடியவர்கள், லைஸென்ஸ் வாங்கவேண்டும், இல்லாவிட்டால் நடவடிக்கை எடுக்கப்படும் என்று இருக்கிறது. ஆனல் இது மட்டும் போதுமானது அல்ல. இன்னும் போதுமான பாதுகாப்பு இருக்கவேண்டும். தனியார்களுக்கு சந்தன மரம் இருக்கக்கூடாது என்று பல சந்தர்ப்பங்களில் பல அங்கத்தினர்கள் வற் புறுத்தியிருக்கிறார்கள். அந்த மாதிரி வற்புறுத்தியுள்ளவர்களில் நானும் ஒருவன். தனியார் காடுகளில் இருந்தாலும் சரி, அரசாங்க வன இலாகா வின் காடுகளில் இருந்தாலும் சரி சந்தன மரங்கள் அரசாங்கத்திற்குத் தான் சொந்தம் என்று ஒரு சட்டம் இருக்கவேண்டியது அவசியம். அந்த மாதிரியான ஒரு மசோதா கொண்டுவரவேண்டுமென்ற உத்தேசம் இருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறினார்கள், ஆனல் அப்படிப் பட்ட மசோதா இது வரையில் கொண்டுவரப்படவில்லை. இந்தத் திருத்த மசோதா அந்த உத்தேசத்தோடுதானே என்று முதலில் பார்த் தேன், ஆனல் அது அப்படி இல்லை. அந்த மாதிரி மசோதா கொண்டு வருவதில் என்ன கஷ்டம் இருக்கிறது. தனியார்களுக்கு காடு வைத்துக் கொள்வதற்கே அவசியம் இருக்கிறதா? பட்டா நிலங்களே 30 ஏக்கருக்கு மேல் இருக்கக்கூடாது என்று கொண்டு வர அரசாங்கத்திற்குத் துணிவு வந்ததே, தனியார்களுக்கு என் காடு இருக்கவேண்டும்? அவர்கள், சாதாரண மனிதர்களா? பெரிய பிரபுக்கள், மாஜி மகாராஜாக்கள் ஆகியவர்கள்தான் சொந்தக் காடு வைத்திருக்கிறார்கள். ஆகவே அவர்கள் வைத்துக்கொண்டிருக்கக்கூடிய காடுகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும். அப்படி காடுகளை எடுத்துக்கொள்வதில் காலதாமதம் ஆனாலும் அதில் இருக்கும் சந்தன மரங்களை எடுத்துக்கொள்ள நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சந்தன மரத்தை வெட்டினார்கள் என்ற பெயரில் சாதாரணமாக விறகு கொண்டு போகின்ற வர்கள் காட்டு இலாகாவினரின் ஹிம்சைக்கு உள்ளாகின்றார்கள். குறிப்பாக சேலம் ஜில்லாவிலும், திருச்சி ஜில்லாவில் உள்ள காட்டுப் பகுதியிலும் தலைச் சுமையாக விறகு கொண்டு போகக்கூடியவர்கள், அல்லது சொந்தத் தோட்டத்திலிருந்து விறகு வெட்டி வண்டியில் நகரத்தில் இருக்கின்ற வீட்டுக்குக் கொண்டு போகக்கூடியவர்கள் ஹிம்சைப்படுத்தப்படுகின்றார்கள். அவர்களுக்கு மாதத்திற்கு இத்தனை கேஸ் போடவேண்டும் என்று இருப்பது போலத் தோன்றுகிறது. அவர்களுடைய டைரியைப் பூர்த்தி செய்ய சாதாரண ஆசாமிகளைப் பிடித்து வழக்குப் போடுவது என்ற முறையில் ஃபாரெஸ்ட் இலாகா பொது மக்களுக்குத் தொல்லையாக இருக்கிறது போலீஸ் இலாகாவிற்கு அடுத்தபடி மக்களிடத்தில் செல்வாக்கு இழந்து வெறுப்புக்கு ஆளாகியிருப்பது ஃபாரெஸ்ட் இலாகா. ஏன் இப்படி இருக்க வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதற்கு இரண்டு வித காரணங்கள் இருக்கலாம். ஃபாரெஸ்டிலே இருக்கும் செல்வத்தை இஷ்டம் போல் திருடலாம், அதற்கு இடைஞ்சலாக இருக் கிறார்கள் என்றால் வெறுப்பு ஏற்படலாம். ஆனல் அவர்களுக்கு வெறுப்பு இல்லை. ஏனென்றால் அவர்களுக்குள் ஒத்துழைப்பு இருக்கிறது. ஏழை

எளிய ஜனங்கள், கட்டணத்தைக் கட்டி, தழை பொறுக்க, அல்லது விறகு வெட்டப் போகிறவர்கள் ஆகியவர்களுக்குத் தொல்லை கொடுக்கிறார்கள். பக்கத்து கிராமங்களில் குடியிருக்கக்கூடிய விவசாயிகள், தொழிலாளிகள், 10-12 அணுவிற்கு விறகு வெட்டி விற்று ஜீவனம் நடத்தக் கூடியவர்களுக்குத் தொல்லை கொடுக்கிறார்களே தவிர, கள்ளக் கடத்தல் தொழிலில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்கள் செழிப்பாக இருக்கிறார்கள், உற்சாகமாக இருக்கிறார்கள், எந்த வழக்கு மன்றத்திற்கும், எந்த நீதி மன்றத்திற்கும் அவர்கள் பயப்படுவதில்லை என்ற முறை இருக்கிறது. இதற்கு என்ன நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் யோசனை செய்திருக்கிறார்கள் என்று இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னொரு யோசனை. சந்தன மரத்திற்கு ஒரு ஆபத்தான வியாதி ஏற்பட்டிருப்பதாக அறிந்து வருத்தப்படுகிறேன். இதை குணப்படுத்த வேண்டும். இந்த வியாதி அதிகமாகப் பரவிக்கொண்டிருக்கிறது, இந்த வியாதி பீடித்தால் மரத்தின் மதிப்பு ரொம்பவும் குறைந்துவிடுகிறது என்று சில அதிகாரிகள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இந்த வியாதியை குணப்படுத்த, அல்லது வராமல் தடுக்க இதுவரையில் நடத்திய ஆராய்ச்சிகள், சிகிச்சை நடவடிக்கைகள் போதுமானதாக இல்லை என்று அறிய வருந்தவேண்டியதாக இருக்கிறது. இது நமக்கு அன்னியச் செலாவணியைத் தேடிக்கொடுக்கக்கூடிய பொருள். தமிழ் நாட்டுப் பண்புக்கேற்ப எந்த நல்ல காரியத்திற்கும் உபயோகப்படுத்தக்கூடிய பொருள். அப்பேர்ப்பட்ட பொருளை அழிய விட்டுவிடக்கூடாது, உற்பத்தியைக் குறைய விட்டுவிடக்கூடாது, இப்படி இந்த மாதிரி வியாதிகள் வராமல் செய்ய என்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமோ, அதை இன்னும் விருத்தி செய்ய என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமோ அதற்கு தொகை செலவானாலும் இதைப் பாதுகாக்க, இந்த வியாதியைத் தடுக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சொல்லி இந்த மசோதாவின் ஷரத்துக்களை நான் ஆதரிக்கிறேன்.

10-00 a.m. **Sri T. IRUSAPPAN :** தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன். அதே நேரத்திலே இம்மாதிரி சந்தனக்கட்டைகளை நெடு நாட்களாக ஒரு சிலரால் வியாபாரமாகக் கருதி, அதைக் கள்ளக் கடத்தல் செய்துகொண்டு வருகிறார்கள். இதிலே சர்க்கார் கூடுமானவரைக்கும் கவனம் செலுத்தினாலும், இந்த இலாகாவிலே இருப்பவர்கள் உடந்தையாக இருந்து சில கள்ளக் கடத்தல் காரியம் நடக்கிறது என்பதை பலரும் பரவலாக அறிந்த உண்மை. அதைத் தடுப்பதற்கு அவர்களை யெல்லாம் பிடித்து, அதற்குக் கடுமையான தண்டனை கொடுப்பதற்கு சர்க்கார் போதிய கவனம் செலுத்த வேண்டும். அதற்கு அதிகாரிகளுக்குத் தகுந்த உத்திரவு பிறப்பிக்க வேண்டும். அதே நேரத்திலே காட்டிலாகாவில் இருக்கக்கூடிய காவலர்கள், அவர்களுக்குப் போதிய சம்பளம் உயர்வு இல்லாத காரணத்தால் இம்மாதிரி பல முறைகளைக் கையாள வேண்டிய நிலைமை எழக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அவர்களுக்குப் போதிய ஊதியம் கொடுக்கப்பட வேண்டும். அதே நேரத்தில் ஏழையாக இருக்கக்கூடியவர்கள், அன்றாடம் விறகு வெட்டி பிழைக்கக் கூடியவர்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் வழக்கமாக விறகு வெட்டிக்கொண்டு வந்தால், அவர்களை இம்சிக்கக்கூடிய நிலைமை இருக்கிறதே தவிர, இம்மாதிரி பெரிய திருட்டுப் போவதைப் பிடிப்பதற்கு அவர்கள் ஆவன செய்வதில்லை. ஏழைகளாக இருக்கக் கூடியவர்கள், ஓரணு, இரண்டணு கட்டிவிட்டு, விறகு கொண்டு வரும்போது, அவர்கள்மீது கேஸ்கள் போட்டு இம்சிக்கப்படுகிறார்கள். இதை சர்க்கார் கவனித்து, இம்மாதிரி ஏழைகளாக இருக்கக்கூடியவர்களையும், அன்றாடம் விறகு வெட்டி பிழைக்கும் பாமர மக்களையும், குறிப்பாக தாழ்த்தப்பட்ட மக்களுக்கு பாதுகாப்பளிக்க வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொள்கிறேன்.

அதே நேரத்திலே காட்டிலே தனிப்பட்டவர்கள், ஜாகிர் என்று சொல்லக் கூடிய மலைவாசிகள், அங்குள்ள பெரிய மிராசுதார்கள் தனிப்பட்ட முறையிலே சந்தன மரங்களை பயிர் செய்து கொண்டு வருகிறார்கள். அது

28th September 1961] [Sri T. Irusappan]

அவர்கள் கையிலே இருக்கிற காரணத்தினால், சர்க்கார் நாட்டிலே இருக்கக் கூடிய மரங்களையும் மற்ற மரங்களோடு சேர்த்து வெட்டுவதற்கு ஏதுவாக இருக்கிறது. ஏனென்றால், அந்த காடுகள் ஜாகிர் என்று சொல்லக் கூடியவர்களுக்கு உரிமையாக இருப்பதால், அவர்கள் எடுத்துக்கொண்டு போகக்கூடிய நேரத்திலே எடுத்துக்கொண்டு போவதற்கு வசதியாக இருக் கிறது. ஆகவே அந்த மாதிரி சந்தனக் கட்டைகள் போவதையும் சர்க்கார் தடுக்கவேண்டும். அதற்கு தனிப்பட்டவர்கள் வசம் இருக்கக்கூடிய ஜாகிரி யும், காட்டையும் சர்க்காரே எடுத்துப் பராமரிப்பதற்கு வேண்டிய நட வடிக்கைகளை மேற்கொள்ளவேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொள்கிறேன்.

அதே நேரத்திலே, சேலம் திருச்சி போன்ற இடங்களிலே சந்தன மரங்கள் அதிகமாக இருக்கின்றன என்ற உண்மை கனம் அமைச்சர் அவர்களுக்கும் தெரியும். அதனால் சந்தனத் தொழிற்சாலைகள் வைத்தால், இன்றையத் தினம் தமிழ் நாட்டிற்கு வேண்டிய சந்தனத் தைலம், அதே நேரத்திலே சந்தன பத்திகள் போன்ற பிற பொருள்களும் உற்பத்தி செய்ய முடியும். ஆகவே, திருச்சி, சேலம் போன்ற இடங்களில் இதற்கான தொழிற்சாலை களையும் ஏற்படுத்தி, தொழில் வாய்ப்பை உண்டாக்க வேண்டுமென்று இந்த நேரத்திலே கேட்டுக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள் கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN** : ஸார், நமக்கு முன்னால் விவாதத்திற்கு வந்திருக்கக்கூடிய இந்த மசோதாவை வரவேற்கிறேன். எனக்கு முன்பு பேசிய திருவாளர் எம். கல்யாணசுந்தரம் அவர்கள் மிகத் திட்டவட்டமாக எடுத்து விளக்கிக் கூறியிருக்கிறார்கள். அது மாத்திர மல்ல. இப்போது சந்தனக்கட்டை என்று சொன்னால், அது சாதாரண விஷயமல்ல. போன வாரத்தில்கூட, நான் இந்த சட்டசபையிலே சாண்டில் வுட் ஆயில் தயாரிப்பதற்கான வாய்ப்பு இந்த அரசாங்கத்திற்கு கிடையாதா ? ஏற்கெனவே தனியார் ஒருவர் வைத்துக்கொண்டு வந்தார். அது இப் போது மூடப்பட்டு இருக்கிறதே, அதையாவது சர்க்கார் எடுத்துக்கொண்டு நடத்துமா ? என்று கேட்ட நேரத்திலே, கனம் அமைச்சர் அவர்கள்கூட பதில் கொடுத்தார்கள். சாண்டில்வுட் ஆயில் தயாரிப்பதைவிட, அதை அப்படியே விற்பதிலேதான் ரொம்ப அதிகப்படியான லாபம் கிடைக்கிறது என்று சொன்னார்கள் அதிலே குறிப்பாக, ஒரு ரூபாய் விற்பதை 10 ரூபாய்க்கு மேற்கொண்டு விற்பதாக இருக்கிறதா அல்லது அதற்கு மேலும் விற்கக்கூடிய நிலைமை இருக்கிறதா அல்லது தங்கத்தைவிட அதிக விலை கிடைப்பதாக இருக்கிறதா என்று மதிப்பிட்டுப் பார்த்தால், எனக்குத் தெரிந்தவரையில் இது சாதாரண ஆட்களால் வெட்டி எடுத்துக்கொண்டு போகக்கூடிய நிலைமையில்தான் இருக்கிறது. பெரிய மனிதர்கள் என்று சொல்லக்கூடியவர்கள், ஆட்களை வைத்து அதை வெட்டிக் கொண்டு போகிறார்கள். அப்படி வெட்டிக்கொண்டு போவது, சாதாரண ரூபத்திலே போகிறதா என்றால், அதுவும் கிடையாது. சிறிய துண்டுகளாக வெட்டி, அதை ரொம்ப அழகாக பெட்டியிலே போட்டு, அதுவும்கூட ரயிலிலே மூன்றாவது வகுப்பிலே போவதில்லை, லாரியிலேயும் போவதில்லை, முதல் வகுப்பிலே போகிறது. அப்படி எடுத்துக்கொண்டு போவதை பம்பாய், கல்கத்தா, டெல்லி போன்ற வடநாட்டுக்குக் கொண்டுபோய், பேஸ் பவுடர் போன்ற பல ரூபத்திலே இதற்கு அதிகப்படியான விலை கிடைக்கக்கூடிய, விற்கக்கூடிய காரணத்தினாலே இருப்பதால்தான், இதுபோன்ற விலை உயர்ந்த சந்தனக் கட்டைகளை இன்றைக்கு இவ்வாறு திருட்டுத்தனமாக எடுத்துக்கொண்டு போய் பாழ்படுத்தக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவேதான் இதுபோன்ற நல்ல லாபம் தரக்கூடிய விஷயத்திலே கனம் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தி, எந்தெந்தப் பொருள்கள் அதி லிருந்து இன்றைக்குச் செய்யப்படுகிறதோ, அதுபோன்ற பொருள்களை செய்யக்கூடிய விதத்திலே சர்க்கார் துறையிலே ஆரம்பிக்கக்கூடிய நிலைமை இருக்குமானால், அந்த லாபத்தை சர்க்காரே அடைவதற்கு வழியிருக்கும். அது மாத்திரமல்ல. ஏழைகள் அதனால் பாதிக்கக்கூடிய நிலைமை இருக்க முடியாது. மேலும் அதிகப்படியான காவல் போட்டு, இதை நல்ல

முறையிலே பந்தோபஸ்து செய்யக்கூடிய நிலைமை இருக்க வேண்டும். தனியார் இடத்திலே இருக்கக்கூடிய, காட்டிலே இருக்கக்கூடிய சந்தனக் கட்டைகளை யெல்லாம்கூட, இன்றைக்கு தாங்களே எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படித் தாங்களே எடுத்துக்கொண்டு, மேலும் அதிகப் படியான சந்தன மரங்களை இந்தச் சர்க்காரே உற்பத்தி செய்யவேண்டும். அப்படி உற்பத்தி செய்யும்போது, இந்த விலை உயர்ந்த சந்தனக் கட்டைகளை திருட்டுத்தனமாக கொண்டுபோக முடியாத அளவுக்கு அதிலே கவனமும் செலுத்த வேண்டும். எனக்குத் தெரியும், பல பேர்கள் ஹைகோர்ட் வரைக்கும் போய் ஒன்றுமே இல்லாமல் தப்பிக்கக்கூடிய நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இப்படி செய்பவர்களுக்கு சும்மா சாதாரண தண்டனை கொடுக்கக் கூடாது. அப்படி சாதாரணத் தண்டனை கொடுத்தால் போதாது. இதிலே விதித்திருக்கக்கூடிய தண்டனை சாதாரண தண்டனை, தான். தண்டனையை உயர்த்த வேண்டுமென்று சொல்வதற்குக் காரணம் லட்சக் கணக்கான மதிப்புள்ள பொருள்களாக இந்த சந்தனக் கட்டைகள் இருக்கின்றன. ஆகவே, மேலும் இந்த தண்டனையைக் கடுமைப்படுத்த வேண்டும், அந்த முறையிலே இந்தச் சட்டம் அமைக்கப்பட வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு, நான் என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Deputy Speaker, Sir. While supporting the Bill under discussion I would like to make a few observations. From sandalwood we get soap, scents, etc. Of late in the recent auction the bid has considerably gone up and the income on that account to the State Government has also gone up by so many thousands of rupees. In spite of the rigid control that has been exercised by Government, we still hear reports about the illicit export of sandalwood. Even though deterrent punishments have been provided for in the old Act and also in the new Act, still there has been wholesale export of sandalwood to the neighbouring States. While we admit that illicit export should be put down by an iron hand, still Government should relax the rules so far as temple authorities and bona fide users are concerned.

We find that on account of this timber transit visa, people are put a lot of inconvenience and as Sri M. Kalyanasundaram has pointed out, here and there we find there has been undue harassment and even bullock carts have been detained at the chowki posts. I know a case where they have been detained for the whole night. Such cases should be avoided. While granting permission, some permanent licence to temple authorities and bona fide users may be given without adopting all these procedures. The present procedure involves a lot of delay and inconvenience, even if it is 5 kilogrammes. I am of opinion that some more quota should be given to the private users and to the temples. While I appreciate Government's intention to put down all the illegal things at least this aspect of the question should be taken into consideration and some leniency should be shown to the private users by giving them the necessary permission. Thank you.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்த மசோதாவை கனம் அங்கத்தினர் கள் எல்லோரும் ஏற்றுக் கொண்டிருப்பது குறித்து நான் அவர்களுக்கு

28th September 1961] [Sri M. Bhaktavatsalam]

நன்றி செலுத்துகிறேன். இம்மாதிரி கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொண்டு, சந்தன மரங்கள் திருடுவதைத் தவிர்க்க வேண்டும் என்பதிலே எல்லோருக்கும் ஒரே மாதிரி அபிப்பிராயம் இருக்கிறது.

ஆனால், முதலில் பேசிய கனம் அங்கத்தினர் கலியாணசுந்தரம் அவர்கள் முக்கியமாக அதிகாரிகளைப்பற்றி சொல்ல வேண்டுமென்று சொன்னார்கள். கடுமையாக நடவடிக்கை எடுக்கும்பொழுது அவர்கள் பேரில் கோபம்தான் வருகிறது. முதலில் போலீஸார், அதற்குப் பிறகு காட்டிலாகா அதிகாரிகள், தவறுதல் யாருக்கும் இல்லை என்று நான் சொல்ல வில்லை. நம்மிடத்திலும் இருக்கலாம். வனச் செல்வத்தை பாதுகாக்க வேண்டும், சந்தனச் செல்வத்தை பாதுகாக்க வேண்டும், அதுவும் சந்தனச் செல்வம் ரொம்பவும் அருமையானது. அதைப் பாதுகாக்க வேண்டும் என்று கடுமையான நடவடிக்கை எடுத்தால் அது சில பேர்களுக்கு பிடிக்க வில்லை. பொதுவாக அதிகாரிகள் தவறுதலாக நடந்து கொள்ளுகிறார்கள் என்று சொல்லுவதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. அதிகாரிகள் ஒருவர், இருவர் பேரில் ஏதாவது தவறுதல் இருந்தால் இருக்கலாம். பொதுவாக அவர்கள் நல்ல முறையில் கண்காணித்துத்தான் வருகிறார்கள். இது கஷ்டமான வேலை. அவர்கள் சில சமயங்களில் ஆபத்துக்குக்கூட உள்ளாகிறார்கள். ஊரார் சேர்ந்துகொண்டு அவர்கள் இஷ்டம்போல் எடுத்துக்கொண்டு வருவதைத் தடுத்தால் அவர்களுக்கு ஆத்திரம் வருகிறது. ஆத்திரம் வந்து அவர்கள் அதிகாரிகளுக்கு இடைஞ்சல் செய்கிறார்கள், இடையூறுகூட செய்கிறார்கள். ஆகவே, சட்டத்திலும் இதற்கு உதவி அளிக்கவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது.

மற்றொன்று கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள் தனிப்பட்டவர்களுக்கு ஏன் விட்டுவைக்க வேண்டுமென்று. அவர்களுக்கு காடு எதற்கு என்று சொன்னார்கள். அதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். சந்தன மரங்கள் தனிப்பட்டவர்களுக்கு இருக்கிறது என்றால் காட்டிலே ஒன்றுமில்லை. சொந்த பட்டா நிலத்திலே அவர்கள் பயிரும் இடுவார்கள், வேறு மரங்களும் இருக்கும், நடுவிலே சந்தன மரம் இருக்கும். அதை அவர்களிடத்திலிருந்து அரசாங்கம் எடுத்துக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. வெறுங்காடாக இருந்து அதில் சந்தன மரங்கள் இருந்தால், அதை 'நாஷனலைஸ்' பண்ணலாம். ஆனால் ஒருவருடைய சொந்த பட்டா நிலத்தில் 1 ஏகர், 2 ஏகர் நிலத்தில் நடுவே சந்தன மரம் இருந்தால், அதை 'அக்வையர்' செய்யவேண்டுமென்ற அவசியம் இல்லை. (ஸ்ரீ எம். கலியாணசுந்தரம்: மரத்தை மட்டும் எடுத்துக்கொள்ளலாமே.) அவர்கள் சந்தன மரத்தை வெட்டினால் அதை சர்க்காருக்குத்தான் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனை இருக்கிறது. சர்க்கார் அந்த மரத்தை எடுத்துக்கொண்டு அதற்கு என்ன மதிப்பு என்று போட்டு பணத்தை அவர்களுக்கு கொடுக்கிறார்கள். அவர்கள் மரத்தை தனியாக விற்கவே முடியாது. இது கண்டிப்பாக அமுலில் இருக்கிறது. தனிப்பட்டவர்கள் பட்டா நிலத்திருக்கிற சந்தன மரத்தை வெட்டினால் அதைச் சர்க்காருக்குக் கொடுக்க வேண்டும், அதற்கு அவர்கள் சர்க்காரிடமிருந்து பணம் வாங்கிக்கொள்ளலாம். அதற்கு ஒரு மதிப்பு போட்டு பணம் கொடுக்கிறோம். அம்மாதிரி மரங்கள் எல்லாவற்றையும் வாங்கி அரசாங்கத்தினுடைய ஸ்டாக்கில் சேர்த்து, பிறகு பொது ஏலத்திலே விற்கப்படுகிறது.

காட்டிலிருந்து ஏழைகள் மரங்களைக் கொண்டுவருகிறார்கள், அவர்களை அதிகாரிகள் தொந்தரவு செய்கிறார்கள் என்று சொன்னார்கள் கனம் அங்கத்தினர் வி. கே. ராமசுவாமி முதலியார் அவர்கள். 'டிம்பர் டிரான்ஸிஸ்ட் ரூல்ஸ்' இருக்கின்றன. சந்தன மரத்திற்கு மாத்திரம் அல்ல. காடுகளில் இருக்கிற மற்ற எல்லா மரங்களையும் திருடுவதற்கு இடம் கொடுக்காமல் இருக்க வேண்டும் என்பதுதான் நோக்கம். சொந்தப் பட்டா நிலமும் இருக்கிறது. பக்கத்திலேயே காட்டு நிலமும் இருக்கிறது. சொந்த நிலத்திலிருந்து எடுத்துக்கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டு, காடுகளிலிருந்து திருடிக்கொண்டு வருவதற்கு இடம் கொடுக்கக் கூடாது என்பதற்

காகத்தான் இந்தக் கட்டுப்பாடு. முன்பு எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் இதுபற்றி குறிப்பிட்டபொழுது இதைத் தளர்த்துவதாகச் சொன்னேன். தளர்த்தியிருக்கிறோம். ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடமிருந்து பெர்மிஷன் வாங்கிக்கொள்ளலாம், காட்டிலாகா அதிகாரிகளிடமிருந்தும் வாங்கிக் கொள்ளலாம் என்று வைத்திருக்கிறோம். அவ்வாறு அதைத் தளர்த்தி யிருக்கிறோம். இருந்தாலும் கட்டுப்பாடு ஓரளவுக்கு வேண்டியிருக்கிறது.

ஐந்து கிலோகிராமுக்கு மேலே அதிகமாக வேண்டியிருக்கலாம் கோவில் போன்றவைகளுக்கு என்று சொன்னார்கள். அம்மாதிரி வைத்துக்கொள்ளு வதற்கு தடையில்லை. ஆனால் ஜில்லா பாரெஸ்டு அதிகாரி அனுமதி பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு அனுமதி பெற்றுக்கொண்டு வைத்துக் கொள்ளலாம். ஏனென்றால் அப்பொழுதுதான் நமக்குத் தெரியும் யார் எங்கே வைத்திருக்கிறார்கள், தவறு நடக்கிறதா என்று. கோவில், சுவாமி என்று சொல்லிவிட்டு வேறு வியாபாரம் செய்தால் தெரிந்துகொள்ள முடியும். அதனால்தான் 5 கிலோகிராமிற்கு மேலே வைத்துக்கொள்ளு வதற்கு லைசென்ஸ் வேண்டும் என்று வற்புறுத்துகிறோம்.

'ஸ்பைக் டிஸிஸ்' என்று சந்தன மரத்திற்கு வருகிற வியாதியைப் பற்றிச் சொன்னார்கள். அது கவலைப்படக்கூடிய விஷயம்தான். அதுபற்றி ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. ஆராய்ச்சி செய்து, அதைத் தவிர்க்க வேண்டும், சந்தன மரங்களை பாதுகாக்க வேண்டும் என்று நாம் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறோம்.

கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள், முன்பு அபிப்பிராயம் தெரி வித்தது போல, இதை எண்ணையாக மாற்றி விற்கலாம், லாபம் கிடைக்கும் என்று சொன்னார்கள். இதுபற்றி நாம் நன்றாக பரிசீலனை செய்து பார்த் திருக்கிறோம். தனிப்பட்டவர்கள் துறையிலே இப்பொழுது ஆயில் பாக்டரி இருக்கிறது. கொஞ்சம் ஆயில் அன்னிய நாடுகளுக்குக்கூட ஏற்றுமதி செய்யப்படுகிறது. அன்னிய நாட்டில் இதற்கு நல்ல மார்கெட் இருக்கிறது. அன்னிய நாட்டில் ஆயில் என்ன விலை போகிறது, அன்னிய நாட்டு மார்கெட் எப்படியிருக்கிறது என்பதை யெல்லாம் ஆராய்ந்து பார்த்தால், வேறு ஒரு தொல்லையும் இல்லாமல் சந்தனமரத்தை ஆண்டுதோறும் பாக்டரி வைத்திருப்பவர்களுக்கு விற்பதுதான் அரசாங்கத்திற்கு லாபம் என்பது நிச்சயமாக புலப்பட்டிருக்கிறது. மைசூர் அரசாங்கம் ஆயில் உற் பத்தி செய்கிறார்கள். அவர்களுக்குக்கூட மரம் போதவில்லை. நம் ராஜ் யத்தில் வந்து மைசூர் அரசாங்கமும் வாங்குகிறார்கள். இப்பொழுது நடை பெறுகிற முறைதான் சர்க்காருக்கு மொத்தத்தில் லாபம் தரக்கூடியதாக இருக்கிறது என்பதை உணர்ந்துதான் ஆயில் பாக்டரி வைப்பதை தனிப் பட்டவர்களுக்கு விட்டு விட்டோம்.

தண்டனை போதாது என்று சொன்னார்கள். எப்பொழுதும் சட்டம் செய்கிறபொழுது சாதாரணமாக நாம் குறைந்தபட்ச தண்டனை என்று போடுவது இல்லை. அதனால் ஒரு வருஷம் என்று போட்டிருக்கிறோம். அபராதமும் போட்டிருக்கிறோம். அதற்கு மேலே போடவேண்டிய அவசிய மில்லை என்றுதான் கருதுகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Forest (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 42 of 1961), be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2*

DEPUTY SPEAKER : The question is—

"That clause 2 do stand part of the Bill."

28th September 1961]

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move the following amendment—

" In the proposed new section 21 (1) of the Principal Act, for the words " one year ", substitute the words " not less than one year and not exceeding two years "."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சந்தணமரத்தைப்பற்றி பிரமாதமாக வானளாவ புகழ்ந்து விட்டு, இதனுடைய முக்கியத்துவத்தை பிரமாதமாக உணர்ந்ததற்குப் பிறகு இப்பொழுது ஒரு வருஷம் வரையில் நாங்கள் தண்டனை விதிக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். ஒரு வருஷம் என்று புத்தகத்தில் இருக்கலாம். பதினைந்து நாட்கள், ஒரு மாதம் என்று கூட கோர்ட்டில் தண்டனை கொடுக்கலாம். இதுதான் இப்பொழுதுள்ள நிலைமை, கோர்ட்டுகளில் நடப்பது. ஆகையினாலேதான் நான் சொல்லுகிறேன் இவ்வளவு முக்கிய மான மரம் திருட்டுப்போவதை தடுக்க வேண்டுமென்றால் தண்டனை கடுமை யாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பெரிய ஆட்கள் ஒரு மாதம் தானே, மூன்று மாதங்கள்தானே உள்ளே இருந்துவிட்டு வந்துவிடலாம் என்ற அளவுக்கு துணிந்து இன்னும் கொஞ்சம் தீவிரமாக இதில் ஈடுபடக் கூடிய நிலைமைதான் ஏற்படும். ஆகையினாலே சந்தண மரங்கள் திருட்டுப் போகாமல் இருக்க வேண்டும், அதற்காக கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்ற மனோபாவம் இருக்குமானால், குறைந்த பட்சம் ஒரு வருஷம் தண்டனை, அதை இரண்டு வருஷங்கள் வரையில் நீடிக்கலாம் என்ற முறையில் இருந்தால்தான் அவர்களுக்கு பயம் பிடிக்கும், சர்க்கார் சொத்தும் நல்ல முறையில் பாதுகாக்கப்படும். ஆகவேதான் நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன் '**one year**' என்பதற்குப் பதிலாக, **not less than one year and not exceeding two years** என்று போடுவதற்கு. ஆகவே, தயவுசெய்து கனம் அமைச்சர் அவர்கள் அந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRI R. SRINIVASA IYER : Sir, this is an Act of 1882. I am having the Eighth Edition (1952) of the Madras Code with me and I find that " Magistrate " has been defined as a Magistrate of the first or second class and includes a Magistrate of the third class when he is specially empowered by Government to try forest offences." I also find that in Chapter VI of the Act there is provision for the appointment of a Forest Court. Now we are fixing a fine of Rs. 10,000. Chapter VI dealing with Forest Court also says that the Court will be governed by the provisions of the Criminal Procedure Code. Sir, in the Criminal Procedure Code I find that First-class Magistrates can award a sentence only up to two years' imprisonment and impose a fine up to Rs. 2,000. If the fine goes above Rs. 2,000 and the maximum is fixed at Rs. 10,000, possibly the case will have to be tried by a Sessions Court. There is provision in the Forest Act for confiscation, for compounding offences, for appeals under section 14 and for the trial of offences by Magistrates. If the term " Magistrate " as defined in section 2 of the old Act refers only to a First-class Magistrate, I would like to have an elucidation from the Government as to whether they intend that these cases should go to a Sessions Court. I do not

say that they should not, but the question is that there should be a preliminary enquiry and all that. In the new amended sections 21, 26 and 36, we are raising the fine to Rs. 10,000. While doing so, I think it will be better if the Government take into consideration the points that I have just now raised. It is no doubt necessary that we shouldd take care to see that sandalwood was not illicitly cut and removed from the forests. But, the point that I have raised should be cleared. Because, we do not have any procedure evolved enabling the Magistrates to deal with such cases, and they are empowered to levy only a lesser amount as fine. That is what I see from the Criminal Procedure Code. I am not able to find any provision in the Forest Act also regarding this aspect of the matter. So, I request that proper provision may be made to clear the point raised by me with a view to implementing the punishment that the Government want to impose on the offenders coming under this Act.

**Sri M. KALYANASUNDARAM** : ஸார், இந்தப் பிரிவிலே நண்பர் கோதண்டராமன் திருத்தத்தை அப்படியே ஏற்றுக்கொள்ளா விட்டாலும்கூட, சிறை தண்டனை அவசியம் என்பதை உணர்ந்து—இப்பொழுது இருப்பது அபராதமோ அல்லது சிறை தண்டனையோ என்பது—அபராதம், சிறை இரண்டுக்கும் என்று, " ஆர் " என்பதற்குப் பதிலாக, " அண்ட் " என்று இருந்தால், குற்றம் செய்கிறவர்களுக்கு பயம் இருக்கும். ஆகவே அந்த விதமாக நிறைவேற்ற வேண்டும் என்பதை கனம் அமைச்சரவர்களே ஒத்துக்கொண்டால் நன்றாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

* **The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தக் குற்றத்திற்கு இன்னும் கடுமையான தண்டனை இருக்க வேண்டும், அதற்குரிய வகையில் சட்டம் அமைய வேண்டும் என்று அங்கத்தினர்கள் சொல்வதை நான் வரவேற்கிறேன், பாராட்டுகிறேன். கடுமையான தண்டனை இருந்தால்தான் பயம் இருக்கும் என்பது உண்மைதான். ஆனால், நாம் சாதாரணமாக இப்படிச் சட்டம் செய்யும்போது எல்லாச் சட்டங்களிலும், குறைந்த பட்ச தண்டனை இவ்வளவு என்று போடுவது வழக்கமில்லை, அதிக பட்ச தண்டனையைத்தான் குறிப்பது வழக்கம். நீதிபதிகளே, இந்தச் சட்டத்தின் நோக்கத்தை உணர்ந்து தண்டனை வழங்குவார்கள். கனம் கல்யாணசுந்தரம் சொன்னதுபோல, சிறை தண்டனை, அபராதம் என்று இரண்டும் போட வேண்டுமானால், இதில் குற்றங்கள் பலவிதமாக இருக்கும். சில நேரங்களில் " டெக்னிகல் " குற்றம் என்று இருக்கலாம். ஐந்து கிலோ கிராம் என்பதற்குப் பதிலாக, தெரியாத காரணத்தினால், ஆறு கிலோகிராம் இருக்கலாம். அதையும் கவனிக்க வேண்டும். கனம் அங்கத்தினர் கோதண்டராமன் சொன்னதுபோல குறைந்தபட்ச தண்டனையை குறிப்பது சரியல்ல. ஆகவே, சட்டத்தை அப்படியே நிறைவேற்றுவதுதான் நல்லது. பின்னால் அனுபவத்தின்பேரில் அவசியம் ஏற்பட்டால், ஏதாவது மாற்றம் வேண்டுமானால், அதைச் செய்யலாம்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீனிவாச அய்யர் 10 ஆயிரம் ரூபாய் அபராதத்தைப் பற்றிச் சொன்னார்கள். அது கிரிமினல் ப்ரொசீஜர் கோட்படித்தான் நடக்கும். அதற்கு மேல் பின்னால் விதிகள் என்ன என்று விதிக்கப்படும். அதைப் பற்றி பின்னால் பார்த்துக் கொள்ளலாம். இப்போதைக்கு அப்படியே நிறைவேற்றுவதுதான் சரியாக இருக்கும். அப்படியே இந்த மசோதாவை ஒத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment was put and lost.

Clause 2 was put and carried.

Clauses 3, 4 and 5 were put and carried.

28th September 1961]

*Clause* 6

DEPUTY SPEAKER : In view of an earlier verdict of the House on an identical amendment, the amendment given notice of by Sri V. K. Kothandaraman to this clause is out of order.

Clause 6 was put and carried.

Clause 7 was put and carried.

*Clause* 8

DEPUTY SPEAKER : The question is—

" That clause 8 do stand part of the Bill."

THE HON. SRI M. BHAKTAVATSALAM :Sir. I move—

" After the words ' Every rule made ', insert the words ' by the Government.' "

ஸார், இந்த திருத்தம் அவசியம் ; மத்திய சட்டமும், ராஜ்ய சட்டமும் இருக்கின்றன ; இந்த அரசாங்கத்தைப் பொறுத்த வரையில், இந்த ராஜ்ய சட்டம் சம்மந்தப்பட்டவரை ரூல்கள் செய்யலாமே தவிர வேறு விதத்தில் செய்வதற்கில்லே. ஆகவேதான் இந்தத் திருத்தம்.

The amendment was put and carried.

Clause 8, as amended, was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

" That the Madras Forest (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 42 of 1961), as amended, be passed."

DEPUTY SPEAKER : The question is—

" That the Madras Forest (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 42 of 1961), as amended, be passed."

The motion was put and carried and the Bill was passed.

## (3) THE MADRAS CITY POLICE (AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I beg to introduce the Madras City Police (Amendment) Bill, 1961 and move—

" That the Bill be taken into consideration."

SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, I move the following amendment—

" That the Madras City Police (Amendment) Bill, 1961 be referred to a Select Committee consisting of—Members of the Legislative Assembly."

SRI M. KALYANASUNDARAM : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The motion and the amendment are before the House for discussion.

[28th September 1961

*** THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மெட்ராஸ் ஸிட்டி போலீஸ் ஆக்ட் பழமை யானது. அந்தச் சட்டத்திலே சில திருத்தங்கள் அவசியம் என்பதை உணர்ந்து, இந்த மசோதா கொண்டுவரப்பட்டு இருக்கிறது. ஒரு திருத்தம் என்னவென்றல், இந்த சட்டத்தின்கீழ், கமிஷனர் உத்தரவு கொடுப்பதில், ஊர்வலங்கள், கூட்டங்கள், மற்றவைகளுக்கு, கால வரம்பு இல்லை. ஆனல் ஹை கோர்ட் ஒரு முறை அபிப்பிராயம் கூறினர்கள், ஒரு வரம்பு வேண்டு மென்று. ஆகவே, அது 15 நாட்களுக்குத்தான், அதற்கு மேல் என்றல், அரசாங்கத்தின் அனுமதியின் பேரில் தான் நீடிக்க வேண்டும். ஆகவே, கமிஷனருக்கு 15 நாட்களுக்கு மட்டும் உத்தரவு போடும் அதிகாரம் இருக்கும். அது ஒரு திருத்தம்.

மற்றொரு திருத்தம் இருக்கிறது. அதாவது வெளியில் கொண்டு போவதைப்பற்றி, அதைத் தடுக்கலாம் என்று சட்டம் இருக்கிறது. இப் பொழுது கொடும்பாவி கட்டி இழுக்கிறர்கள். அதாவது ''எபிஜி'' என்று சொல்லுவார்கள். உயிருடன் இருக்கிறவர்களை செத்துபோனதாகக் காண பித்து அதைக் கட்டி இழுப்பது. இப்படி இழுப்பதால் சிலருக்கு மனது புண்படுகிறது. அது சரியல்ல. சாதாரணமாக செத்துப்போனவரை அப்படி இழுப்பது உண்டு. அந்தப் பழக்கம் சில இடங்களில் இருக்கிறது. அதாவது மழை பெய்யாவிட்டால் மழையைக் கொண்டுவருவதற்கு கொடும் பாவி கட்டி இழுக்கும் வழக்கம் இருக்கிறது. அது யார் மனதையும் புண்படுத்துவதாகாது. அதை அனுமதிக்கலாம். அதற்கெல்லாம் கமிஷனர் ஆப் போலீசுக்கு அனுமதி கொடுக்க இடம் இருக்கிறது. ஆனல் மற்றவர்களது மனது புண்படும்படியாக கொடும் பாவி கட்டி இழுப்பவர்களைத் தடுக்க கமிஷனர் ஆப் போலீசுக்கு அதிகாரம் கிடையாது. அதைத் தடுக்கவும் முடியாது. அதைத் தடுக்க இடம் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் திருத்தம் கொண்டுவரப்பட்டிருக் கிறது.

10-80 a.m.

இந்தச் சட்டத்தில் மற்றொரு முக்கியமான திருத்தம், ஹோட்டல் களுக்கு லைசென்சு கொடுக்கிறோம், அதை வைத்துக்கொண்டு சில ஹோட் டல்கள் துஷ்பிரயோகம் செய்கிறது; அதை இப்பொழுது தடுக்க முடிய வில்லை. அப்படி துஷ்பிரயோகம் செய்யக்கூடியவர்களைத் தடுக்க இப்பொழுது சட்டம் இல்லை. அவர்களுடைய லைசென்சை கான்சல் பண்ணுவதற்கு இடம் இல்லை. அதற்கு அனுமதி கொடுக்க வேண்டும் என்ற அளவில் தான் இந்தத் திருத்தம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதில் சில குறை பாடுகள் இருக்கின்றன. அதற்கு அனுமதி கொடுக்கக்கூடிய அளவில் இந்த மூன்றுவது திருத்தம். வேறு ஒன்றும் இல்லை. ஆகவே இந்த மசோதாவை பொது மக்களுடைய அபிப்பிராயத்திற்கு விடவேண்டிய அவசியமில்லை. கனம் பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் இதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பி பரிசீலனை செய்ய வேண்டும் என்று சொல்லுகிறர். அப்படி விடவேண்டிய அவசியமில்லை என்றுதான் நான் சொல்வேன். ஆகவே இந்த மசோதாவை இப்படியே ஏற்றுக்கொண்டு இப்பொழுதே பரிசீலனை செய்து இதை நிறைவேற்ற வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

**SRI S. PAKKIRISAMI PILLAI** : கனம் தலைவர் அவர்களே, இந்த சென்னை நகர போலீஸ் சட்ட திருத்த மசோதாவின்மீது சில வார்த்தைகளைச் சொல்ல கடமைப் பட்டிருக்கிறேன். இந்த நகர போலீஸ் சட்டத்தில் செக்ஷன் 41 ன் கீழ் கூட்டங்கள் போடுவதற்கு, ஊர்வலங் கள் நடத்துவதற்கு ஒரு ஒழுங்கான முறையை கடைப்பிடிக்க வேண்டும் என்ற ரீதியில் இந்த திருத்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. கூட்டங்கள் போடுவதற்காக தனி பிரஜா உரிமையை ஏற்கெனவே நாம் வைத்துக்கொண்டிருக்கிறோம். கூட்டங்களை தடை செய்வதற்கு யாருக்கும் அதிகாரம் இருக்கக்கூடாது. பொது மக்களுக்கு தீமை விளைவிக்காத நிலையில் கூட்டம் போடும்படியான நிலைமை ஏற்பட்டால் அதற்கு வேறு காரணங்களைக் காட்டி தடை செய்யக் கூடாது. இன்னொரு இடத்தில் கூட்டம் நடக்கிறது அதனல் இந்த இடத்தில் கூட்டம் போடக்கூடாது,

28th September 1961] [Sri S. Pakkirisami Pillai]

அதற்கு அனுமதி, கொடுக்க முடியாது என்று சொல்லக் கூடாது. அந்த அதிகாரத்தை, அந்த உரிமையை யாரும் வைத்துக்கொள்ளக் கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். நாம் அந்நிய ஆதிக்க அதிகாரத் தின் கீழ் இருந்தபோது சிவில் லிபர்ட்டீஸ் யூனியன், பிரஜா உரிமை சங்கத்தை வைத்துக்கொண்டு நம்முடைய ஜனநாயக உரிமைகளை வாங்கு வதற்காக பெரிய கிளர்ச்சிகளைச் செய்தோம். அப்படிச் செய்தது அவ்வளவு பேர்களுக்கும் ஞாபகம் இருக்கும். 144-வது செக்ஷன் அடிப்படையில் விநியோ கிக்கும் நிலைமைபோய் 41-வது செக்ஷனில் இந்த மாதிரியான கடுமையான உத்தரவு சிறிது சிறிதாக நுழைத்து மக்களின் சுதந்தரத்தை சுதந்தர வேட்கையை தடுப்பதற்கு இந்தச் சட்டம் உதவும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அரசாங்கத்தார், முக்கியமாக சில போலீஸ் அதிகாரிகள் இந்த சென்னை நகரத்தில் வெவ்வேறு வழிகளில் கட்டுப்பாடுகளை உண்டாக்கி பொதுக் கூட்டங்களில் பேசும்படியான சில உரிமைகளைத் தடுத்துவிட்டார்கள். கூட்டம் போட்டு அதைக் கேட்டு நடக்கும் அளவில் எவ்வளவோ தொழிலாளர் களுக்கு இருக்கக்கூடிய உரிமை இப்பொழுது நகரத்தில் இல்லை. ஏனென்று சொன்னால் இப்பொழுது கூட்டம் போடுவதற்கு முடியவில்லை. கூட்டம் போடவேண்டும் என்று சொன்னால் அதற்கு லைசென்சுக்கு ஒரு ரூபாய், ரிவினியூ ஸ்டாம்பு ஒட்ட வேண்டியதாக இருக்கிறது. இரண்டு ரூபாய் ஒட்டி அப்ளிகேஷன் போட வேண்டியதாக இருக்கிறது. அதற்கு பத்து நாட்களுக்கு முன்னதாகவே அப்ளிகேஷன் போடவேண்டும். நிலச் சொந்தக்காரர்களுடைய அனுமதி பெற வேண்டியதாக இருக்கிறது. இவை களையெல்லாம் அனுசரித்துக் கூட்டம் போடவேண்டுமானால் அந்த இடத்தில் வேறு கூட்டம் நடைபெறுகிறது அதனால் கூட்டம் போடக் கூடாது என்று சொல்லிவிடுகிறார்கள். இதனால் எவ்வளவு கஷ்ட நஷ்டம் ஏற்படுகிறது என்பதைப் பார்க்கவேண்டும். இந்த நிலைமை இருக்கக் கூடாது. லௌட் ஸ்பீகர் லைசென்சு வாங்குவதற்கு எவ்வளவோ கட்டுப்பாடுகள் இருக்கின்றன. அவைகளைத் தளர்த்த வேண்டும். முக்கியமாக என்னைப் பொறுத்தவரை யில் சென்னையில் தொழிற் சங்கங்கள் சம்பந்தப்பட்ட வரையில் கூட்டங்கள் போடவேண்டியதாக இருக்கிறது. தொழிற் சங்கங்களுக்கு அரசியல் கட்டுப் பாடுகள் வேண்டியதில்லை. பெரிய தொழிற்சாலைகளில் அன்றாடம் எவ் வளவோ தகராறுகள் வருகின்றன. அவற்றை தீர்க்க அவ்வப்போது கூட் டங்களைப் போட்டு பேசி தொழிலாளர்களுக்கு வழிகாட்ட வேண்டியதாக இருக்கிறது. பல கிளர்ச்சிகள் நடவாமல் பார்த்துக்கொள்ள வேண்டிய தாக இருக்கிறது. பல பிரச்னைகளை தொழில் சம்பந்தமாக தீர்த்து வைக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்கு அடிக்கடி கூட்டங்கள் போட்டு பேச வேண்டியதாக இருக்கிறது. அதற்கு பத்து நாட்களுக்கு முன்னதாகவே அப்ளிகேஷன் போடவேண்டும் என்று சொன்னால் அது முடியுமா என்று பார்க்கவேண்டும். முக்கியமான விஷயங்களைப்பற்றி தொழிலாளர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. குழப்பம் உண்டாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. சில முரட்டு முதலாளிகள் இருக்கிறார்கள். அவர்கள் செய்யும் அக்கிரமத்தை நல்ல முறையில் தீர்த்து வைக்க வேண்டியதாக இருக்கிறது. அவர்களிடத்தில் சமாதானமாகப் பேசவேண்டியதாக இருக்கிறது. இவ்வளவு கட்டுப்பாடுகள் இருப்பதால் தொழிற் சங்கத் தலைவர்களால் கூட்டம் போட்டு சொல்ல முடியவில்லை. இதற்கு முன்னால் 144-ஆவது சட்டம் இருந்தது. இப்பொழுது அது வேறு வழியில் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

மேலும் போலீஸ் அதிகாரிகள், பெரிய அதிகாரிகளைத்தவிர சிறிய அதிகாரிகள் மெக்கானிக்கலாக லைசென்சு கொடுக்க முடியாது என்று சொல்லிவிடுகிறார்கள். அனுமதி கொடுக்க வேண்டுமா வேண்டாமா என்று கூட பார்ப்பதில்லை. கலவரம் ஏற்படுமா அல்லது ஏற்படாதா என்று கூட பார்ப்பதில்லை. சட்டத்தை உடனடியாக அமுல் நடத்திவிடுகிறார்கள். அனுமதி கிடையாது என்று கண்டிப்பாக சொல்லிவிடுகிறார்கள். இருக்கக் கூடிய சட்டத்தை மெஷின் கணக்காகத்தான் லகான் பிடிக்கிறார்கள். நிலைமையை பார்ப்பதே இல்லை. சூசகமாக அவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. இப்படி சில போலீஸ் அதிகாரிகள் இருக்கிறார்கள் என்பது என்னுடைய கருத்து. ஆகவே இந்த நிலைமையை தவிர்க்க வேண்டும்.

[Sri S. Pakkirisami Pillai] [28th September 1961

மேலும் சென்னை நகரத்தில் போதுமான கூட்டம் போடும் இடங்கள் கிடையாது. சிறிய நகரங்களில் வேண்டிய இடங்கள் இருக்கின்றன. வேறு இடங்களில் அங்கங்கே ப்ளாட்பாரங்கள் அமைத்திருக்கிறார்கள். வசதியான இடங்கள் வெளியில் இருக்கின்றன. சென்னையைத் தவிர மற்ற இடங்களில் பொது இடங்கள் இருக்கின்றன. மைதானங்கள் இருக்கின்றன. ஆகவே சென்னை நகரத்தில் கூட்டம் போடுவதற்கு வசதிகளை சர்க்கார் செய்து கொடுக்க வேண்டும். அதைச் செய்து வைக்க வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரியான தடைகள் இருப்பதால்தான் சில கட்சிக்காரர்கள் தங்களுடைய எதிர்ப்புகளை காட்டுகிறார்கள். நமது கோட்டைக்கு முன்னால் சில கட்சிக்காரர்கள் தங்களுடைய விவசாயிகளை வைத்துக்கொண்டு தங்களுடைய எதிர்ப்புகளை காண்பிப்பதற்கு தங்களுடைய அபிலாஷைகளை தெரிவிப்பதற்கு சாத்வீகமான முறையில் மறியல் செய்கிறார்கள். அவர்களைத் தடுக்க இந்தச் சட்டம் உபயோகமாக இருக்கும் என்கிற நிலையில் இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்திருப்பதாக நினைக்க வேண்டியதாக இருக்கிறது. இதுமாதிரி செய்தால் போகப் போக எப்படி ஆகும்? போலீஸ் அதிகாரத்தின் கீழே நாட்டு நிர்வாகம் வரும். போலீஸ் அதிகாரத்தின்கீழே நாட்டு நிர்வாகம் வரும்போது மக்கள் மத்தியிலே பெரிய கிளர்ச்சி ஏற்படும். "ஓபன்" ஆக அவர்கள் ஆர்ப்பாட்டத்தை கிளப்பா விட்டாலும், மறைமுகமாக ஆர்ப்பாட்டத்தைக் காண்பிப்பார்கள். அதன் விளைவாக கலவரங்கள் ஏற்பட்டு இராணுவ அதிகாரம் வரக்கூடிய நிலையும் வரலாம். ஆகவே, இம்மாதிரி கட்டுப்பாடுகளை உண்டாக்காமல், தலைவர்களை கூப்பிட்டு நல்ல வழியிலே எப்படி அமைதியை உண்டாக்கலாம், எந்த விதமாகக் கலவரங்களைத் தடுக்கலாம் என்று ஆலோசிக்க வேண்டும். இம்மாதிரியான கட்டுப்பாடுகள் இருக்கக் கூடாது. இதையெல்லாம் ஆலோசிப்பதற்காக ஒரு செலக்ட் கமிட்டி போட்டால் நல்லது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

இந்த மசோதாவில் "**assemblies**" என்று போடப்பட்டிருக்கிறது. இது பழைய சட்டத்தில் இருக்கிறது. அசெம்பிளி என்றால் என்ன? கூட்டம் கூடுவது. மூர் மார்க்கெட்டில் செப்பிடு வித்தைக்காரன் கூட்டம் கூட்டுகிறான் என்றால், அதுவும் "அசெம்பிளி" என்று ஆகிறது. அதை தடுப்பதற்குக் கூட போலீசுக்கு அதிகாரம் இருக்கிறது. அசெம்பிளி முன்னால் கூட்டம் கூடி ஆர்ப்பாட்டம் செய்தார்களே, அதையும் தடுப்பதற்கு அதிகாரம் இந்தச் சட்டத்தின்கீழ் வருகிறது. இதையெல்லாம் பார்க்கும் போது ஏதோ ஒரு சூழ்ச்சி இருக்கிறது என்பதாகத்தான் நாம் காண்கிறோம்.

மேலும், 100 ரூபாய் அபராதம் என்று போடப்பட்டிருக்கிறது. இதிலே வேலை செய்கிறவர்கள்—பொதுக் கூட்டம், ஊர்வலம் நடத்தக் கூடியவர்கள்—சாதாரணமாக பொது சேவை செய்யக் கூடியவர்களாக இருப்பார்கள். பொது சேவை செய்கிறவர்களுக்கு ரூபாய் 100 அபராதம் போட்டால் பின்னால் பொது வாழ்விலே வேலை செய்ய பயப்பட்டு யாரும் முன்வர மாட்டார்கள். இம்மாதிரி ஒரு அபராதம் போடும்படியான நிலை இருக்கிறது. பொது சேவை செய்கிறவர்கள் ஏதோ தங்கள் மனதிலே இருக்கும் வேதனையைத் தெரிவிக்க ஆர்ப்பாட்டம் செய்தால் யாருக்கும் நஷ்டம் இல்லை. அதிகார மனப்பான்மையுள்ள, முதலாளி மனப்பான்மையோடு இருக்கக்கூடியவர்களுக்குத்தான் இப்படித் தடை செய்ய வேண்டும் என்ற யோசனை கிளம்புமே தவிர, சர்வ சாதாரண ஏழைகள் மத்தியிலே வேலை செய்கிறவர்களுக்கு இருக்காது.

அதுவும் தவிர, தொழிற்சங்கக் கூட்டங்களுக்கு விதி விலக்குக் கொடுக்க வேண்டும். தொழிற் சங்கக் கூட்டங்கள் ஒரே இடத்தில் போடுவார்கள். அதுவும் நினைத்தபோது போட வேண்டிய அவசியம் ஏற்படும். அப்படி ஏற்பட்டால், அதற்குத் தடை இருக்கக் கூடாது. அதற்குச் சலுகை காட்டும்படியான நிலையிலே இருந்தாக வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

செக்ஷன் 74–ன் கீழ், "**burning straw**" என்ற வாசகம் பழைய சட்டத்திலே இருந்த போதிலும் கூட, எதற்காக அதைப் போட்டார்கள் என்று நமக்குத் தெரியவில்லை. சாதாரணமாக ஊர்வலம் போகிறது.

28th September 1961] [Sri S. Pakkirisami Pillai]

தப்பட்டை அடித்துக்கொண்டு போகிறார்கள். அது நமத்துப் போய்விட்டால், வைக்கோல் கொண்டுவந்து அதைச் சூடு ஆக்குவதற்குக் கொளுத்துவார்கள். அதைக் கூடத் தடை செய்ய வேண்டுமென்ற நிலை வருகிறது. அல்லாசாமிப் பண்டிகையிலே கட்டை கொளுத்துவார்கள். அது கூட **lighting a bonfire** என்று சொல்லப்பட்டு, தடை செய்யப் படுவதற்கு இடம் ஏற்படும். ஆகவே, இம்மாதிரியான விஷயங்களை ஆலோசித்துப் பார்த்து நல்ல திருத்தங்கள் கொண்டுவரும் வகையில் இதை செலக்ட் கமிட்டிக்கு விட்டுப் பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சென்னை நகர போலீஸ் சட்டத்தை மேலும் திருத்துவதற்கு உரிய இந்த மசோதா, இந்த நேரத்திலே கொண்டுவந்திருக்கும் முறையைப் பார்க்கும்போது நான் மிகவும் வருத்தப்பட வேண்டியிருக்கிறது. இந்த மசோதா எப்படி இருக்கிறது? ஜனநாயகத்தைப் பற்றி எல்லோரும் பேசுகிறோம். ஆனால் ஜனநாயகம் என்றால் என்ன, அது எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றி சுதந்திர இயக்கப் போராட்டம் நடந்த காலத்தில், நாம் எந்த மாதிரியெல்லாம் பேசியிருக்கிறோம் என்பதைச் சற்று ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். மகாத்மா காந்தியடிகள் பேச்சுரிமைக்காக வேண்டி, கூட்டம் கூடுவதற்கு உரிமை வேண்டுமென்று நடத்திய போராட்டத்திலே லட்சக்கணக்கான மக்கள் சிறை சென்றார்கள் என்பதும் நமக்குத் தெரியும். அது மாத்திரமல்ல, போலீஸ் அதிகாரம் மிக அதிகமாக இருக்கிறது. அதிலே எதை எதைத் திருத்த வேண்டும், மாற்றியமைக்க வேண்டும் என்று அன்றைக்குச் சொன்னோம். ஆனால், இன்றைக்கு நல்லது செய்யவில்லை என்றாலுங்கூட, தீங்கு செய்யாமலிருந்தால் போதும் என்ற அளவுக்காவது சர்க்கார் இருக்கிறதா என்றால் இல்லை. அதை எந்த அளவுக்கு மேலும் மோசமான அளவுக்குக் கொண்டுபோக வேண்டுமோ, அந்த அளவுக்குச் செய்கிறது. ஆகவே, இன்றைக்கு ஜனநாயகத்திற்கு வேட்டு வைக்கும் அளவுக்கு இந்தத் திருத்த மசோதா இருக்கிறது. ஜனநாயகத்திற்கு வேட்டு வைப்பதென்றால், ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்காக வேண்டி பேச்சுரிமை, கூட்டம் கூடக்கூடிய உரிமை வேண்டுமென்று சொன்ன மகாத்மா காந்திக்கே இது வேட்டு வைக்கக்கூடிய அளவுக்கு இருக்கிறது என்பதைத்தான் நான் வருத்தத்தோடு சொல்ல ஆசைப்படுகிறேன். கழுதை தேய்ந்து கட்டை எறும்பு ஆனது என்று கிராமத்திலே ஒரு பழமொழி சொல்லுவதுண்டு. அந்த அளவுக்கு ஜனநாயகம் தேய்ந்து எங்கோ வந்து நின்றிருக்கிறது. கொடும்பாவி கட்டி இழுத்துக்கொண்டு போனாலும் பயம், தூக்கிக்கொண்டு போனாலும் பயம், கொளுத்தினாலும் பயம். எதற்காக இந்த அளவுக்குப் பயப்பட வேண்டும் என்பது நமக்குப் புரியவே இல்லை.

கூட்டத்தைக் கூட்டுவதற்கு, போலீஸில் ஹெட் கான்ஸ்டபிள் லெவலில் இருக்கக்கூடியவர்கள் முதற்கொண்டு அதற்குமேல் இருக்கிறவர்கள் அனுமதி எப்படிக் கொடுக்க வேண்டும், கொடுக்கலாமா, கொடுத்தாலும் கொடுக்கலாம், மறுத்தாலும் மறுக்கலாம், அதற்கு மேலே போடுகிற கண்டிஷனை மீறினால் இவ்வளவு அபராதம் என்ற இந்த அளவுக்கு இன்றைக்கு நிலைமை இருக்கிறதென்று சொன்னால், இது மேலும் போலீஸ்காரர்களுக்கு அதிகப்படியான ஒரு அதிகாரத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. எதிர்க்கட்சிகள் கூட்டத்தைக் கூட்ட விடாத அளவுக்குத் தடுப்பதற்காக வேண்டியே இது போன்ற ஒரு திருத்தம் கொண்டுவரக்கூடிய அளவுக்கு நிலைமை இருக்கிறது என்பதைத்தான் நாம் பார்க்க வேண்டியிருக்கிறது. எதிர்க் கட்சியினர் கூட்டம் கூட்டுகிறார்கள் என்றால், ஏழைகளுக்காக வேண்டி, என்ன என்ன சாதனைகள் செய்ய வேண்டுமோ அதை எடுத்துக் கூறும் நேரத்தில், மக்கள் ஆயிரக் கணக்கில், லட்சக் கணக்கில் கூடுகிறார்கள். ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் கூட்டம் போடுவது என்றால், அது ரொம்ப இலேசிலே போடலாம். ஆனால், ஜனங்கள் வரக்கூடிய அளவு நிலைமை இல்லை. தனக்கு இரண்டு கண் போனாலும் பரவாயில்லை, எதிரிக்கு ஒரு கண்ணாவது போக வேண்டும் என்ற முறையிலே தங்களுக்குக் கூட்டம் கூடாத நிலைமையில் மற்ற கட்சிகளுக்குக் கூட்டம்

[Sri V. K. Kothandaraman] [28th September 1961

கூடும் நிலைமை இருக்கக் கூடாது என்று நினைக்கிறார்கள். கூட்டம் கூடுவதற்கே ஒரு உரிமை கொடுக்கக் கூடாது என்ற அளவுக்குத்தான் இதை—பகிரங்கமாக மறுக்கவில்லை என்று சொன்னபோதிலும்—மறைமுகமாக மறுப்பதற்கு இந்த ஏற்பாடு செய்யப்படுகிறது. உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால், ஒரு மாதத்திற்கு முன்னால் கேரளாவின் மாஜி முதன் மந்திரி திரு ஈ. எம். எஸ். நம்பூதிரிபாத் வேலூருக்கு வந்திருந்தார். வேலூரிலே ஒரே நாளில் ஏககாலத்தில் இரண்டு, மூன்று, நான்கு இடங்களிலே கூட கூட்டம் வழக்கமாக நடந்துகொண்டு வருவதை நாம் பார்த்திருக்கிறோம். இம்மாதிரியான ஒரு நிலைமையிலே அங்கே நம் மதிப்பிற்குரிய முதல் மந்திரி திரு காமராஜ் அவர்களுடைய பிறந்த தின விழாக் கூட்டம் இருந்தது. திரு நம்பூதிரிபாத் கூட்டத்திற்கு அனுமதி கேட்ட நேரத்தில், முதல் அமைச்சர் என்ற காரணத்திற்காக வேண்டியே ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களின் கூட்டம் நடக்கிறது, ஆகவே, இவர்களுக்குக் கூட்டம் போட்டுப் பேசுவதற்கு அனுமதி கொடுக்கக் கூடாது என்ற காரணத்திற்காகவே, ஒரு நாள் ஒரு கூட்டம் தான் நடக்க முடியும், அதற்கு மேலே அனுமதி கொடுக்க முடியாது என்று சொல்லி, கூட்டம் போட அனுமதி மறுக்கும் அளவுக்கு நிலைமை அங்கு ஏற்பட்டது.

அது மாத்திரமல்ல, தேர்தலுக்கு நான்கு மாதங்களுக்கு முன்னால் இருந்தே எந்த எந்த நாளில் எந்த எந்த இடத்திலே கூட்டம் போடுவது என்பதற்காக வேண்டி அனுமதி வாங்கி வைத்திருக்கிறார்கள் காங்கிரஸ் காரர்கள் அங்கே. அதே மாதிரி தி.மு.க.வைச் சேர்ந்தவர்கள் அதற்குப் பிறகு அனுமதி வாங்கி வைத்திருக்கிறார்கள். இப்படியெல்லாம் கூட்டம் போட அனுமதி மறுக்கக்கூடிய அளவுக்கு நிலைமை இருக்கிறது. ஏற்கனவே கொடுத்திருந்த அனுமதியையும் மறுக்கக்கூடிய அளவுக்கு நிலைமை இருந்துவருகிறது என்பதைப் பார்க்கிறோம்.

முதன் மந்திரி பிறந்த தின விழாவில் கலந்துகொள்ள வேண்டுமென்று சொன்னால், எல்லாக் கட்சியினரையும் கூப்பிட்டிருந்தால் போக முடியும். எங்கள் கட்சியைப் பொறுத்த வரையில் கூப்பிட்டிருந்தால் கலந்துகொண்டிருக்க முடியும், நாட்டின் விடுதலைக்காக சேவை செய்த, அதில் ஈடுபட்டிருந்த தலைவர்கள் என்று சொன்னால், அப்படிப் பலபேர்கள் இருக்கிறார்கள், அந்த விழாக்களில் கலந்துகொள்ள நாங்கள் பின் வாங்கியது கிடையாது. ஆனால் எங்களுக்கு மட்டும்தான் உரிமை என்ற அடிப்படையில் பிறந்த தின விழாவை ஒரு தேர்தல் விழாபோன்று நடத்தக்கூடிய முறையில் இருந்தது. அதனால் அந்த நேரத்தில் முக்கியமான ஒரு தலைவர், முன்னாள் முதலமைச்சராகவிருந்த ஒருவர் பேச அனுமதி கிடைக்க, முடியாத அளவுக்கு நிலைமை இருந்தது. ஆக, இதில் முழுக்க முழுக்க பேச்சு உரிமையை தடைப்படுத்தும் அளவிற்கு, ஜனநாயக உரிமைக்கு வேட்டு வைக்கும் அளவிற்கு இருக்கிறது நிலைமை. எது எதற்கு ஷீலிங், ரேஷன் செய்ய வேண்டுமோ அவை அவைகளுக்குச் செய்ய வேண்டும். அதைக் கட்டுப்படுத்த வேண்டும், அதைக் கட்டுப்படுத்தத் தயாராயில்லை. எதற்கு அதிக உரிமை வழங்கப்பட வேண்டுமோ அது வழங்கப்பட முடியாத அளவிற்கு நிலைமை இருக்கிறது. கூட்டம் போட்டுப் பேச, ஒலிப் பெருக்கிக்கு அனுமதி வாங்க அதற்கு ரூ. 3 செலவழிக்க வேண்டும். அனுமதி கிடைக்கவில்லையென்றால் ஹெட்குவார்டர்ஸிலிருந்து "டெப்டி சூப்பரின்டென்ட்டன்ட் ஆப் போலீஸ்" லெவலில் வாங்கவேண்டியிருப்பதால், செலவு செய்து போகவேண்டிய நிலைமை இருக்கிறது. இப்பேர்ப்பட்ட நிலை இருக்கும்போது மேலும் இது போன்ற ஒரு திருத்தம் கொண்டுவந்து அனுமதி நேரடியாகக் கொடுக்க முடியாது என்று சொல்லுவதற்குப் பதிலாக மறைமுகமான முறையில் இப்படிக் கொண்டுவந்து, பின் அமைச்சர் அவர்களிடம் சொன்னால், நான் என்ன செய்வது, அதிகாரிகள் அப்படிச் செய்திருக்கலாம், கவனிக்கிறேன், விசாரணை செய்து நடவடிக்கைகள் எடுக்க ஏற்பாடு செய்கிறோம் என்று சுலபமாகச் சொல்லி தப்பித்துக்கொள்ளவும் வழி இருக்கிறது. போலீஸ் அமைச்சர் அவர்கள் ஒன்றும் தெரியாதவர் அல்ல, அவருக்குத் தெரியாது என்று சொல்ல நான் தயாராயில்லை. எல்லாம் தெரியும். பேச்சு உரிமைக்கு முட்டுக்கட்டை போடக்கூடிய அளவிற்கு இருக்கும் இத்திருத்தத்தை, இப்படி கொண்டுவருவது சரியாக

28th September 1961] [Sri V. K. Kothandaraman]

இருக்காது என்ற காரணத்தினால்—வேண்டுமானால் தீர்க்கமாக பரிசீலனை செய்து, பின் நியாயம் என்று பட்டால் கொண்டுவரலாம். ஆகவே, பக்கிரிசாமிப் பிள்ளை அவர்கள் சொன்னதுபோல் இதை ஒரு பொறுக்குக் கமிட்டிக்காவது விட்டு அதற்குப் பிறகு வேண்டுமானால் ஒரு முடிவிற்கு வருவது நலமாக இருக்குமென்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

* SRI K. VINAYAGAM : Mr. Deputy Speaker, Sir, I oppose the amendment which is before the House. While considering the Madras City Police (Amendment) Bill, I wish to make the following observations.

Sir, freedom of association is a fundamental right guaranteed by the Constitution. My hon. Friends who spoke before me, made it very clear that this Bill seeks to ban public meetings entirely. But the intention of this Bill is . . . (Sri A. Govindasamy was seen laughing.) என்னப்பா சிரிக்கிறாய்

DEPUTY SPEAKER : The hon. Member should understand that it is not a public meeting.

SRI K. VINAYAKAM : But the intention of this Bill is only to regulate the holding of public meetings in public places. The police authorities are given the discretion to decide, where to convene the public meeting in a circle and on what dates. Sir, it has been commonly agreed between different political parties that there should be only one public meeting in a circle of the City. In that event, the difficulty with which we are beset, is that if one political party proposes to convene a public meeting in one police division, the other political parties are incapacitated from doing so. At that rate there could be only ten public meetings in the City of Madras if all the political parties are active in that respect and for a population of this City, it is tantalisingly negligible. More often the experience which we have had is that in the police station, the authorities tell us that this party or that party has already booked a place for holding a meeting. Honestly speaking, after hearing that kind of message from the police station, representatives of such political parties turn away and desist from applying for the holding of their meetings. But what we see, to our dismay, is that on that particular evening that the meeting which has got to be convened by the other party, does not take place and so it is a ruse played against other political parties. Therefore, I wish that departmental instructions may be given to the police authorities to see that if anybody volunteers to convene a public meeting in one division, it has got to be gone through, and it should not be given up on some pretext that so and so speaker is not available, as otherwise there is a vacuum created in some divisions without any political meetings being held.

Another difficulty which we experience is that meetings have got to be convened in specified places but the specified places which have been approved by the police authorities are not the only places that are available for public meetings. There are many vast spaces available in the divisions but still rightly or wrongly some places have been chosen for holding public meetings. I wish the authorities revise the entire list in consultation with the different political

[Sri K. Vinayakam] [28th September 1961

parties. Of late, I understand that the members of the audience are not allowed to sit very close to the platforms and evidently that is done to prevent any mischief from any member of the audience. Sir, as a public speaker, I am aware that a public speaker can give out his views freely without any fear or favour and with some kind of enthusiasm only if he gets an opportunity to watch the reaction from the faces of the onlookers or the members of the audience. If they are put far away to a distance of 20 or 30 yards from the platform—that too in Madras meetings are held during nights when no light falls on the faces of the audience—the public speaker is not in a position to know whether his utterences have been appreciated or resented by the audience and whether he should continue a particular point or leave it as it is. So, this kind of difficulty has got to be removed immediately.

In the matter of installing loudspeakers also, there are unnecessary restrictions placed on the organizers of a meeting. I understand that only three or four loudspeakers are permitted to be installed, with the result that they do not cater to the needs of the entire audience or the people living around the meeting place. So it must be liberalised to some extent.

With regard to processions, I understand from experience that no untoward incident of any kind has happened in the recent past even though political parties of different political leanings have organised their own processions. One or two bad elements may mingle with the procession but that could not be avoided. In fact, such of those people who do not like these regulated processions, do not understand the implications underlying the holding of these processions. It is more often a tamasha or a funny affair. So, such kind of disturbance as might be created by such bad elements has got to be winked at or overlooked by the police authorities. Much could not be made out of that unless law and order is disturbed or physical embarrassment or some amount of intimidation or undue coercion takes place. Sir, I wish the Government revise their decision in respect of this matter and then pass on the necessary instructions to the police authorities.

Also in one police division, more than one meeting could be allowed. In my experience, I have found that public meetings do not disturb the peace and order of the locality. Some enthusiastic members of the audience send in some chits and try to disturb the meeting. That could be well-managed if the speaker is an able one and if he has some experience behind him, unless it is wantonly done, unless some mischief-mongers throng to the public meeting and try to create trouble. In such a contingency we always have the police authorities to quell the disturbance and maintain law and order in the meeting.

The banning of the burning of the effigy is a welcome feature of the Bill. It was ridiculously carried on by some political parties. With the burning of the effigy of a person the entire political ideals which that person is supposed to have, is believed to have been burnt, along with the effigy. That is a wrong conception. On the

28th September 1961] [Sri K. Vinayakam]

other hand, it creates some kind of irresponsibility, some kind of no respect for law and order of the land. Such things must be totally banned from whichever quarters they may come.

I commend this Bill for the acceptance of the House.

• **SRI K. ANBAZHAGAN** : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, காவல்துறை நிர்வாக அதிகாரத்தை முறைப்படுத்துகின்ற வகையில் கொண்டுவரப்பட்டிருக்கின்ற இந்த நகல் சட்டத்தைப் பொதுவாக வரவேற்பதற்கு இடம் இருக்கிறது என்று சொன்னாலும் கூட, இந்தச் சட்டத்தைக் கொண்டுவருகின்ற நேரத்தில் இதை ஆழ்ந்து பரிசிலனை செய்து கொண்டுவர வேண்டும் என்கின்ற அளவில், திருவாளர் பக்கிரிசாமிப் பிள்ளை அவர்கள் எடுத்துச் சொன்னது போன்று, ஒரு ஆய்வுக் குழுவுக்கு இதை அனுப்பி பரிசீலனை செய்வது நல்லது என்று கருதுகிறேன். இப்போது போலீஸ் நிர்வாகத்தைச் சேர்ந்தவர்கள் அதிகாரமுறைப்படித் தான் செயலாற்றுகிறோம் என்கின்ற பெயரால் கையாண்டுவரும் பல்வேறு நடவடிக்கைகள் காரணமாக, பொதுமக்கள் போதுமான அளவுக்கு ஜனநாயக உரிமைகளைப் பயன்படுத்திக்கொள்வதற்கு இயலாத நிலைமை இருக்கிறது. பொதுவாக தவறுகள் நடக்காமல் நேரத்தில் அமைதியைக் காக்க வேண்டும் என்கின்ற காரணத்திற்காக தடை உத்தரவு போடும் முறையானது, பல்வேறு அரசியல் கட்சிகள் தங்கள் கடமைகளைச் செய்வதற்கு இடையூறாக இருக்கின்றது. இவை எதிர்க்கட்சியினர் மட்டும் சொல்வதாக இருந்தால் கனம் அமைச்சர் அவர்கள் வேறு விதமாகக் கருதக் கூடும், ஏதோ எதிர்க்கட்சிக்காரர்கள் தங்கள் மனக் குறைகளை கூறிக்கொண்டிருக்கிறார்கள் என்று. இங்கு எனக்கு முன்னர் பேசிய திருவாளர் விநாயகம் அவர்கள் மிகவும் நன்றாக இதனை விளக்கி—இதுவரையில் மற்ற பிரச்னைகளில்கூட அவர்கள் இவ்வளவு அழுத்தமாக வலியுறுத்தினதில்லை—அந்த அளவுக்கு அழுத்தம் திருத்தமாக இப்போது இருந்துவருகிற நிலைமைகளை எடுத்துக் காட்டினார்கள். பொதுக் கூட்டம் கூட்டுவது என்பது அடிப்படை உரிமைகளில் ஒன்று. அதை எப்படிக் காவல் துறையினர் கட்டுப்படுத்தியிருக்கிறார்கள் என்றால், போலீஸ் நிர்வாக வசதிக்காக ஒவ்வொரு போலீஸ் டிவிஷனிலும் ஒரு நாளைக்கு ஒரு கூட்டம்தான் நடத்த அனுமதிக்கப்படும் என்று தெரிவித்திருக்கிறார்கள். சென்னை மாநகரத்தைப் பொறுத்த அளவில், எட்டு ஒன்பது டிவிஷன்கள் இருக்கின்றன. அதைப் பார்க்கும்போது ஒரு நாளில் ஒன்பது கூட்டங்கள்தான் இந்த சென்னை மாநகரத்தில் நடத்த முடியும் என்ற அளவுக்கு நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. எட்டு பத்து கார்ப்பரேஷன் டிவிஷன்கள் கொண்ட ஒரு போலீஸ் டிவிஷனில் கம்யூனிஸ்டு கட்சியின் கூட்டம் ஒன்று நடக்கிறது என்றால், அந்தக் கட்சிக்கு ஆதரவான ஒரு சோஷலிஸ்ட் கட்சியோ அல்லது திராவிட முன்னேற்றக் கழகமோ, இன்னொரு கூட்டம் வேறொரு இடத்தில் நடத்த வேண்டும் என்றாலும், இப்போதுள்ள நிலைமைப்படி நடத்த முடியாது என்கிற நிலைமைதான் ஏற்படுகிறது. நேற்றைய தினம் நடைபெற வேண்டிய ஒரு பெரிய பொதுக் கூட்டம்—நேப்பியர்ஸ் பார்க்கில் நடைபெற வேண்டியது—அதற்கு அனுமதி தரவேண்டுமென்று நாங்கள் அலைந்து கேட்டுக்கொண்டிருந்தோம். கடைசியில் நுங்கம்பாக்கத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் கூட்டம் ஒன்று இருப்பதால் இதற்கு அனுமதி வழங்க முடியாது என்று தங்களுக்கு இருக்கின்ற முறைப்படி தெரிவித்தார்கள். இம்மாதிரி சிக்கலான முறை இருப்பதால் அனுமதி தர மறுக்கப்படுகிறது. கடைசி நேரத்தில் அனுமதி மறுக்கப்பட்டதின் காரணமாக வேறு ஒரு பகுதியில் கூட்டம் நடத்த வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அரசியல் கட்சிகள் அவற்றின் கொள்கைகளை மக்களிடம் தெளிவாகப் பரவச் செய்ய வேண்டுமென்றால், பொதுக்கூட்டம் மூலம்தான் எடுத்துக் கூற முடியும். அந்த உரிமை இந்தக் காரணத்தால் மறுக்கப்படுகிறது.

11-00 a.m.

உண்மையிலேயே கமிஷனருக்கு இதில் விசேஷ தனி உரிமை இருக்க வேண்டும் என்று கருதினாலும் கூட, இந்த உரிமை ஜனநாயக உரிமைப்படி செயலாற்றுவதைத் தடுக்கின்ற வகையில் அமையக் கூடாது என்ப

[Sri K. Anbazhagan] [28th September 1961

தைத்தான் நான் எடுத்துக் கூற விரும்புகிறேன். இதற்குத் தனி சட்டமே தேவையில்லை. இயல்பாகவே அதிகாரமுண்டென்று சொன்னாலும்கூட, இதை நிர்வகிப்பதில் உள்ள பல குறைகளை நீக்க வேண்டும். அதே போன்று, கூட்டம் நடத்த வேண்டுமென்றால், பத்து நாட்களுக்கு முன்னால் விண்ணப்பிக்க வேண்டுமென்று தெரிவித்திருக்கிறார்கள். இது எப்போதும் இயல்வது ஆகாது. அதே போன்று 9 மணிக்குக் கூட்டம் முடிக்க வேண்டும் என்று உத்தரவு கொடுத்திருந்தால், கூட்டம் முடிவதற்கு 15 நிமிட நேரம் தாமதமாகிவிட்டால்—தலைவர் வருவதற்குச் சற்று நேரமாகிவிட்டாலோ—பொது மக்களின் வசதிக் குறைவால் சற்றுத் தாமதமாகிவிட்டாலோ—அதன் காரணமாகக் கூடுதலாக 15 நிமிட நேரம் கூட்டம் நடத்திவிட்டால், அதற்கு ஒலி பெருக்கி ஏற்பாடு செய்து தந்தவர் மீதும் அதை உபயோகித்தவர் மீதும் வழக்குகள் போடும் முறை இருந்து கொண்டிருக்கிறது. ஒலிபெருக்கி மூலம் 15 நிமிட நேரம் கூடுதலாகப் பேசிவிடுவதால் எந்த ஜனநாயக உரிமையும் பாதிக்கப்பட்டுவிடாது. அதனால் எந்த அதிகாரத்திற்கும் இடையூறு ஏற்பட்டுவிடப் போவதில்லை. ஆனால், எதிர்க் கட்சிகள் நடத்துகின்ற கூட்டம் கூடுதலாக, பத்துப் பதினைந்து நிமிடங்கள் அதிமகாகிவிட்டால் இவ்விதம் போலீஸார் வழக்குத் தொடருகின்ற நிலைமை இன்றைக்குச் சென்னை நகரத்தில் இருந்து கொண்டிருக்கிறது. எத்தனையோ பேர்கள் இதனால் தண்டனைகளுக்கும் ஆளாக்கப்பட்டிருக்கிறார்கள். என்னுடைய கட்சியினர் பேசும்போதுதான் இது வாடிக்கையாக இருக்கின்றது. ஆளும் கட்சியினர் நடத்தும் கூட்டங்கள் அரை மணி நேரமோ அல்லது முக்கால் மணி நேரமோ அதிகம் தள்ளிப்போனாலும் அப்போது யார் மீதும் வழக்குப் போடுவதில்லை. ஆனால் எதிர்க் கட்சிக் கூட்டம் நடத்தும்போதுதான் ஜனநாயகத்திற்கும், அதிகார முறைக்கும் விரோதமாகப் போய்விடுகிறது என்று கூறி எதிர்க் கட்சிகள் மீது வழக்குப் போடப்படுகிறது. அதோடு கூட்டங்கள் நடத்துவதற்கு, இன்னின்ன இடங்கள்தான் என்று நிர்ணயித்திருக்கிறார்கள். கார்ப்பரேஷன் வட்ட எல்லைக்குள் இரண்டு மூன்று இடங்களில்தான் கூட்டத்தை நடத்த முடியும்.இப்போது இருக்கிற முறைப்படி பார்த்தால், ஒவ்வொரு கார்ப்பரேஷன் டிவிஷனிலும் எதிர்க் கட்சிகளுக்கு மட்டுமல்ல, ஆளும் கட்சியினருக்குக்கூட கூட்டத்திற்கான இடம் கிடைப்பதற்கு திண்டாட்டம் ஏற்படுகிறது. இன்னொன்று நான் தெரிவிக்க விரும்புவது, கூட்டம் நடத்த வேண்டும் என்று விண்ணப்பித்துக்கொள்ளுகின்ற நேரத்தில், அதில் ஒலிபெருக்கி உபயோகிப்பதற்கும், கட்டணம் செலுத்த வேண்டும் என்று கேட்கப்படுவதுடன், வாடகைக்கு வருகின்ற ஒலிபெருக்கி உரிமையாளரும் அனுமதி பெறவேண்டிய அவசியம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அவர்கள் ஒலி பெருக்கி வசதி செய்து கொடுப்பதற்கு என்றே தங்கள் தொழிலை அதற்குரிய கட்டணம் எல்லாம் செலுத்தி நடத்திக்கொண்டிருக்கின்ற நேரத்தில், கூட்டங்களுக்கு வாடகைக்கு அமர்த்தப்படுகின்ற நேரத்தில், ஒவ்வொரு கூட்டத்திற்கும் போலீசாரிடமிருந்து அனுமதி பெறவேண்டிய நிலைமையிலிருக்கிறார்கள். இவ்வாறு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் போலீசாரிடத்தில் அனுமதிக்காகப் போகின்ற நேரத்தில்—எனக்குத் தெரிந்த வரையில்—சில போலீஸ் அதிகாரிகள் தங்கள் விருப்பத்திற்கு ஏற்ப அனுமதி அளிக்கிறார்கள். அது மட்டுமல்ல, எந்த விதமான அவசியமுமில்லாமல் பல தடவைகள் விண்ணப்பித்துக்கொள்பவர்களை அலையச் செய்கிறார்கள். சில நேரங்களில் ஒலி பெருக்கி வைப்பதற்கே அனுமதி தர மறுக்கவும் செய்கிறார்கள். இவைகளை எல்லாம் முறை செய்வதற்கு நேரடியாக இதில் இடமில்லை என்று சொன்னாலும் கூட, இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றக்கூடிய இச் சந்தர்ப்பத்தில் நாங்கள் இந்தக் கருத்துக்களைச் சொல்ல வாய்ப்புள்ளது. இதைப் பற்றி நான் சென்னை மாநகர் காவல் துறை ஆணையாளர் அவர்களிடம் பேசியிருக்கிறேன். கனம் விநயகம் அவர்கள் தெரிவித்த கருத்துக்களை நினைவில் வைத்துப் பல மாறுதல்களைச் செய்ய வேண்டும் என்று எதிர்க் கட்சியினர் அனைவரும் விரும்புகிறார்கள். அதுவும் தேர்தல் வருகின்ற இந்தக் காலத்தில் ஒன்பது மணிக்கு முன்னால் கூட்டத்தை முடித்துவிட வேண்டும் என்று சொன்னால், இந்தக் குறிப்பிட்ட நேரத்துக்குள் பொது மக்களுக்கு கருத்து விளக்கம் கொடுப்பதற்குப் பல இடையூறுகள் ஏற்படுகின்றன. ஆகவே அனுமதி கொடுக்கின்ற முறைகளை மாற்றி எளிதாக்க

28th September 1961] [Sri K. Anbazhagan]

வேண்டும். ஏறத்தாழ, இந்த மாநகர ஆட்சியின் கீழ் 100 டிவிஷன்கள் இருக்கின்றன. இதில் குறைந்தது ஒரு நாளைக்கு 50 கூட்டங்கள் நடக்கின்ற அளவிலாவது வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். போலீஸ் இலாகா அமைச்சர் அவர்கள்—காவல் துறை அமைச்சர் என்று சொன்னால் அவர்களுக்குக் கோபம் வரும்—ஆகவே போலீஸ் இலாகா அமைச்சர் என்றே குறிப்பிடுகிறேன். அவர்கள் இதில் அருள் கூர்ந்து இதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே போன்று, சாதாரணமாக நடக்கின்ற ஒவ்வொரு கூட்டத்திற்கும் 50 அல்லது 100 போலீஸ்காரர்களைக் காவல் செய்வதற்கு என்று அனுப்பும் முறையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது யாரைப் பாதுகாப்பதற்கு என்றுதான் தெரியவில்லை. பெரும்பாலான கூட்டங்களும், 100–க்கு 99 கூட்டங்கள் எந்தவிதமான குழப்பமும் இல்லாமல்தான் நடைபெறுகின்றன. ஏதாவது குழப்பமோ அல்லது கலவரங்களோ ஏற்படும் என்றிருந்தால் போலீசார் வரட்டும், வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் தேவையற்ற முறையில் போலீசார் அதிகப்படியான அளவில் வந்து நிற்கிறார்கள். நாங்கள் எவ்வளவுதான் வேறு கருத்துக்களைப் பேசினாலும் கூட, சில நேரங்களில் போலீசாருடைய குறைகளைப் பற்றியும் நீக்க வேண்டும் என்று பேசக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அப்படிப் பேசும்போது அவர்களும் இந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களோ என்று சந்தேகித்து, அவர்களுக்கு ஏதாவது உதவி செய்யுங்கள், நிதி ஒதுக்குங்கள் என்று கேட்கின்ற நேரத்தில் அமைச்சர் அவர்கள் அடியோடு முடியாது என்று சொல்லிவிடக் கூடிய நிலைமையும் ஏற்படுகிறது. ஆகவே, போலீசார் அதிகமாகக் கூட்டத்திற்கு வரவேண்டிய தேவையில்லை. அதிலும் எதிர்க் கட்சியினர் நடத்து கின்ற கூட்டங்களுக்கு இவ்வளவு அதிகமாக வரவேண்டிய தேவையில்லை என்றும், அமைச்சர் அவர்கள் வேண்டுமென்றால்—போலீசாரோடு இருந்துகொண்டிருப்பதால்—அமைச்சர்கள் கலந்துகொள்ளுகின்ற கூட்டங்களுக்கோ, அல்லது அவர்களுடைய கட்சியினர் நடத்துகின்ற கூட்டங்களுக்கோ 100 அல்லது 200 போலீசார் வேண்டுமானாலும் போகட்டும், அதை நாங்கள் எதிர்க்கவில்லை என்றும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால் எங்களைப்போன்ற எதிர்க்கட்சியினர் நடத்தும் கூட்டங்களுக்கு இவ்வளவு பாதுகாப்பு அவசியமில்லை. அது அவசியம் என்று தோன்றினால் பத்தோ அல்லது பன்னிரண்டு போலீசாருடன் ஒரு சப் இன்ஸ்பெக்டரும், தவறினால் ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் போதும். சென்னை நகரத்தைப் பொறுத்தவரையில் எதிர்பாராத விதத்தில் எந்தவிதமான கலவரமும் ஏற்பட்டுவிடாது என்பது போலீஸ் அதிகாரிகளுக்கு நன்றாகத் தெரியும். ஏதாவது நடத்தவேண்டுமென்றால், முறைப்படி தெரிவித்து விட்டுத்தான் போராட்டங்கள் நடத்தப்படும். முறைப்படி தெரிவித்து விட்டுத்தான் மறியல் நடத்தப்படும், முறைப்படி தெரிவித்துவிட்டுத்தான் சட்டத்தை மீறுவதும் நிகழும், எந்தக் காரியத்தையும் இதுதன் சந்தர்ப்பம். இது தவிர வேறு வழியில்லை என்று எண்ணி எந்த சந்தர்ப்பத்திலும் பலாத்கார செயல்களில் தவறான வழிகளில் ஈடுபட்டதில்லை என்பதை இங்குள்ள எதிர்கட்சியான தி. மு. க. சார்பாக தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நண்பர் விநாயகம் அவர்கள் தெரிவித்தது போல், பிளாட்பாரத்தின் பக்கத்தில் 50, 60 அடி அகலம்—மக்களை விடாமல் போலீஸ்காரர்களையே நிறுத்தி வைக்கின்ற நிலைமையை மாற்றி சாதாரணமாக எல்லா மக்களும் அமர்ந்திருக்கும் வகையில் ஏற்பாடுகளைச் செய்வதற்கு வேண்டிய ஆலோசனைகளை அமைச்சர் அவர்கள் அந்த இலாகாவுக்குத் தெரிவிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே போன்று ஊர்வலத்தைக் கட்டுப்படுத்தும் முறையிலே, ஊர்வலங்கள்—ஏதாவது ஒரு அரசியல் போராட்டத்திற்காக நடத்தப்படும் ஊர்வலமாக இருந்தால்—அப்போது அதிகப் பாதுகாப்புத் தேவைப்படலாம். ஆனால் வழக்கமாக இயக்கங்கள் நடத்தும் ஊர்வலத்துக்கு அதிகப் பாதுகாப்புத் தடையுத்தரவுகளும் தேவையில்லை சட்ட மன்றத்தின் முன்னால் இன்றையதினம் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நடை

[Sri K. Anbazhagan] [28th September 1961

பெற்ற பேரணியில் கலந்துகொள்ள சுமார் 40,000 அல்லது 30,000 பேர்கள் வந்திருந்தார்கள், அத்தனை பேர்களும் திரண்டு நின்று தமது உணர்ச்சியை எடுத்துக் காட்டினுர்கள். தங்கள் கண்டன உணர்ச்சியை காட்டுகிற முறையில் ஒலி முழக்கி, அமைதியாக நடத்த வேண்டுமென்று நாங்கள் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டோம். ஒலி முழக்கம் செய்வதைத் தவிர யாருடைய போக்குவரத்தையும் தடுக்க எண்ணவில்லை. ஆனுல் போலீஸார் எடுத்துக்கொண்ட முயற்சியைப் பார்த்தால் வரிசையில் எவ் வளவு பேர் நின்றிருந்தார்களோ அதில் ஏறத்தாழ 4-ல் ஒரு பங்கு போலீஸார் வந்திருந்தார்கள்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அப்படியானுல், 10,000 போலீஸார் வந்திருந்தார்கள் என்று சொல்லுகிறீர்களா ? 4-ல் ஒரு பங்கு என்ருல் உங்கள் கணக்குப்படி 10,000 ஆகிறது.

**Sri K. ANBAZHAGAN :** எவ்வளவு பேர்கள் வந்தார்கள் என் பது அமைச்சருக்குத்தான் தெரியும். போலீஸாருடைய எண்ணிக்கை இவ் வளவு அதிகம் இருக்க வேண்டுமா ? இவ்வளவு அதிகமாக நிறுத்த வேண்டிய நிலைமை என்ன ? பயங்கரமான சூழ்நிலை ஏதாவது ஏற் பட்டிருக்கிறதா ? இதில் பயங்கரமான விளைவு ஒன்றும் இல்லை. இதில் தீமையான நோக்கம் எதுவும் இல்லை. பொதுமக்களுடைய கருத்தை எடுத்துக் காட்டத்தான் இது ஏற்பாடு செய்யப்பட்டது என்பதை அமைச்சருக்கு இந்த நேரத்திலும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஏராள மான போலீஸாரை எதிர்க் கட்சிகள் நடத்தும் கூட்டங்களுக்கும், எதிர்க் கட்சிகள் நடத்தும் ஊர்வலங்களுக்கும் அனுப்புகிருர்கள் ; அதே போல ஆளும் கட்சியினர் நடத்தும் ஊர்வலங்களுக்கு அனுப்புகிருர்களா என்று நான் பார்த்திருக்கிறேன், எந்தக் காரணத்தாலோ அவர்கள் விருப்பப்படி அமைதியைக் காக்கின்ருர்கள். அவர்கள் ஊர்வலத்திலே அந்த வகை யிலே அனுப்பப்படுவதில்லை. தேவையானபோது வேண்டுமானுல், இவ் வளவு பேர் அனுப்பலாம்—மறுக்கவில்லை. தேவைப்படாத அளவுக்குப் போலீஸாரை உபயோகப்படுத்துவதனுல் பொது மக்களுக்கு நன்மை இல்லை என்பதை எண்ணிப் பார்த்து, அமைச்சர் அவர்கள் இந்த முறையை மாற்று வதற்கு இந்த சந்தர்ப்பத்தில் ஆலோசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இந்தச் சட்டத்திலே முக்கியப் பிரிவாக உள்ளது 15 நாட்கள் வரையில் காவல் துறைத் துணையாளர் ஊர்வலமோ, கூட்டமோ நடத்தக் கூடாது என்று தடை விதிக்கலாம், அதற்கு மேலும் தடை விதிக்க வேண்டுமென்ருல் அரசாங்கத்தின் சம்மதத்தைப் பெற்று தடை விதிக்கலாம் என்று தெரிவிக்கப்பட்டுள்ள பிரிவு ஆகும். நண்பர் கல் யாணசுந்தரம் இதற்கு ஒரு திருத்தம் தந்திருக்கிருர்கள். அந்த நோக்கத் தின்படி 15 நாட்களுக்கு மேல் மேலும் தொடர்ந்து தடை விதிக்க வேண்டு மென்ருல் காவல்துறை ஆணையாளர் அரசாங்கத்திற்குத் தெரி வித்து அரசாங்கம் அந்தத் தடையை நீடிக்க வேண்டுமென்று முடிவு செய்தால், அப்படி முடிவுக்கு வந்ததற்கான காரணங்களைப் பதிவு செய்து மறுபடியும் 15 நாட்களுக்கு தடை விதிப்பதற்கு ஆணையாளருக்கு அனு மதி அளிக்கலாம் என்று சொல்லியிருக்கிருர்கள். இதைப் பற்றி அமைச்சர் அவர்கள் சிந்திக்கவேண்டும். முறைப்படி காவல் துறை ஆணையாளர் இன்னெரு 15 நாள் நீடிக்கிறேன் என்று சர்க்காருக்கு எழுத, அரசினர் அதை முறையாக ஏற்றுக்கொண்டு 15 நாட்கள் நீடிக்க அனுமதிப்பது நல்லதல்ல. அதே நேரத்தில் சென்னை போன்ற மாநகரத்தில் நீண்ட நாட்களுக்கு இப்படித் தடை விதிப்பது முறையல்ல. அதுவும் ஜனநாயகத் திற்கு ஒவ்வாத விரோதமான காரியம்தான். ஜனநாயகத்தைப் பாதுகாக்க அமைதியைப் பாதுகாக்க 15 நாட்கள் சேர்ந்தாற்போல் தடை விதிப்பது தேவையல்ல. நான் வேண்டிக்கொள்வது, 7 நாட்கள் விதிக்கட்டும், பிற் பாடு தேவைப்பட்டால் இன்னெரு 7 நாட்கள் தொடரட்டும். அதற்குமேல் தேவைப்பட்டால் ஆணையாளர் அரசாங்கத்திற்கு எழுதி, அமைச்சர் அவர் கள் ஆலோசனை செய்து தக்க காரணம் இருந்தால் தடையை அனுமதிக் கட்டும். முதலிலேயே 15 நாட்களுக்கு தடை விதித்து 15 நாட்களுக்கும் கூட்டங்கள் முதலியவைகள் நடத்துவதற்கு அனுமதி கிடையாது என்பது

28th September 1961] [Sri K. Anbazhagan]

—கட்சி உரிமைகளுக்கு இடையூறுகும். அந்த அதிகாரத்தைக் குறைத்து, 7 நாட்களுக்குத் தடை விதிக்கலாம், பின்னுல் தேவையானுல் 15 நாட்கள் வரை நீட்டலாம். எடுத்தவுடனேயே 15 நாட்கள் தடை விதித்தால் பல நாட்களுக்கு எந்தக் கூட்டத்திற்கும் அனுமதி கிடைக்காது. எந்த ஊர்வலத்தையும் நடத்த முடியாது என்ற காரணத்திஞல் இதை 7 நாட்களாக குறைக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மற்றென்றைப் பற்றியும் சில சொல்ல விரும்புகிறேன். சிலருக்கு அதிக ஆத்திரத்தை உண்டாக்கக் கூடும் என்று கருதி, இங்கே பொது மக்களுடைய உணர்ச்சியை எடுத்துக் காட்டுவதற்காக எஃப்ஃபிஜி கொண்டு வருவதைத் தடுத்திருக்கிருர்கள். இம்மாதிரி தடுக்க நினைக்கும்போது தக்க காரணங்களைக் காட்டவேண்டும். யாராவது தனிப்பட்டவர்களைப் புண்படுத்திஞல், யாராவது ஒருவர் மீது இந்தக் கொடும்பாவி கொண்டுவருவது மூலமாக வெறுப்பை உண்டாக்குவதாக இருந்தால் அதைத் தடுக்கலாம். அதே போல ஒரு கட்சியினரை அவமானப்படுத்துவதாக இருந்தால் அப்போது கூட அதைத் தடுக்கலாம். பொதுப் பிரச்னையாக வரும்போது, யாரோ ஒரு நண்பர் இங்கு பேசினர், மழை வரவேண்டுமென்று கூட இப்படி மக்கள் கொடும்பாவி கொண்டுவருகிருர்கள் என்று அதைப் போன்று பொது மக்களுடைய குறைகளைக்காட்ட . . . .

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : சொன்னது நான் தான், யாரோ அல்ல. அதற்கெல்லாம் இடம் இருக்கிறது.

**SRI K. ANBAZHAGAN** : விலைவாசி தூக்கல் காரணமாக வேதனைப்படும் மக்கள் விலைவாசி ஏற்றம் ஒழிக என்று கொடும்பாவி இழுத்தாலோ, அல்லது ஜனநாயகம் கெட்டுப்போய்விட்டது, ஜனநாயகம் காப்பாற்றப்படவேண்டும், சர்வாதிகாரம் ஒழியவேண்டும் என்று எஃப்ஃபிஜி கொண்டு வந்தாலோ அது தனிப்பட்டவர்களைப் புண்படுத்துவதாகாது. கொடும்பாவி என்றுல் ஒரு தனிப்பட்டவரைப் புண்படுத்திஞல், அல்லது ஒரு மதத்தைச் சார்ந்தவர்களைப் புண்படுத்திஞல், அல்லது ஒரு வகுப்பாரைப் புண்படுத்துவதாக இருந்தால், அப்படிப்பட்டவற்றைத் தடுக்கவேண்டுமே தவிர, அடியோடு அது கூடாது என்று சொல்லுவது அவ்வளவு ஏற்றதல்ல. அகில இந்தியாவிற்குள்—அகில இந்தியா ஒன்று என்று நாங்கள் தான் ஏற்றுக் கொள்ளவில்லையே தவிர அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள்—வட நாட்டிலே, பல பகுதிகளில் அவர்கள் வழக்கப்படி ராவணன் சிலை செய்து வைத்து, அதைப் பொது இடத்தில் கொளுத்தி வேடிக்கை பார்க்கிருர்கள். எங்களைப் போன்ற தென்னுட்டவர் மனம் புண்படுகிறது—ராவணன் சிலையைக் கொளுத்துவதஞல் எங்கள் மனம் புண்படாது என்று அமைச்சர் அவர்கள் சொல்லுவார்கள்—இப்படிக் கொளுத்துவது நேரு அவர்கள் முன்னிலையில் நடக்கிறது. இதஞல் எங்கள் மனம் புண்படுகிறது என்று சொல்லக் கூடிய நேரத்தில் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லக் கூடும் எனக்குப் புண்படவில்லை, மகிழ்ச்சியாக அல்லவா இருக்கிறது என்று.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : யாராவது ஒருவரைப் புண்படுத்துவதாக இருந்தால் கூட நான் அதற்குத் தடை விதிப்பேன்.

**SRI K. ANBAZHAGAN** : நான் மகிழ்ச்சியடையும் முறையில் யாரைப் புண்படுத்துவதாக இருந்தாலும் அதற்குத் தடை விதிப்பேன் என்று அமைச்சர் அவர்கள் சொல்லுகிருர்கள். தயவு செய்து ஆளும் கட்சியின் சார்பில் டில்லி சர்க்காருக்கு எடுத்துச் சொல்லி, தமிழ் நாட்டு மக்கள் இதைத் தவருகக் கருதுகிருர்கள், இனி மேல் இந்த மாதிரி இராவணன் சிலையை கொளுத்தாதீர்கள் என்று அறிவித்தால் நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். கொடும்பாவி கட்டி இழுப்பதை பொதுப் படையாக அதை அடியோடு தடுக்காதீர்கள் என்றும் தனிப்பட்டவரை, அல்லது ஒரு மதத்தினரை, அல்லது ஒரு வகுப்பினரை இழிவுப்படுத்துவதாகக் காட்டிஞல், புண்படுத்துவதாக இருந்தால் அப்போது அதைத் தடுக்கலாமே தவிர வேறு வகையில் இந்தச் சட்டத்தில் விதிகள் அமைத்துக் கொள்ளுவதன் மூலமாக ஜனநாயகத்திற்கு விரோதமாகப் பயன்படுவதற்கு இடம் அளிக்காதீர்கள் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் ஆறு மாதங்களுள் தேர்தல் வர இருக்கிறது. இவ்வளவு காலம் பொறுத்தவர்கள் 6 மாதங்கள் பொறுக்கலாம். இதை ஆய்வுக் குழுவிற்கு அனுப்பி பரிசீலனை செய்து அடுத்த கூட்டத்திலேயே கொண்டு வந்து நிறைவேற்றலாம். ஆய்வுக் குழுவிற்கு அனுப்ப எங்கே நேரம் இருக்கிறது, தேர்தல் அலுவல்களை கவனிக்கவேண்டியிருக்கிறதே என்று அமைச்சர் சொன்னால், அடுத்த சட்ட மன்றத்தில் நிறைவேற்றலாம். ஆகையால் இதை ஆய்வுக்குழுவிற்கு அனுப்ப வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

**Sri K. R. NALLASIVAM** : மதிப்பிற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு விட வேண்டுமென்ற முறையில் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த நாட்டிலே சிறந்த பிரஜைகளை உண்டுபண்ண தாரா ளமான சுதந்திரம் வேண்டும். போலீஸாருக்கு அதிக அதிகாரத்தைக் கொடுக்க பொது மக்களுடைய சுதந்திரத்தைக் கட்டுப்படுத்த, அரசியல் வாதிகளுடைய சுதந்திரத்தைக் கட்டுப்படுத்த கொண்டு வரப்பட்டுள்ள இந்த மசோதா தேவையில்லை. இருந்தாலும் கூட சிலவற்றை நான் ஒப்புக் கொள்ளத்தயாராக இருக்கிறேன்.

கொடும்பாவியைப் பற்றி எனது பக்கத்தில் இருக்கும் சில நண்பர்கள் பேசினார்கள். கொடும்பாவி என்று சொல்லும்போது மத அடிப்படை யில் இருந்தாலும் எங்கள் ஊர் பக்கத்தில் பார்க்கிறோம் எறிந்த கட்சி எறியாத கட்சி என்று ஏதோ மரத்தை நட்டு அதில் பொம்மையை வைத்து ஏதோ செய்கிறார்கள். இது எவ்வளவு அறிவுக்குப் பொறுத்த மானதோ, பகுத்தறிவுக்குப் பொறுத்தமானதோ ? கொடும்பாவி எரிப்பது அத்தனையும் தடைசெய்ய வேண்டுமென்பது எனது கருத்து. கொடும் பாவி கட்டி இழுத்தால் மழை பெய்வதாக ஒரு நம்பிக்கை இருக்கிறது. ஒரு மந்திரியையோ அல்லது ஒரு அரசியல் வாதியையோ கொடும்பாவி கட்டி இழுப்பதன் மூலமாக ஜனங்களிடத்தில் ஆத்திரத்தை ஏற்படுத்து வதாக இருக்கிறது—அருவருப்பான செய்கையாகவும் இருக்கிறது. இது அறிவுக்குப் பொறுத்தமானதாகத் தோன்றவில்லை ; நாகரீகமுள்ளவர்கள் செய்யக் கூடியதாகத் தோன்றவில்லை. ஆகையால் இதைத் தடுக்க வேண் டியது தான்.

கூட்டங்கள் நடத்துவதிலே, கூட்டம் நடத்துவதற்கு முன்னால், 5 நாட்களுக்கு முன்னாலேயே அனுமதி பெறவேண்டும் என்று சொல்லப் படுகிறது. கூட்டம் நடத்தக்கூடிய அரசியல் கட்சிகள், அப்படி அவர் களுடைய கூட்டம் நடத்துவதற்கு 5 நாட்களுக்கு முன்னால் தெரிவிக்க வேண்டுமென்று சொல்வது, நடைமுறையிலே முடியுமா என்பதைப் பார்க்க வேண்டும். இதிலே பலவித கஷ்டங்கள்தான் ஏற்படும். இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னால் என்று இருந்தால் அது சற்று வசதியாக இருக்கும். சில சமயங்களிலே 2, 3, தினங்களிலே கூட்டமே முடிவு செய்ய வேண்டியிதிருக்கும். அப்போது 5 நாட்களுக்கு முன் அறிவிக்க வேண்டுமென்று சொன்னால், இது சாத்தியப்படுமா என்று யோசிக்க வேண்டும். குறிப்பாக, பொதுத் தேர்தல் இன்னும் 2, 3 மாதங்களிலே வர இருக்கிறது. அப்போது 2, 3 தினங்களிலே அறிவிப்பதற்கு வசதி இருந்தால் மிகவும் வசதியாக இருக்கும். அப்படியே வாங்குவதாக இருந் தாலும், அதிலே பல தொல்லைகள் ஏற்படும்.

அடுத்தபடியாக, நிச்சயமாக 15 நாட்களுக்கு என்று தடை உத்திரவு இருக்கக்கூடாது என்று எனக்கு முன்னால் பேசிய நண்பர் அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். இப்படி 15 நாட்கள் என்று ஒட்டு மொத்த மாக தடை உத்திரவு போடுவது என்பது நியாயமில்லை. ஒரு வாரம் தடை உத்திரவு போட்டுவிட்டு, அதை மேலும் தொடர்ந்து விஸ்தரிக்க வேண்டிய அவசியமிருந்தால் தடை உத்திரவை நீடித்துக் கொள்ளலாமே தவிர, 15 நாட்களுக்கு என்று ஒரேயடியாக நீடிப்பது பல தொல்லைகளுக்கு அடிப்படையாக இருக்கும். ஆகவே இந்த மசோதா வானது மேலும் மேலும் பொது மக்களை கட்டுப்படுத்தக்கூடிய வகை

28th September 1961] [Sri K. R. Nallasivam]

யிலே இல்லாமல் இருக்க வேண்டும். அதைப் பற்றி நல்ல முறையிலே சிந்திப்பதற்கு, இதை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த போலீஸ் சட்ட திருத்த மசோதாவிலே வரவேற்கத் தக்க சில அம்சங்கள்தான் இருக்கின்றன என்று சொன்னால் மிகை யாகாது என்று நான் நினைக்கிறேன். போலீஸ் அதிகாரிகளுக்கு ஏதோ அதிக அதிகாரத்தைக் கொடுத்து விட்டதாக நினைத்துக் கொண்டிருக் கிறார்கள். ஆனால் இந்தத் திருத்தத்தை ஒழுங்காகப் படித்துப் பார்த்தால், போலீஸ்காரர்களுடைய அதிகாரத்தைக் கட்டுப்படுத்தக் கூடியதாக இந்த மசோதா இருக்கிறதே தவிர, போலீஸ் அதிகாரத்தை விரிவாக்கக் கூடிய தாக இந்த மசோதா இல்லையென்பதை படித்தவர்கள் எல்லோரும் நிச்ச யமாகச் சொல்வார்கள். எதற்காகச் சொல்கிறேன் என்றால் ஹைகோர் டிலும், நீதி ஸ்தலங்களிலேயும், தடை உத்திரவை போலீஸ் போட்டுவிட்டால் 41-வது செக்ஷன்படி எத்தனை நாள் அமுலில் இருக்கலாம் என்ற நிலை இருக்கக்கூடாது. அது ஜனநாயகத்திற்குப் புறம்பானது. இந்த தடை உத்திரவைப் பொறுத்த அளவிலே, முன்னால் பழக்கத்திலே எத்தனை நாட்கள் வைத்திருந்தார்கள், எத்தனை மாதங்கள் வைத்திருந்தார்கள், அதைப் பார்த்துக் கொள்ளலாம் என்று போலீஸ் அதிகாரிகள் சொல்வார் களானால், அது ஜனநாயகத்திற்கு புறம்பானது. போலீசுக்கு அதிக அதிகாரம் கொடுக்கவேண்டும், ஜனநாயக அடிப்படையிலே அவர்களுக்கு அதிகாரம் தரவேண்டுமென்று நீதி ஸ்தலம் சொல்வதால், அந்த அடிப் படையிலே போலீசுக்கு அதிகாரத்தை அதிகப்படுத்த வேண்டுமென்று சொன்னால், நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளக்கூடியவர்களாகத்தான் ஆவோம் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எதற்காகச் சொல்கிறேன் என்றால், தடை உத்திரவை எந்தெந்த வகையிலே போட லாம், எப்படி, எப்போது போடக் கூடாது, அப்படிப் போடுவதால் என் னென்ன தவறுகள் ஏற்படும் என்பதையெல்லாம் கவனிக்கவேண்டும். இப்போதுள்ளபடி, தடை உத்திரவு 15 நாட்களுக்குத்தான் செல்லும். அதற்கு மேல் தடை உத்திரவு போட கமிஷனர் அவர்கள் விருப்பப்படி முடியாது. அவர் அரசாங்கத்தின் அனுமதி கேட்டுத்தான் போடவேண்டும். அதற்காகவே இந்தச் சட்டம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. போலீஸ் அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தை அனாவசியமாக பிரயோகித்து விடக் கூடாது என்ற ஒரு நல்லெண்ணத்தோடு இந்த அரசாங்கம் இந்த சட்டத்தை கொண்டு வந்தாலும், போலீஸ் அதிகாரிகளுக்கு அதிக அதிகாரம் கூடாது என்று சொல்வது வரவேற்கத் தக்கதல்ல.

அடுத்ததாக நானும் சில வார்த்தைகள் இந்தக் கூட்டம் போடு வதைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். ஒரு கூட்டம் போடுவதாக இருந்தால் அந்த டிவிஷனில் ஒரு கட்சிக்கு மட்டும்தான் கூட்டம் நடத்த அனுமதி கொடுக்கப்படும், ஒரே டிவிஷனில் 4 கூட்டங்களோ, அல்லது பல கட்சிகளுக்கு கூட்டம் போடுவதற்கோ அனுமதி கிடையாது என்று சொல்லப்படுகிறது. இதை ஒரு நோக்கத்தில் பார்த்தால் வரவேற்கத் தக்கதாக இருக்கிறது. காரணம், சில பண்பு குறைந்த அரசியல் கட்சிகள் அமைதியைக் குலைக்க வேண்டுமென்ற கருத்துள்ளதாக இருப்பதால், இப்படிப் பல கட்சிகளுக்கு அனுமதி கொடுத்து விட்டால், அதனால் போலீஸ்காரர்களுக்கு தலைவலி அதிகரித்து, எல்லாக் கூட்டத்திற்கும் பந்தோபஸ்து கொடுப்பது ஒரு பிரச்னையாகிவிடும். ஆகவே அமைதியைக் காக்க வேண்டியது தங்கள் பொறுப்பாக இருக்கிற காரணத்தினாலே, இப்படி சொல்லப்படுகிறது என்று கூறுகிறார்கள். ஆனால் அதே சமயத் திலே, கனம் மாம்பலம் அங்கத்தினர் ஒரு கட்சிக் கூட்டம் போடுகிறார். அடுத்து இருப்பவரும் ஒரு கூட்டம் போட வேண்டுமென்று விரும்புகிறார். ஆனால் முன்னால் சொன்ன நபர், தான் கூட்டம் போடுவதாக லைசென்ஸ் வாங்கி வைத்துக்கொண்டு, கூட்டமே நடத்தாமல் இருந்தாலும், பிற கட்சிகளுக்கு அந்த வட்டாரத்தில் கூட்டம் போடுவதற்கு அனுமதி கொடுப்ப தில்லை. காரணம், போலீஸ் அதிகாரிகள் ஏற்கனவே அந்த வட்டாரத்தில்

[Srimathi T. N. Anandanayaki] [28th September 1961

ஒரு கூட்டம் போடுவதற்கு லைசென்ஸ் கொடுத்தாகி விட்டது என்று கூறி விடுகிறார்கள். இதைச் சுலபமாக சப்-இன்ஸ்பெக்டர் சொல்லி விடுகிறார். அப்படிச் சொல்வதால் அவர் மீது தவறு கிடையாது. ஆனால் போலீஸ் அதிகாரி என்ன செய்யவேண்டுமென்று சொன்னால், எந்தெந்தக் கட்சிகள் லைசென்ஸ் வாங்கிக்கொண்டு போகிறதோ, அந்தக் கட்சிகளின் சரித்திரத்தை, அதன் நிலைமை எப்படி இருக்கிறது என்று சற்றுக் கவனித்துப் பார்க்கவேண்டும். ஏமாற்றுவதையே தொழிலாகக் கொண்டுள்ள கட்சியாக இருந்தால், அதற்காகவே லைசென்ஸ் வாங்கி வைத்துக் கொள்ளக் கூடியதாக இருந்தால், மூன்று முறை லைசென்ஸ் வாங்கி விட்டு, கூட்டம் போடவில்லை என்று சொன்னால் அந்த அரசியல் கட்சிக்கு அதற்குப் பிறகு கூட்டம் போடவேண்டுமென்று சொன்னால், மற்றக் கட்சிகளுக்கு முக்கியத்துவம் அளித்துவிட்டு, சலுகை அளித்துவிட்டு, பிறகு வேண்டுமானால் அந்தக் கட்சிக்கு கூட்டம் போடுவதற்கு அனுமதி அளிக்கலாம். அப்படி ஒரு உத்திரவை போலீஸ் அதிகாரிகள் பிறப்பிப்பார்களேயானால், அது மிகவும் வரவேற்கத்தக்கதாக இருக்கும். அப்படி உத்திரவு போட்டுவிட்டால், எத்தனை முறை இந்தக் கட்சி லைசன்ஸ் வாங்கிற்று, எத்தனை முறை கூட்டம் போட்டது என்பதையெல்லாம் பரிசீலனை செய்து, எந்தக் கட்சிக்கு லைசன்ஸ் கொடுக்கலாம் என்பதை நிர்ணயிப்பதற்கு உதவியாக இருக்கும். அப்படிச் செய்வார்களானால், அது மிகவும் வரவேற்கத்தக்கதாக இருக்குமென்று நான் நினைக்கிறேன்.

அதேபோன்று, சில அதிகாரிகள் மத சம்பந்தமாக நடத்துகின்ற சில விழாக்களுக்குக்கூட லைசென்ஸ் கொடுப்பதில் தொல்லை கொடுக்கிறார்கள். குறிப்பாக, சென்னையிலே மாரியம்மன் திருவிழா ஆடி மாதத்திலே மூலை முடுக்குகளிலே எல்லாம் நடத்தப்படுகிறது. ஆண்டவன் இல்லையென்ற பிரசாரம் இருந்தாலும் கூட, முன்னைக்காட்டிலும் இன்றைக்கு ஒரு பக்கத்திலே பக்தி வலுத்துக் கொண்டுதான் வருகிறது. அந்த முறையிலே இன்றைக்கு நகரத்தின் மூலை முடுக்குகளிலே எல்லாம் திருவிழாக்கள், பஜனைகள், கச்சேரிகள், காலக்ஷேபங்கள் நடக்கின்றன. ஆகவே இந்தமாதிரி மத சம்பந்தப்பட்ட காரியங்களுக்கு தொல்லை கொடுக்காமல் இருந்தால் மிகவும் வரவேற்கத் தக்கதாக இருக்கும். காரணம் கிருஷ்ண ஜெயந்தியை சிலர் கொண்டாடுகிறார்கள், ஸ்ரீ ராம நவமியை சிலர் விசேஷமாகக் கொண்டாடுகிறார்கள், இன்னும் சிலர் பிள்ளையார் சதுர்த்தியை வெகு தீவிரமாகக் கொண்டாடுகிறார்கள். இந்த முறையிலே எல்லாம் அவர்கள் ஆண்டவனை வழிபடும்போது அதையொட்டி கச்சேரிகளோ, காலக்ஷேபங்களோ அல்லது இன்னிசையோ நடைபெற வேண்டுமென்றால்,அதற்குத் தொல்லை கொடுக்கக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே இந்தமாதிரியான மத சம்பந்தமான, மத சார்பான காரியங்களுக்கு போலீஸ் அதிகாரிகள் லைசென்ஸ் கொடுத்து உதவுவது வரவேற்கத்தக்கதாக இருக்குமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இதற்கெல்லாம் போலீஸ் பாதுகாப்பு தேவைப்படலாமே என்று சொல்லலாம். போலீஸ் பாதுகாப்பு எதற்கு வேண்டுமென்பது பொதுமக்களுக்கு நன்கு தெரியும். அரசியல் கட்சிகளுக்கு போலீஸ் பாதுகாப்பு தேவைப்படும். அது கூட எந்தக் கட்சிக்கு போலீஸ் தேவை, எந்தக் கட்சிக்குத் தேவையில்லை என்பது பொதுமக்களுக்குத் தெரியும். இப்படி போலீஸ் இருக்கும்போதே, இந்தியன் பீனல் கோடுக்கு விரோதமாக எத்தனை குற்றங்களை சில அரசியல் கட்சிகள் செய்கின்றன என்பது பொதுமக்களுக்கு நன்கு தெரியும். நாம் சொல்ல வேண்டாம். ஆளும் கட்சிக்குப் போலீஸ் தேவையா, அல்லது எதிர்க் கட்சிக்குப் போலீஸ் தேவையா என்பதை பொதுமக்கள் இன்றைக்கு நன்கு புரிந்து கொண்டிருக்கிறார்கள். தவிர, போலீஸ் பாதுகாப்பு தேவையா, அல்லது தேவையில்லையா என்பதையெல்லாம் போலீஸ்காரர்கள் சூழ்நிலைக் கேற்ப, அந்தந்தக் கட்சியின் வலிமைக்கு ஏற்ப, பழக்கவழக்கங்களுக்கு ஏற்ப நிர்ணயித்து முடிவு செய்து கொள்வார்கள். வெள்ளை உள்ளம் படைத்த ஒருவன் கூட்டத்திற்கு வந்து தன் உயிரைக் கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படலாமே, அதற்கு போலீஸ் பாதுகாப்பு அவசியமில்லையா என்று சிலர் கூறுகிறார்கள். அப்பன்

28th September 1961] [Srimathi T. N. Anandanayaki]

புதருக்குள் இல்லை என்பதைப் பற்றி நீங்கள் சொல்லவேண்டிய தில்லை. அதைப் பற்றி பொது மக்கள்தான் சொல்ல வேண்டும். போலீஸ் பாதுகாப்பு எங்கெங்கே கணிசமாக வேண்டும், எங்கெங்கே குறைவாக வேண்டும் என்பதைப்பற்றி பொதுமக்கள் கவலைப்படத் தேவை யில்லை. போலீஸ் அதிகாரிகள் அந்தந்த சந்தர்ப்பத்திற்கும், சூழ்நிலைக்கும் ஏற்ப நடந்து கொள்வார்கள், இதை நாம் வரவேற்க வேண்டும். ஆகவே இந்தச் சட்டத்திலே மத சார்பு படைத்த கூட்டங்களுக்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ எஸ். பக்கிரிசாமிப் பிள்ளை அவர்கள் தொழிலாளர்களுடைய கூட்டங் களுக்கும், அதாவது அமைதியான முறையிலே அவர்கள் தங்கள் பிரச்னை களை வெளியிடுவதற்காக கூட்டங்கள் நடத்தினால், அதற்கும் விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்று சொன்னார்கள். இது யோசிக்க வேண்டிய விஷயமென்று நான் நினைக்கிறேன். இந்தக் கூட்டங்கள் அமைதியான முறையிலே நடப்பதற்கு, அந்தத் தொழிலாளர்களின் தலைவர்கள் பொறுப் பேற்றுக் கொள்ள வேண்டும். ஆகவே இந்தக் கூட்டங்களுக்கும், அவர்கள் அமைதியான முறையிலே நடப்பதற்கான பொறுப்பை ஏற்றுக்கொள்வார் களானால், விதிவிலக்கு கொடுப்பது அவசியமென்றுதான் நானும் நினைக் கிறேன். காரணம், தொழிலாளர்கள் தங்களுக்கு முதலாளிகளிடம் உள்ள குறைபாடுகளை இப்படிக் கூட்டங்கள் போடுவதன் மூலமாகவோ, அல்லது ஊர்வலங்கள் போவதன் மூலமாகவோதான் தெரிவித்துக் கொள்ள முடியும். அந்த ஒரு வழியைத்தான் அவர்களால் எளிதில் கடைப்பிடிப்பதற்கு முடிகிறது. வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. இதை அரசாங்கத் தரப்பிலே ஆலோசனை செய்து, இதற்கும் விதிவிலக்கு கொடுப்பார்களானால் வரவேற்கத்தக்கதாக இருக்கும். ஆகவே இதற்கு வேண்டுமானால் சிறிது விளக்கமாக விளக்கம் கொடுக்கலாம்.

அடுத்து, இந்தக் கொடும்பாவிப் பழக்கமே இப்போது மறைந்து போய் விட்டதென்றே சொல்லலாம். பழைய காலத்திலே இந்த காமன் விளையாட்டு, எரிந்த கட்சி, எரியாத கட்சி என்றெல்லாம் இருந்தது. அப்படிப்பட்ட மத சார்புடைய பழக்கத்திற்கு ஒரு சில பழைய நினைவுகளை எடுத்துக் கொண்டால் பரவாயில்லை. ஆனால் சில கட்சிகள் அவர் களுடைய எதிர்ப்பைத் தெரிவிப்பதற்காக, இந்த மாதிரி கொடும்பாவி கட்டுவதைப் பயன் படுத்திக் கொண்டு, உலகம் போற்றுகின்ற தலைவரை, நாடு போற்றுகின்ற தலைவரை, மதிப்பு என்பதே சிறுதும் கூட இல்லாமல் நடத்தி வருகின்றன. இதை அரசாங்கம் ஒருக்காலும் கவனிக் காமல் இருக்க முடியாது. அதை மட்டும் தடுப்பதற்கான முயற்சிகள் எடுக்கப்படவேண்டும். ஆகையினாலே மதிப்புக் கெட்ட ஒரு கட்சி மதிப்பு உள்ள தலைவரை வேறு வேலை இல்லாமல் கொடும்பாவி கட்டி இழுப்பது, இதற்கு ஒரு பாதுகாப்பு, போலீஸ் பந்தோபஸ்து என்றால் வெட்கக்கேடாக இருக்கிறது. தஞ்சையிலே நம்முடைய பிரதமர் பண்டித நேரு அவர்களை கொடும்பாவி கட்டி இழுப்பது, ஜனநாயக சர்க்காரில் அதற்கு பாதுகாப்பு, அந்த ப்ரொஸெஷனுக்கு பாதுகாப்பு கொடுக்கக் கூடிய அவல நிலை நாட்டிலே நிலவக் கூடாது. ஆகவே, இத்தகைய ஒரு சட்டத்தை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். பண்புக்கு குறைவான பழக்கவழக்கங்கள் நிலவுவது சரியல்ல. மதிப்புள்ள ஒருவரை மற்றவர்கள் இழிவுபடுத்த வதை பார்த்துக் கொண்டு இருப்பது ஜனநாயக சர்க்காருக்கு அழகு அல்ல. இந்தச் சட்டத்தை இன்றுவது கொண்டுவந்தார்களே என்று அதை வரவேற்று, இதை பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனைக்கு விடவேண்டிய தில்லை, இன்றே சட்டசபையில் இதை பாஸ் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். போலீஸ் அதிகாரிகள் தக்க வகையில் தங்க ளுடைய அதிகாரங்களை பிரயோகப்படுத்துவதற்கும், ஜனநாயக சர்க்காரில் பாதுகாப்பு எல்லோருக்கும் இருப்பதற்கும் இந்தச் சட்டம் தேவை என்று சொல்லி, என்னுடைய வார்த்தைகளை முடிக்கிறேன்.

11-30 a.m.

**Sri M. KALYANASUNDARAM:** கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதாவின் மீது நண்பர் பக்கிரிசுவாமி பிள்ளை அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை நான் ஆதரித்துப் பேசுகிறேன்.

நண்பர் பக்கிரிசுவாமிபிள்ளை அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தம் இந்த மசோதாவை மட்டுமே, இந்தத் திருத்த மசோதாவை மட்டுமே செலக்ட்கமிட்டியின் பரிசீலனைக்கு விட்டு, பரிசீலனை செய்து பிறகு முடிவு எடுக்கலாம் என்று கூறுகிறது. அதை ஏன் ஆட்சேபிக்க வேண்டும் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்தச் சட்டம் 1888-ம் ஆண்டு நிறைவேற்றப்பட்டு, அன்று தொட்டு இன்று வரை அமுலில் இருந்து வரக்கூடிய சட்டம், சில திருத்தங்கள் இடையிடையே செய்யப்பட்டிருந் தாலும் கூட, இது மற்ற ஜில்லாக்களிலும் கூட அரசாங்கத்தினுடைய உத்திரவுப்படி அமுல் நடத்தப்படுகிறது. சென்னை நகரத்திற்கு என்று விசேஷமாக இயற்றப்பட்ட இந்தச் சட்டம்தான் இப்பொழுது நம் ராஜ்யம் பூராவுக்கும் பயன்பட்டு வருகிறது. இப்படி ஒரு சட்டத்திற்கு அவசியம் இருந்தால், இந்தச் சட்டத்தை பூராவாக பரிசீலனை செய்து எந்தெந்த ஷரத்துக்கள் நீக்கப்பட வேண்டும், என்னென்ன அம்சங்களில் இன்னும் போலீஸுக்கு அதிகாரம் இருக்க வேண்டும் என்பதையெல்லாம் ஆராய்ந்து எல்லோரும் ஒப்புக்கொள்ளக் கூடிய முறையில் ஒரு நல்ல சட்டம் இயற்ற லாம்.

போலீஸ் அவசியமே இல்லை என்று கூறிவிட முடியாது. போலீஸ் அவ சியம் இருக்கத்தான் வேண்டியிருக்கும். அவர்களுக்குச் சில கடமைகள் இருக்கும், அந்தக் கடமைகளை சரியாகச் செய்ய வேண்டும். இப்பொழுது செய்யப்பட்ட புகார்களை எல்லாம் பார்க்கிறபொழுது, போலீஸைப் பார்த்து கண்டிப்பதா அல்லது பரிதாபப்படுவதா என்று என்னால் முடிவுக்கு வர முடியவில்லை. போலீஸின் நிலைமை பரிதாபகரமாக இருக்கிறது என்ற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது. அவர்கள் மேலிருந்து வரக் கூடிய உத்தரவுகளை நிறைவேற்றக் கூடியவர்களாக இருக்கிறார்கள். எதிர்க் கட்சி, ஜனங்கள் இவர்களுடைய எண்ணம் எப்படி இருக்கிறது என்பதை அவர்களால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. சங்கடமான நிலையில் இருக்கிறார்கள். பல கட்சிகள் இருக்கக்கூடிய நிலையில் அவைகளுக்கிடையே போட்டி, ஆளும் கட்சிக்கும் எதிர்க் கட்சிக்கும் போட்டி, இதற்கிடையே சம்பளம் வாங்கிக் கொண்டு தங்கள் வேலையைச் செய்ய வேண்டும், கடமையைச் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியோடு அவர்கள் வேலை செய்து வருவது ரொம்பவும் பரிதாபகரமானதுதான். அவர்கள் சொந் தமாக அதிகாரத்தை உபயோகப்படுத்தக்கூடிய அளவு ரொம்ப குறைவாக இருக்கிறது. இப்பொழுது இந்த மசோதாவில் இருக்கக்கூடியது ஒரு வகையில் கொஞ்சம் தளர்த்தப்படுவதாகச் சொல்லலாம். கமிஷனர் அதிகாரத்தை ஓரளவுக்கு கட்டுப்படுத்துகிற அளவுக்கு அமைந்திருக்கிறது என்று சொல்ல லாம். பதினைந்து நாட்களுக்கு மேல் கூட்டங்களை, ஊர்வலங்களைத் தடை செய்ய முடியாது. அதற்கு மேல் அவரால் தடை செய்து உத்தரவு பிறப்பிக்க முடியாது. ஆனால் ஒரு நாள் விட்டு இன்னொரு 15 நாட்களுக்கு தடை செய்து புது உத்தரவு போடலாம். அதற்கு அதிகாரம் இதிலேயே இருக்கிறது. அந்த உத்திரவை அப்படியே தொடர்ந்து நீடிக்க வேண்டு மென்றாலும், அரசாங்கத்தினுடைய அனுமதியைப் பெற்று 15 நாட் களுக்கு மேலாக தடை உத்தரவை நீடிக்கலாம். அதை எப்படி வேண்டு மானாலும் செய்துகொள்ளலாம். இதை ஒரு பெரிய திருத்தம், தாராளம் என்று ஒப்புக் கொள்ள முடியாது. ஒரு நாள் இடையிலே விட்டு மறு படியும் 15 நாட்களுக்கு தடை உத்திரவு போடலாம். வேண்டுமானால் அரசாங்கத்தினுடைய அனுமதி பெற்று தொடர்ந்து தடை உத்திரவு போடலாம்.

மாதக் கணக்கில், ஊர்வலங்கள், கூட்டங்கள் இவைகளை தடை செய் வதற்கு அதிகாரம் அவசியமா ? இது ஒரு அரசியல் பிரச்னை அல்லவா ? இந்த பழி பாவத்திற்கெல்லாம் ஏன் போலீஸை ஆளாக்க வேண்டும் என்று அமைச்சர்கள் சிந்தித்துப் பார்க்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். ஆளும் கட்சித் தலைவர்கள், அமைச்சர்கள் இந்த நாட்டில் தேசிய இயக்கத் தில் பங்கு எடுத்துக் கொண்டவர்கள், முக்கியமான மந்திரிகள் எல்லோரும். நம்முடைய மக்களின் சுதந்திரத்திற்காக, கூட்டம் கூடுவதற்கான சுதந் திரத்திற்காக போராடி வந்திருக்கக்கூடிய பரம்பரையைச் சேர்ந்தவர்கள் தான். அப்படியிருக்கும்பொழுது கூட்டங்களைகட்டுப்படுத்த வேண்டிய அவ சியம் என்ன ? "மைக்" வைப்பதை கட்டுப்படுத்த வேண்டிய அவசிய

28th September 1961] [Sri M. Kalyanasundaram]

என்ன ? இது ஒரு அரசியல் பிரச்னை அல்லவா ? யாராவது இம்மாதிரி ஒழுங்கீனமாக காரியங்கள் செய்வார்களானுல், அதை சட்டம் போட்டு தடுத்துவிட முடியுமா ? சட்டத்தின் நோக்கத்தை நிறை வேற்ற முடியுமா ? பொது ஜன அபிப்பிராயத்தை எந்த அளவிற்கு உருவாக்குகிறோம், ஆளும் கட்சி எந்த அளவிற்கு பொறுப்பு எதிர்கட்சிகளை ஆத்திரம் மூட்டு வதற்கு என்பதையெல்லாம் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். எந்தக் கட்சி முதலில் குற்றவாளி என்பதை ஆராய்ந்து பலன் இல்லை சென்னை நகரத்தில் கூட்டங்களில் போலீஸார் தலையிடுவதற்கு அவசியம் என்ன ? கட்சிகளின் பொறுப்பு என்ன ? எல்லாக் கட்சித் தலைவர்களை யும் கூப்பிட்டுப் பேசி, சட்டம் இருந்தால் கூட, அதற்கு அவசியமில்லா மல் செய்ய வேண்டிய பொறுப்பு அமைச்சர்களுக்கு இருக்கவில்லையா ? அந்தப் பொறுப்பை அவர்கள் நிறைவேற்றியிருக்கலாமே ?

இதையெல்லாம் கலந்து பேசிச் செய்ய வேண்டுமென்று சொல்லி, கமிஷனர் ஏதோ சில கட்சிகளை கூப்பிட்டுப் பேசினதாகவும், ஒரு டிவி ஷனுக்கு ஒரு கூட்டம் போடலாம் என்று ஒப்புக் கொண்டதாகவும், ஒரு அறிக்கையிலே பார்த்தேன். அம்மாதிரி அறிக்கை வெளி வந்த மறு நாளே என்னுடைய கட்சி சம்பந்தப்பட்ட மட்டில் சென்னை நகர கிளைக்குப் பொறுப்புள்ளவர்கள் "அதற்கும், எங்களுக்கும் சம்பந்தம் இல்லை" என்று அறிவித்து விட்டார்கள். கம்யூனிஸ்டு கட்சி அதை ஒப்புக் கொள்ளவில்லை. அம்மாதிரி செய்வதற்கு அவசியம் இருக்காது. அம்மாதிரி ஒரு டிவிஷ னுக்கு ஒரு கூட்டம் என்று கட்டுப்படுத்துவதற்கு நாங்கள் ஒத்துக் கொள்ளவில்லை. மேலும் இந்த சமயத்தில் விவாதம் நடந்த பிறகு திராவிட முன்னேற்றக் கழகமும் அதை ஒப்புக் கொண்டதாகத் தெரிய வில்லை. ஆகவே, அதை யார் ஒப்புக் கொண்டிருக்கிருர்கள் என்று எனக்குப் புரிந்து கொள்ள முடியவில்லை. காங்கிரஸ் கட்சி ஒன்று ஒப்புக் கொண்டால் எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொண்டு விட்டதாக அர்த்தமா ? காங்கிரஸ் கட்சிக்கு அதிகக் கூட்டங்கள் போட வேண்டிய அவசியமே இல்லை. ஏதோ பிறந்த தினம் கொண்டாடினுல் போதும். அவர்கள் அரசாங்கத் தை உபயோகப்படுத்திக் கொண்டு விளம்பர இலாகாவை உபயோகப் படுத்திக் கொண்டு, அரசாங்க சார்பிலே செய்யக்கூடிய பிரசாரமெல் லாம் காங்கிரஸ் பிரசாரத்திற்கு பயன்பட்டுக் கொண்டிருக்கிறது. திறப்பு விழா, அடிக்கல் நாட்டு விழா போன்றவைகளில் கலந்து கொண்டு காங் கிரஸ் பிரசாரம் செய்யலாம். அவர்களுக்கு அதற்கு வேண்டிய சந்தர்ப் பம் இருக்கிறது. ஆனுல், எதிர்கட்சிகளுக்கு, குறிப்பாக தொழிலாளர் களுக்கு, சமுதாயத்தில் அடிதட்டில் இருக்கக்கூடிய மக்களோடு தொடர்பு கொண்டிருக்கக் கூடிய கட்சிகளுக்கு அம்மாதிரி வாய்ப்பு கிடையாது. நம்முடைய நாட்டில் மக்களுக்கு படிப்பு குறைவாக இருப்பதனுல், மக்களுக்கு விஷயங்களையெல்லாம் எடுத்துச் சொன்னுல்தான் தெரியும். அரசாங்கம் கொண்டு வந்திருக்கக் கூடிய திட்டங்களைப் பற்றி நல்லதையும் சொல்ல வேண்டும், கெடுதலையும் சொல்ல வேண்டும். அதேமாதிரி அரசாங்கத் தினுடைய கொள்கையில் உள்ள கோளாறுகளையும் சொல்ல வேண்டும். நல்லதையும் சொல்ல வேண்டும். அப்படி எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பு இருக்க வேண்டுமென்ருல் ஒரு டிவிஷனுக்கு ஒரு நாளைக்கு ஒரு கூட்டம் என்று தடைசெய்தால் ரொம்பவும் கஷ்டமாக இருக்கும். உதாரணமாக நான் நேற்று ஒரு கூட்டத்தில் பேசினேன். ஸ்ரீ அன்பழகன் அவர்கள் சொன்ன மாதிரி அவர்கள் கூட்டம் போட வேண்டும் என்று கேட்ட இடத்திற்கும், நான் பேசிய இடத்திற்கும் அதிக தூரம் இருக்கிறது. இரண்டு மைலுக்கு அதிகமான தூரம் இருக்கிறது. அப்படியிருக்கும் பொழுது அந்தக் கூட்டத்திற்கும் அனுமதி கொடுப்பதில் என்ன கஷ்டம் ? நான் பேசின கூட்டத்தில் ஒரு கலகம் ஏற்படவில்லை. ஆனுல் போலீஸ் நிறையாக இருந்தார்கள். நானே இவ்வளவு போலீஸ் எதற்காக என்று ஆச்சரியப்பட்டேன். போலீஸை ஒரு விதத்தில் வரவேற்கிறேன். அமைச் சர்களுடைய கூட்டத்திற்குப் போவதைவிட என்னுடைய கூட்டத்திற்கு போலீஸார்கள் வருவார்களேயானுல், போலீஸ்காரர்களுக்கும் கொஞ்சம் அரசியல் தெரியும், அரசியல் விஷயங்களில் தெளிவு ஏற்படும். போலீஸ் பாதுகாப்பு எங்களுக்கு வேண்டாம். போலீஸ் பாதுகாப்புடன்தான் நாங்கள் இந்த நாட்டில் கூட்டங்கள் நடத்த முடியும் என்ற நிலைமை

[Sri M. Kalyanasundaram] [28th September 1961

எங்கள் கட்சிக்கு ஏற்படுமேயானுல், எங்களுடைய கட்சி இருப்பதற்கே லாயக்கில்லை என்று நான் கருதுகிறேன். போலீஸ் உதவி அவசியமே இல்லை. தனிப்பட்ட முறையில் கூட எங்கள் கட்சிக்கு போலீஸார் உதவியை நாங்கள் நாடமாட்டோம். அப்படி நாடுவது வெட்ககரமான காரியம் என்று நான் கருதுகிறேன். போலீஸ் உதவி எதற்குத் தேவை ? பொதுவாக நிர்வாகம் நடந்து வருவதற்காகதத்தான். அரசியல் கட்சிக் கூட்டங்களுக்கு போலீஸ் பாதுகாப்பு தேவை என்ற நிலைமை என் ஏற்பட வேண்டும் எல்லாக் கட்சிகளும் அவர்களுடைய கடமையை ஒழுங்காகச் செய்தால், ஜனங்களுக்காக ஏற்பட்டது அரசியல் கட்சிகள் என்பதை உணர்ந்து கட்சிகள் நடந்து கொண்டால், இதற்கு அவசியமே இருக்காது. அரசியல் கட்சிகள் இதற்கு பொறுப்பு ஏற்கவேண்டும். என்னுடைய கட்சி சார்பில் நான் அதற்கு உறுதி கொடுக்க முடியும். அதே மாதிரி என்னுடைய நண்பர் அன்பழகன் அவர்களும் எதிர்கட்சிகள் சார்பிலே பேசி ஒரு முடிவுக்கு வரலாம், அப்படி எல்லாக் கட்சிகளையும் கூப்பிட்டு கலந்து பேசலாம் என்று சொன்னுர்கள். கூட்டத்திற்கு போலீஸ் வரவில்லை என்றுல், ஏதாவது அசம்பாவிதமான நிகழ்ச்சிகள் ஏற்பட்டால் என்ன செய்வது என்று அமைச்சர் பயப்படலாம். அப்படி ஏதாவது எந்தக் கூட்டத்திலாவது கலவரம் நடந்தால் " நீங்கள் என் போலீஸ் பந்தோபஸ்து அனுப்பவில்லை ? போலீஸ் என்ன செய்தது தூங்கிக் கொண்டிருந்ததா ? " என்று நாங்களே குற்றம் சாட்டலாம் என்று அமைச்சர் அவர்கள் கேட்கலாம். அப்படி அரசியல் கட்சி ஒன்றுக் கொன்று பலாத்காரத்திஞல் தங்களுடைய தகராறுகளை தீர்த்துக் கொள்ளலாம் என்று எந்தக் கட்சியாவது நினைக்குமானுல் அந்தக் கட்சிக்கு நம்முடைய நாட்டில் இடம் இருக்கக் கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். பலாத்காரத்தின் மூலம் செய்வது என்பது அவசிய மற்றது. (குறுக்கீடு) அப்படியென்றுல், ஜனங்கள் பார்த்து அபிப்பிராயம் கொடுக்கட்டும். கல்லை வீசுகிறது என்பதெல்லாம் ஏதோ ஒரு கூட்டத்தில் நடக்கலாம். அப்படியே நடந்துக்கொண்டிருந்தால், ஜனங்கள் பார்த்து அதை வெறுப்பார்கள். இப்பொழுது சொல்லப்பட்டது, கொடும்பாவி கட்டி இழுக்கிறுர்கள் என்று. இதெல்லாம் கூட நாளடைவில் கேவலமாக நினைக்கப்பட்டு நின்று போகும். அந்த மாதிரி பண்பற்றவர்கள் அல்ல நம் தமிழ் நாட்டு மக்கள். தமிழ் மக்கள் அறிவுடையவர்கள். பண்பு உள்ளவர்கள். அரசியல் கட்சிகள் தவருக நடந்தால், அதில் போலீஸார் தலையிட்டு செய்துதான் ஆகவேண்டும் என்பது இல்லை. ஏதோ கலகம், ரத்தக்கிளரி என்றுல் அவைகளைத் தடுக்க வேண்டும். ஆனுல், போலீஸார்களை, அரசியல் அபிப்பிராயங்களை விளம்பரப் படுத்தும் கருவிகளாக இருக்கக் கூடாது. அப்படி விடுவதில் ஒரு " ரிஸ்க் " இருக்கத்தான் செய்கிறது. ஆனுல், அந்த " ரிஸ்கை " எடுக்க வேண்டும். எந்தக் கட்சி யானுலும், ஒழுங்கீனமான முறையில் நடந்தால் நடவடிக்கை எடுக்க வேண்டியதுதான். அது காங்கிரஸாக இருந்தாலும் சரி, கம்யூனிஸ்டாக இருந்தாலும் சரி அல்லது திராவிட முன்னேற்றக் கட்சியாக இருந்தாலும் சரி. அப்படி அமைச்சர் சவால் விட்டால் அதை ஏற்றுக் கொள்ளத் தயார். இதிலெல்லாம் போலீஸ் பொறுப்பு கொஞ்சம்தான் ; அரசியல் கட்சிகள் பொறுப்பு மிகப் பெரிது. அமைச்சரும் ஒரு கட்சித் தலைவர்தான். ஏன் எல்லாக் கட்சித் தலைவர்களையும் கூட்டி வைத்துப் பேசிப் பரிகாரம் தேடக் கூடாது ? கல்விப் பிரசனையை, பஞ்சாயத்துக்கள் பிரச்னையை, கட்சிகள் சேர்ந்து பேசவில்லையா ? அப்படி இந்த போலீஸ் சட்டத்தையும் எல்லாக் கட்சித் தலைவர்களின் கருத்துக்களையும் பெற்று செய்தால் கட்டுப்பாட்டை அனுஷ்டிப்போம் என்ற முறையில் திருத்தலாம் : சுதந்திரமும் கொடுப்போம் என்ற முறைகளில் ஒரு முடிவு செய்யலாம்.

மைக் வைப்பது, கூட்டங்கள் நடத்துவது இவைகளிலெல்லாம் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இப்பொழுது சட்டப்படி கமிஷனர் தடை உத்ரவை பிறப்பிக்க 5 நாட்களுக்கு முன் கொடுக்க வேண்டும் என்றிருக்கிறது. அவர்களுக்கும் அந்த இலாகா சிப்பந்திகளுக்கும் அது கடுமையான வேலை. அதற்கு அவசியம் இருக்கிறதா ? எந்த சூழ்நிலையில் அம்மாதிரி பிரேரேபிக்க வேண்டும் என்று பார்க்கவேண்டும். நான் அதை ஓரளவுக்குச் சரிசெய்ய திருத்தம் கொடுத்திருக்கிறேன். இந்த மாதிரி நடவடிக்கை கமிஷனர் எடுக்க வேண்டிய அவசியம் இல்லை. நம் நாட்டில் பெரும்

28th September 1961] [Sri M. Kalyanasundaram]

அளவுக்கு அமைதி நிலவுகிறது. ஏதோ ஒரு சில இடங்களில் செருப்பை எடுத்து வீசிவிட்டார்கள், கல்லை எடுத்து விட்டார்கள் என்றால், அது எப்பொழுதாவது நடக்கக் கூடிய காரியம். சென்னையில் இருக்கக் கூடியவர்கள் வெறி பிடித்துத் திரிகிறார்கள். ஒருவர் கழுத்தை ஒருவர் அறுக்க முயற்சிக்கிறார்கள் என்று சொல்வதுபோல் பிரசார முயற்சிகள் எடுக்கப் படுவதை நான் ஆட்சேபிக்கிறேன். சென்னை நகரத்தில் இருக்கும் 3,000 சொச்சம் போலீசார்களா இங்கே அமைதியை நாட்டுகிறார்கள்? அல்லது இந்த மாகாணத்தில் உள்ள 30,000 போலீசார்கள் துப்பாக்கியை வைத்தா சமாதானத்தை நீடிக்கிறார்கள். நம் மக்கள், தொழில் சங்கங்கள், மற்ற அரசியல் கட்சிகள் பெரும்பாலும் அமைதியாகவே நடந்துகொள்ளுகிறார்கள். இங்கே, அங்கே தவறுகள் நடந்தாலும், அது பெரும்பாலான நடவடிக்கை என்று கொள்ள முடியாது. ஆகவே, நம் மாநிலத்தில் கூட்டங்களோ கிளர்ச்சிகளோ அமைதியான முறையில்தான் நடந்துக் கொண்டிருக்கின்றன என்பதை அமைச்சர் மனதில் வைத்துக்கொண்டால், இம்மாதிரியான திருத்தத்திற்கு அவசியமே இருக்காது.

இப்பொழுது 10 நாட்களாக சமாதானமாகக் கிளர்ச்சிகள் நடந்து 14,000 ஊழியர்களுக்கு மேல், இந்த நிலச் சீர்திருத்தச் சட்டத்தைத் திருத்தவேண்டும் என்று, சிறை செய்யப்பட்டிருக்கிறார்கள். இதில் ஏதாவது பலாத்கார நிகழ்ச்சிகள் உண்டா? ஆகவே, போலீசும் பலாத்காரத்தை உபயோகிக்க வேண்டிய அவசியம் இல்லை. சில இடங்களில் போலீசும் தவறாக நடந்திருக்கலாம். அதனால் ஜனங்கள் ஆத்திரமடைந்து சில காரியங்கள் நடந்திருக்கலாம். யாரும் அகம்பாவத்தோடு கிளர்ச்சிகள் நடத்துவதில்லை. இன்றைக்கு இங்கே ஆர்பாட்டம் நடந்து அதில் கிட்டத் தட்ட 25,000 பேர்களுக்கு மேல் நம் சட்ட சபை முன் ஆர்பாட்டம் செய்தார்கள். (கனம் ஸ்ரீ எம். பக்தவத்சலம் அவர்கள் 50,000 என்று சொன்னார்கள்) 25,000 என்று நான் சொல்லுகிறேன். எந்தக் கட்சியும் தன் காரியத்தை சற்று அதிகமாகவேதான் சொல்லுவார்கள். அது எதாக இருந்தாலும், அமைச்சர் ஏன் அவ்வளவு சிரத்தையாகச் சொல்ல வேண்டும். அதை 50,000 என்பது அதிகமாக இருக்கலாம்; 25,000 என்று நான் சொல்லுகிறேன். அது அதற்குக் கொடுக்கவேண்டிய பெருமையைக் கொடுக்க வேண்டும். எவ்வளவோ வாலிபர்கள் உணர்ச்சியோடு வந்திருந்தார்கள். அமைதியான முறையில் கோஷம் செய்து, அமைதியான முறையில் நடத்த முடியும் என்று காட்டினார்கள். எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால், அமைதியான முறையில் ஆர்பாட்டம் நடத்த முடியும் என்பதை எடுத்துக் காட்டவே. அதேபோல, கோயம்புத்தூர், திருச்சி, தஞ்சாவூர் முதலிய இடங்களில் மக்கள் திரண்டு போகிறார்கள். இன்றைக்கு 6,000 செங்கொடி வீரர்கள் காவலில் இருக்கிறார்கள். அமைதியாக, கட்டுப்பாடான முறையில் இருக்கிறார்கள்; அங்குள்ள வார்டர்கள் மிக்க குறைவு; அவர்களுக்கு வேளாவேளைக்கு குடிக்கத் தண்ணீர்கூடக் கொடுக்க முடியவில்லை; 5 அல்லது 6 நாட்களுக்கு ஒரு முறைகூட அவர்கள் குளிக்கமுடியவில்லை. ஆனால், அமைதியாக இருக்க வேண்டும், கௌரவமாக நடந்துகொள்ள வேண்டும் என்று நடக்கிறார்கள். எதிர்க் கட்சி ஆர்பாட்டம் செய்தாலே, அரசாங்கத்தின் கொள்கைக்கு ஆபத்து என்று எலெக்ஷனுக்கு முன்பாக இம்மாதிரி திருத்தங்கள் கொண்டு வரப்படுகின்றன. அது சரியல்ல.

தனிப்பட்டவர்கள் சொந்தமான இடங்களில் கூட்டங்கள் போடுவதானால், அங்கே போலீசார் போக வேண்டிய அவசியம் இல்லை. அங்கே மைக் வைக்க அனுமதி கோர வேண்டிய அவசியம் இல்லை. இதுதான் முன்பு இருந்தது. இப்பொழுது அதைத் திருத்தி அமைக்க வருகிறார்கள். பல தொழில் சங்கங்கள் சொந்தமாகக் கட்டடங்கள் வைத்திருக்கின்றன. அங்கெல்லாம் கூட்டம் நடந்தால் மைக் லைசென்ஸ் வாங்கவேண்டிய அவசியம் இல்லை. இப்பொழுது இந்த சட்டப்படி அம்மாதிரிக் கூட்டங்களுக்கு லைசென்ஸ் வாங்கவேண்டியிருக்கும். கட்டடத்திற்குள்ளே கூட்டம் நடக்கும் போது கூட, ஷார்ட்ஹாண்ட் நோட்ஸ் எடுக்க போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர்களை அனுப்பவும், போலீசாரை உள்ளே அனுப்பவும் இவர்கள் அதிகாரம் எடுக்கிறார்கள். இந்தமாதிரிச் செய்து பார்க்கட்டும்; யார்

உள்ளே விடப் போகிறூர்கள் ; எடுக்கின்ற நடவடிக்கைகளே எடுக்கட்டும். இதுதாஞ சட்டத்தில் தாராளமாக செய்வது ? போலீஸார் ஷார்ட் ஹாண்ட் நோட்ஸ் எடுக்க காங்கிரஸ் கூட்டத்தில் அனுமதிப்பார்களா ? அந்த நோட்ஸுகளேப் பெற்று, இவர்கள் நம் அரசியல் கட்சியைச் சேர்ந் தவர்கள் யார் யார், விவரங்கள் என்னென்ன என்று புரிந்து கொள்ள சந்தர்ப்பம் இருக்கிறது. ஆனுல், ஆளும் கட்சியைப் பற்றி அறிய எதிர்க் கட்சிக்காரர்களுக்கு என்ன சந்தர்ப்பம் இருக்கிறது. சந்தர்ப்பம் கொடுப்பார்களா ? ஆகவே இதன் நோக்கம் என்ன ? அரசியல் கட் சிகளுக்கு தடை வேண்டும் என்ற நோக்கத்துடனும் எதிர் கட்சிகள் இருக்கக் கூடாது என்ற நோக்கத்துடனும்தான் இப்படிப்பட்ட திருத் தங்கள் செய்கிறூர்கள். இதை ஆர அமர பரிசீலனே செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில் தான் இதை செலெக்ட் கமிட்டிக்கு விட வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறூர்கள், அதைநான் ஆதரிக்கிறேன். இன்னும் இந்தச் சட்டத்தை நன்ருக பரிசீலனே செய்ய வேண்டியதாக இருக்கிறது. இப்படிப்பட்ட மாறுதல் வேண்டுமா அல்லது வேண்டாமா என்று பார்க்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. அதை செலெக்ட் கமிட்டியில் தான் பார்க்க முடியும். இந்தச் சட்டமே அவசியம் இல்லே. ஏற்கெனவே இருக்கக் கூடிய சட்டம் போதுமானது. இதைப்பற்றி பரி சீலனே செய்ய சட்டசபை அங்கத்தினர்களேக் கொண்டதும் ஒவ்வொரு கட்சித் தலேவர்களேக் கொண்டதும், அரசியல் கட்சித் தலேவர்களேக்கொண டதும், இது சம்பந்தமாக அதிகாரிகளேக் கொண்டதுமான ஒரு கமிட்டியை அமைத்து இதைப்பற்றி விவாதிக்க வேண்டும். அப்படி விவாதித்து இப் படிப்பட்ட ஒரு சட்டம் அவசியம்தாஞ என்று பார்க்கவேண்டும். அதற்கு என்று ஒரு கோட் அப் காண்டக்ட் வேண்டும். தொழிற் சங்கத் தலேவர் களேயும் கூட்டி ஒரு முடிவுக்கு வரவேண்டும். அந்த முடிவை எல்லா கட்சிகளும் ஏற்றுக்கொள்ளவேண்டும். அப்படி ஏற்றுக்கொண்டு அதன்படி நடக்கவேண்டும். அப்படி எல்லா கட்சிகளும் நடக்கிறதா இல்லேயா என் பதைப்பற்றி பரிசீலனே செய்து பார்க்க வேண்டும். அதற்கு என்று இம்பிளிமென்டேஷன், இவாலியூவேஷன் இதெல்லாம் இருக்க வேண்டும். அதை இம்பிளிமெண்ட் பண்ணும்போது ஏதாவது குறைபாடுகள் இருந் தால் அதைப்பற்றி பரிசீலனே செய்து அதற்கு பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டும். ஆகவே ஏற்கெனவே இருக்கக் கூடிய சட்டமே போதுமானது. இருக்கக் கூடிய அதிகாரத்தைத் தவிர அதிகப்படியான அதிகாரம் கொடுக்க வேண்டிய தேவை இல்லே என்ற என்னுடைய யோசனேகளே தெரிவித்துக் கொண்டு அவற்றை அமைச்சர் அவர்கள் சிரத்தையுடன் கவனிக்க வேண் டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளு கிறேன்.

*The Hon. Sri M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த திருத்த மசோதாவின் நோக்கத்தைப்பற்றி நான் முன்பே குறிப்பிட்டேன். அதைப்பற்றி கனம் அங்கத்தினர்களும் உணர்ந் திருக்கிறூர்கள். ஆனுல் பொதுவாக பலபிரச்சினேகளேப் பற்றியும், இந்த சிட்டி போலீஸ் ஆக்டைப் பற்றியும் இங்கே விவாதம் நடைபெற்ற இதை பொறுக்குக் கமிட்டிக்கு விடவேண்டும் என்று சொன்ன கனம் அங்கத்தினர் பொறுக்குக் கமிட்டியில் இதைப் பற்றி பரிசீலனே செய்ய வேண்டும் என்பதைப்பற்றி கூறுகிறூர் என்பது எனக்குப் புரியவில்லே. கூட்டங்களே தடை செய்வது பற்றியும் ஊர்வலங்கள் எப்படி போக வேண்டும் என்பதைப்பற்றியும் பலர் கூறினுர்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீமதி அனந்தநாயகி கூறியபடி கமிஷனருக்கு பதினேந்து நாட்களுக்கு மேலும் தடை விதிக்கலாம், முதலில் பதினேந்து நாட்களுக்குப் போட்டு விட்டு அவற்றை மேலும் பதினேந்து நாட்களுக்கு நீடிக்கலாம். அது இப்பொழுது மாற்றப்பட்டிருக்கிறது. இப்பொழுது கமிஷனர் முதலில் பதி னேந்து நாட்களுக்குப் போடலாம் என்றும் அதற்கு மேல் போட வேண்டும் என்று நினேத்தால் அவராகவே போடக் கூடாது, அரசாங்கத்தினுடைய அனுமதி பெற்றுத் தான் போடவேண்டும் என்பது இப்பொழுதுள்ள முக்கியமான திருத்தம். இந்த திருத்தம் ஸ்டேட் போலீஸ் ஆக்டின் பிரிவைப்பற்றியது. இது வேண்டாம் என்று சொன்னுல் இப்பொழுதுள்ள படியோதான் இருக்கும். போலீஸ் கமிஷனர் எவ்வளவு நாட்களுக்கு

வேண்டுமானுலும் தடை உத்தரவு போடலாம் என்று ஆகிவிடும். அப்படி இல்லாமல் பதினைந்து நாட்களுக்கு என்று இருப்பதை ஒரு வாரத்திற்கு என்று சொன்னுலும் அப்பொழுது இந்த திருத்தத்திற்கு அவசியம் இருக்கும். பதினைந்து நாட்களுக்கு மேல் அதிகமாக போட வேண்டும் என்று சொன்னுல் அதற்கு அரசாங்கத்தினுடைய அனுமதி பெறவேண்டும் என்று சொல்வதில் என்ன ஆட்சேபம் இருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை. திருத்தம் கொண்டுவரவில்லையென்ருல் இப் பொழுது இருக்கக் கூடிய சட்டப்படியேதான் இருக்கும். பழைய சட்டமே அமுலில் இருக்கும்படியாக இருக்கும்.

செக்ஷன் 41, சிட்டி போலீஸ் ஆக்டைப்பற்றி சொன்ஞர்கள். அது ஏற்கெனவே அமுலில் இருக்கிறது. கூட்டங்களையும் ஊர்வலங்களையும் எப் படி தடை செய்வது என்பதுபற்றி. அதாவது அனுமதியின் பேரில்தான் கூட்டங்களையும் ஊர்வலங்களையும் நடத்தலாம் என்று இருக்கிறது. ஊர் வலங்கள் எந்தெந்த தெருக்களில் வழியாகத்தான் போக வேண்டும் என்றும் எந்தெந்த இடங்களில் தான் கூட்டங்களைப் போட வேண்டும் என்றும் இரண்டு பேர்கள் ஒரே இடத்தில் கூட்டம் போடக் கூடாது என்றும் சட்டம் இருக்கிறது. ஊர்வலங்கள் எந்தெந்த சந்துக்கள் வழி யாகத்தான் போகலாம், எங்கு போகக் கூடாது என்ற முறையில் இப் பொழுது சட்டம் இருக்கிறது. எந்த டயத்தில், எந்த தெருக்களின் வழியாக எப்படிப் போக வேண்டும் என்பதைப் பற்றித்தான் இப்பொழுது சட்டம் இருக்கிறது. அதை ரெகுலேட் செய்வதற்குத்தான் இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. தடை செய்ய வேண்டும் என்பதற்கு அல்ல. யார் வேண்டுமானுலும் போகலாம், ஒருவருடன் ஒருவர் உராய்ந்து கொண்டு போகலாம் என்று இல்லாமல் அதை ரெகுலேட் பண்ணுவதற்குத்தான் இந்த திருத்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இந்த திருத்தத்தின் படி கமிஷனர் இரண்டு வாரங்களுக்கு மேல் தடை விதிக்கக் கூடாது. அப்படி விதிக்க வேண்டுமானுல் அரசாங்கத்தினுடைய அனுமதி பெற்றுத் தான் விதிக்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது.

மற்றொன்றையும் கனம் கலியாணசுந்தரம் குறிப்பிட்டார். பப்ளிக் ப்ளேஸ், ப்ரைவேட் ப்ளேஸ் என்று இருக்கிறது. ப்ரைவேட் ப்ளேசில் கூட்டங்களைக் கூட்டினுல் அதற்கு தடை விதிப்பானேன், அங்கே மைக் வைத்துக்கொள்வதற்கு தடை விதிப்பானேன், அதற்கு லைசென்சு வாங் குவானேன் என்றெல்லாம் கேட்டார். பொதுக் கூட்டங்களை நடத்துவதற் குத்தான் இந்த விதி விதிக்கப்பட்டிருக்கிறது. கமிட்டிகள் கூடுவதற்கு இந்தத்தடை கிடையாது. பொதுக் கூட்டங்கள் கூட்டுவதற்குத்தான் இந்தத் தடை. சில இடங்களில் இடம் கிடைக்கவில்லை. சென்னை நகர த்தில் இடம் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. தனிப்பட்டவர்களிடத்தில் இடம் இருக்கலாம். தனிப்பட்டவர்களுடைய இடம் பொது இடம் அல்ல. தனிப்பட்டவர்களுடைய இடத்தில் கூட்டம் போடுவதாக இருந்தால் அதை தடை செய்யக் கூடாது என்று சொல்லுகிருர்கள். தனிப்பட்டவர்களுடைய இடமாக இருந்தாலும் அதைத் தடுக்கலாம். சில இடங்களில் தனிப்பட்ட வர்களுக்கு மைதானங்கள் இருக்கும். பொது அரங்காக இருக்கும். க்ளோஸ்ட் டோர்களில் இருக்கும் அங்கேயெல்லாம் பல கூட்டங்களை நடத் தலாம். அவற்றிற்கு கவனிப்பு வேண்டுமா வேண்டாமா என்ற முறையில் அதற்கும் கவனிப்பு வேண்டும் என்ற முறையில் இது கொண்டுவரப் பட்டிருக்கிறது.

**Sri M. KALYANASUNDARAM :** கோகலே ஹால், மெமோ ரியல் ஹால் இம்மாதிரியான இடங்களில் பொதுக் கூட்டங்களை நடத் தினுல் அதை ஆட்சேபிக்கலாமா ? சில தனிப்பட்டவர்களுக்கு தனியா கவே இடம் இருக்கின்றன. ரயில்வே தொழிற் சங்கத்திற்கும், பி அண்ட் சி மில் தொழிற் சங்கத்திற்கு தனியாகவே இடமும் கட்டிடங்களும் இருக் கின்றனவே, அவைகளில் பொதுக் கூட்டம் நடத்தினுல் அதற்கு இது பொருந்துமா ? அங்கே பொதுக் கூட்டங்கள் நடத்துவதை ஆட்சேபிக்க வேண்டிய அவசியமில்லையே ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இடத்தைப் பொறுத்தது அல்ல. கூட்டங்களைப் பொறுத்து இருக்கிறது. பொதுக் கூட்டமாக இருந்தால் அவசியம் லைசென்சு வாங்க வேண்டும். கமிட்டி கூட்டமாக இருந்தால் அவசியம் இல்லை. ப்ரைவேட் அசெம்பளியைப்பற்றி அல்ல. இதில் முக்கியமான பிரச்னை பொதுக் கூட்டமாக இருந்தால் அது எந்த நிலமாக இருந்தாலும் அதற்கு விதி இருக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் தான் இது இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதைப் பொறுத்த மட்டில் இதை வைத்துக்கொண்டு மற்றப்படி பேசுவதற்கு தடை வதிப்பதுபற்றியெல்லாம் பேசினார்கள். ஜனநாயக முறையைப்பற்றியெல்லாம் குறிப்பிட்டார்கள். கனம் அங்கத்தினர்கள் பலர் இதைப்பற்றி அபிப்பிராயங்களும் தெரிவித்தார்கள். அதற்குப் பிறகு மைக்குக்கு லைசென்சு கொடுப்பதைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். போலீசாருக்கு அங்கே வேறு வேலை இல்லாமல் போகலாம். இது சம்பந்தமாக மற்றொன்றையும் சொல்ல விரும்புகிறேன். கூட்டம் போடுகிறவர்களுக்கு போலீஸ்காரர்கள் தேவையாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் மற்றவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதற்காகத்தான் போலீஸ்காரர்கள் போகிறார்கள். மைக் வைத்துக்கொள்வதில் சில நிபந்தனைகள் இருந்தாலும் எந்தெந்த இடத்தில் வைத்துக்கொள்ளலாம் எவ்வளவு நேரம் வைத்துக்கொள்ளலாம் என்பதைப் பற்றிய நிபந்தனைகளைப் பற்றியெல்லாம் குறிப்பிட்டார்கள். ஜனநாயகத்தைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் நான் ஜனநாயகத்தைப்பற்றி கற்றுக்கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிட்டார். ஜனநாயக முறையைப்பற்றி நான் அவரிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. (ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் : வேறு யாராவது ஆசிரியர்களைக் கொண்டு தெரிந்துகொள்ளலாம்.) இப்படிப்பட்ட சிறிய கருத்துக்களைப் பற்றி ஸ்ரீ கோதண்டராமன் தெரிவித்தார். அவர்களிடமிருந்து நான் கற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஆசிரியர்களைத் தேடிக் கொண்டுபோக வேண்டிய அவசியமும் இல்லை. நான் இனிமேல் கற்றுக் கொள்ள தயாராக இல்லை. ஜனநாயக முறையைப் பற்றியும் அமைதியைப்பற்றியும் நான் இனிமேல் கற்றுக்கொள்ள தயாராக இல்லை. ஆசிரியர்களைத் தேடிக்கொண்டு போவதாக இருந்தால் நல்ல ஆசிரியர்களைத்தான் தேடிக்கொண்டு போக வேண்டும். போலீஸ்காரர்கள் இவ்வளவு பேர்களும் என்ன செய்கிறார்கள் என்று குறிப்பிட்டார், அதிலும் கனம் அன்பழகன் குறிப்பிட்டார். கனம் கலியாணசுந்தரம் அவர்களும் குறிப்பிட்டார். போலீஸ்காரர்களுக்கு இங்கே வேலை இல்லாமல் போகவில்லை. அவர்களுக்கு பாதுகாப்பு வேண்டியதாக இல்லாவிட்டாலும் மற்றவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்குத்தான் போலீஸ்காரர்கள் போகிறார்கள். மைக்குக்கு சில நிபந்தனைகள் இருந்தாலும் அதுவும் மற்றவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் அளவில் இருக்க வேண்டியதாக இருக்கிறது. கூட்டத்திற்கு லவுட் ஸ்பீக்கர் வேண்டுமென்றாலும் அது மற்றவர்களுக்கு தொல்லையைக் கொடுக்காமல் இருக்க வேண்டியதாக இருக்கிறது. கூட்டத்தை நடத்தலாம் அமைதியான முறையில் நடத்தலாம். ஆனால் திடீரென்று ஏதாவது பங்கம் விளையலாம். அதற்கு போலீஸ் அவசியமாக இருக்கும். சாதாரணமாக ஜனங்கள் போலீஸ்காரர்கள் வேண்டாம் என்று சொல்ல மாட்டார்கள். இப்பொழுது சாதாரணமாக பொது மக்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால் போலீஸ் ஸ்டேஷன்கள் வேண்டும் என்று கேட்கிறார்கள். போலீஸார் வேண்டாம் என்று யாரும் சொல்லவில்லை. போலீஸ் வேண்டும் என்று கேட்பதை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். பங்கம் வராது என்பது கூட்டத்தை நடத்துகிறவர்களுடைய கையில் இல்லை. சாதாரணமாக கூட்டங்களில் கேள்விகள் கேட்கிறார்கள். சீட்டு எழுதி அனுப்புகிறார்கள். கூட்டத்தில் கேள்வி கேட்பதை நான் ஆட்சேபிக்கிறேன். கேள்விகள் கேட்பது அதற்கு பதில் சொல்வது என்பது சரியல்ல, என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கூட்டம் நடக்கும்போதே சீட்டு எழுதிக் கேள்வி கேட்கிறார்கள். சீட்டுக்குப் பதில் சொல்லும் வழக்கமே கூடாது. அப்படித்தான் என்னைச் சேர்ந்தவர்களுக்கு நான் சொல்கிறேன். சீட்டை "ஸீரியல்" ஆக எடுத்துக்கொண்டு

12-00 noon.

28th September 1961] [Sri M. Bhaktavatsalam]

பதில் சொல்ல ஆரம்பித்தால் மேலும் மேலும் வந்துகொண்டே இருக்கும். நேரடியாக எழுந்து கேள்வி கேட்டாலும், "சும்மா உட்கார்" என்று சொல்லவேண்டியதுதான்.

யாராவது அடிக்கப்படுகிறுன். தாக்கப்படுகிறுன். கலாட்டா வருகிறது. கலாட்டா வந்தால் என்ன செய்வது ? கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் இதெல்லாம் தெரிந்துதான், எதிர்பார்த்துத்தான் சொன்னுர் என்று நான் நினைக்கிறேன். போலீஸ் வேண்டியிருப்பதால் தான் வைத்துக்கொள்கிறோமே தவிர, வேலே இல்லே என்பதற்காக அவர்களே வைத்துக்கொள்ளவில்லே. "போலீசே வேண்டாம், நாங்களே போலீஸ் பணியைச் செய்கிறோம்" என்றுல், அதைப்பற்றி எனக்குக் கவலே இல்லே. கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் பெருமையோடு சொன்னுர்கள். நான் ஏன் வருத்தப்படுகிறேன் ? வருத்தப்படவில்லே. நான் மகிழ்ச்சியடைகிறேன். அவர் மன்றத்திலே பேசுகிறது ஒரு மாதிரி. வெளியிலே பேசுகிறது ஒரு மாதிரி. மன்றத்திலே போலீசாரைத் தாக்கிப் பேசுவது, வெளியிலே, போலீசார் இருக்கும் இடத்தில், அவர்களேத் தாக்கிப் பேசுவது என்றுல் அது எதைக் காட்டுகிறது ? போலீசாரிடத்தில் அச்சம் இருக்கிறது என்பதைக் காட்டுகிறது. (ஆரவாரம்). போலீசினிடத்தில் அச்சம் இருக்கத்தான் வேண்டும். எப்படிப்பட்ட அச்சம் ? குழந்தைக்குத் தாயினிடத்தில் இருக்குமே, அந்த அச்சம் போலீசினிடத்தில் மக்களுக்கு இருக்கவேண்டும் ; அரசியல் வாதிகளுக்குக் கூட ஓரளவுக்கு இருக்கவேண்டும். அந்த அச்சம் இருக்கிறது என்பதைக் கண்டு நான் பெருமிதம் அடைகிறேன். 50 ஆயிரம் பேர்கள் வந்தார்கள், ஆயிரக் கணக்கான போலீஸ்காரர்கள் வந்தார்கள் என்று சொல்லப்பட்டது. போலீஸ்காரர்கள் வருவதால்தான் அத்தனே பேர் வருகிறுர்கள். அமைதிக்குப் பங்கம் வராமல் பார்த்துக்கொள்ளும் பொறுப்பு போலீசுக்கு இருக்கிறது. ஏதோ போலீஸ் இரும்புத் தொப்பி போட்டிருந்தார்கள், வேறு தொப்பி போட்டிருந்தார்கள் என்றுர்கள். அதைப்பற்றி நாம் கவலேப்படவேண்டாம். அமைதிக்குப் பங்கம் வராமல் பார்த்துக்கொள்வதற்கான கடமை போலீசுக்கு இருக்கிறது. இத்தனே போலீசார் ஏன் வந்தார்கள் என்று கேட்டுவிடலாம். ஆனுல், அமைதிக்குப் பங்கம் வந்தால் அரசாங்கத்தின் பேரில்தான் நாளேக்குக் குறை சொல்லக் கூடும்.

கூட்டத்தினர் பேச்சாளருக்குக் கொஞ்ச தூரத்தில் இருப்பதுபற்றிச் சொல்லப்பட்டது. கனம் அங்கத்தினர் திரு. விநயகம் அவர்கள் ஒரு சிறந்த பேச்சாளர். இங்கிருக்கும் சிறந்த பேச்சாளர்களில் அவர் ஒருவர். அவர் பேச்சாளர்களுக்கு "டிப்ஸ்" கொடுத்தார். போலீசாருக்கும் "டிப்ஸ்" கொடுத்தார். அதெல்லாம் பேச்சாளர்கள் கவனிப்பார்கள். கூட்டம் நடத்துவதுபற்றியெல்லாம் சொல்லப்பட்டது. சாதாரணமாக நடக்கிறது. ஒலி பெருக்கி வைத்துவிட்டால் மற்றவர்களுக்கெல்லாம் பாதகமாக இருக்கிறது. மணிக்கணக்காக, அதுவும் இரவு 11 மணி வரைக்கும்கூட ஒலிபெருக்கி வைப்பதென்றுல் சுற்றுப்புறத்தில் இருப்பவர்கள் யாரும் தூங்க முடியாதபடி ரொம்ப நாராசமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

SRI A. GOVINDASAMY : மார்கழி மாதத்தில். . . . . . .

SRI N. K. PALANISAMI : கோயில் கோபுரங்களில்கூட ஒலிபெருக்கி வைக்கிறுர்களே. . . . . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விடியற்காலே 5 மணிக்குக் கூட்டம் வைப்பதாக இருந்தால்கூடப் பரவாயில்லே. ஆனுல், இரவில். . . . . . . . .

SRI K. ANBAZHAGAN : ஐந்து மணிக்கு வைக்கலாம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கல்யாண வீடுகளில் விடியற்காலே நான்கு மணிக்கே ஒலிபெருக்கி வைத்துவிடுகிறுர்கள். "ரிகார்டு ம்யூஸிக்" வைத்துவிடுகிறுர்கள். அதனுல் மற்றவர்களுக்குத் தூக்கம் கெட்டுப் போகிறது.

[28th September 1961

SRI A. GOVINDASAMY : கோயில்களில்கூட ரிகார்டு வைக் கிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மார்கழி மாதத்தில் ஐந்து மணிக்கு எழுந்திருப்பது நல்லது. கோயில்களில்கூட ஐந்து மணிக்கு முன்னால் வைப்பதில்லை. அங்கு திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள், திருப் பாவைப் பாடல்கள் வைத்திருக்கிறோம். அதையொட்டி, "நாங்களும் ஐந்து மணிக்கு வேறு பாட்டு பாடுகிறோம்" என்று யாராவது சொல்வ தாக இருந்தால், அதையும்கூட கேட்கத் தயாராய் இருக்கிறேன். (சிரிப்பு).

SRI A. GOVINDASAMY : கோயிலிலே கூட சினிமாப் பாட்டு குறிப்பாக "தூங்காதே தம்பி தூங்காதே" ரிகார்டு போடுவது அமைச்சருக் குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எனக்குத் தெரியாது. அது இருந்தால் கவனிக்கத் தயாராயிருக்கிறேன். அது வேறு விஷயம்.

பத்து மணிக்கு மேலே ஒலிபெருக்கி வைக்கவேண்டும் என்றெல்லாம் சொல்லப்பட்டது. பொதுத் தேர்தல் வருகிறது. அதையொட்டி இன்னும் சில "ரிலாக்ஸேஷன்கள்" வேண்டும் என்பதை நான் பாராட்டுகிறேன். அதிகமாகக் கூட்டம் நடக்கவேண்டியிருக்கும், இப்பொழுது கூட்டம் குறை வாக இருக்கிறது. 50 கூட்டங்களாவது சென்னை நகரில் நடத்த இடம் வேண்டும் என்று கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். இருந்தாலும், மற்றவர்களுக்குத் தடை இருக்கக் கூடாது. ஒருவருக்கொருவர் "க்ளாஷ்" வரக் கூடாது என்பதையும் பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. விதிகளை இன்னும் எதாவது தளர்த்தி, அதிகக் கூட்டங்கள் வைக்க அனுமதிக்க முடியுமா, தேர்தலையொட்டி வேறு என்ன என்ன ஏற்பாடு செய்வது, பத்து மணிக்கு மேல் அரை மணி நேரமாவது கூட்டலாமா, 11 மணி வரையில் அனுமதிக்க முடியுமா என்றெல்லாம் போலீஸ் கமிஷனர் ஆலோசித்துப் பார்த்தார்கள். 11 மணி வரைக்கும் வைக்கலாம் என்றால் சுற்றுப் புறத்தில் இருப்பவர்கள் யாரும் தூங்க முடியாது. அந்தத் தொல்லை இருக்கிறது. கூட்டத்திற்கு யார் வருவார்களோ அவர்களுக்கு மாத்திரம் கேட்கிற மாதிரி இருந்தால் நல்லது. அது முடியவில்லை. சிலர் சொல்கிறார்கள் வீட்டில் இருப்பவர் கள்—சொல்கிறார்கள்—"எந்தக் கட்சியாக இருந்தாலும் கவலை இல்லை, வோட் போட்டுவிட தயார், ஆனால் சப்தம் நாராசமாக இருக்கிறதே, எங்களுக்கு இந்தக் கவலை என்னத்திற்கு?" என்று. ஆகவே, மற்றவர் கள் பெரும் தொல்லையாகக் கருதும் அளவுக்கு இடம் கொடுக்கக்கூடாது. "கூட்டம் வைப்பது பற்றி போலீஸ் கமிஷனர் இங்கேயுள்ள கட்சி களைக் கலந்து பேசினார். நாங்கள் ஒப்புக்கொள்ளவில்லை" என்று ஒரு கனம் அங்கத்தினர் சொன்னார்கள். அன்று நடந்தது என்ன? எல்லாக் கட்சியினரையும் கூப்பிட்டார்கள். பேசினார்கள். "டிவிஷனில் ஒரு கூட்டம் வைப்பது" என்று சொன்னார்கள். ஆனால், கம்யூனிஸ்டுக் கட்சி யின் சார்பாக வந்த பிரதிநிதி, "இது முடியாது, இந்தக் கட்டுப்பாட்டுக்கு ஒப்புக்கொள்ள மாட்டேன்" என்று சொல்லிவிட்டார். ஆனால் தி. மு. க. ஒப்புக்கொண்டது. அந்தக் கூட்டத்தில் ஒப்புக்கொண்டு விட்டு, இப்பொ ழுது முடியாது என்று சொல்கிறார்கள்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, அமைச்சர் அவர் கள் சொல்கிறார்கள்—தி. மு. க. ஒப்புக்கொண்டது; இப்பொழுது, ஒப்புக் கொள்ளவில்லை என்று சொல்கிறார்கள்" என்று. நாங்கள் ஒப்புக்கொண் டோம், ஆனால், ஒப்புக்கொண்டபோது, என்ன தவறுதலான கருத்து ஏற்பட்டது என்றால், டிவிஷன் என்றதை கார்ப்பரேஷன் டிவிஷன் என்று கருதி ஒப்புக்கொண்டுவிட்டார்கள். பின்னர் தான் அது போலீஸ் டிவி ஷன் என்று தெரிந்தது. ஏழு எட்டு கார்ப்பரேஷன் டிவிஷன்கள் சேர்ந்துதான் ஒரு போலீஸ் டிவிஷன் என்று தெரிந்து, நெருக்கடி ஏற் பட்டதே தவிர, ஒப்புக்கொண்ட கருத்தை, இப்பொழுது ஒப்புக்கொள்ள வில்லை என்று யாரும் மறுக்கவில்லை என்று கூற விரும்புகிறேன்.

28th September 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த கனம் அங்கத்தினர், ஜனநாயக உரிமையைப் பற்றிப் பேசினார். இவர் களை வைத்து என்ன பேசுவது? போலீஸ் கமிஷனருக்குப் பொறுப்பு இருக்கிறது. எல்லோரையும் கலக்கிறார். கூடியவரை கலப்பார். மறு படியும் கலப்பார் . . .

SRI M. KALYANSUNDARAM : அரசாங்க லெவலிலே செய்யலாமே.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எதற்கும் அரசாங்கம் தலை யிட முடியாது. போலீஸ் கமிஷனருக்குப் பொறுப்புகள் இருக்கின்றன. அவர் செய்வதில் ஏதாவது தவறுதல் இருந்தால், அப்பொழுது வேண்டு மானால் அரசாங்கம் தலையிடலாமே தவிர, சாதாரணமாக நிர்வாகத் துறையில் போலீஸ் கமிஷனர் செய்வதில் அரசாங்கம் குறுக்கிட்டு, தலையிட்டு, இப்ப படித்தான் செய்யவேண்டும் என்று சொல்வது முறை அல்ல என்பது என்னுடைய கருத்து. சமீபத்தில் வருகிற தேர்தலையொட்டி, வேறு என்ன என்ன வகையிலே விதிகளைத் தளர்த்தக்கூடும் என்பதைப் போலீஸ் கமிஷனர் கவனித்து அதற்கு வேண்டிய வழிவகை தேடுவார் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

இதற்கெல்லாம் முக்கியமானது அமைதியைப் பாதுகாக்கவேண்டும். பாது காப்பு, கூட்டத்திலே உள்ளவர்களுக்கு அல்ல, அமைதிக்குத்தான் பாது காப்பு. அமைதிக்குத்தான் பாதுகாப்பு என்றால், இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்வது போலத்தான். சாகாவிட்டாலும் "இன்ஷ்யூரன்ஸ்" செய்து கொள் வதைப் பார்க்கிறோம். அதேபோல் குற்றம் நடக்கவில்லையே என்றாலும், பாதுகாப்பு அளிக்கவேண்டியது அவசியமாகிறது. சென்னை நகரின சரித் திரம் தெரியும். சில மாதங்களுக்கு முன் சென்னை நகரம் என்ன நிலையில் இருந்தது? கூட்டங்கள் எப்படி நடந்தன? எத்தகைய தக ராறு ஏற்பட்டது? எவ்வளவு தூரம் பலாத்காரம் உபயோகிக்கப்பட்டது? இதையெல்லாம் யாரும் மறந்திருக்க முடியாது. ஆகவே, போலீஸ் கமி ஷனருக்குப் பொறுப்பு இருக்கிறது. அதை உணர்ந்துதான் சில விதிகள் விதிக்கின்றார்களே தவிர, ஜனநாயகத்தில் குறுக்கிட வேண்டும், கூட் டத்திலே குறுக்கிட வேண்டும் என்பதற்காக அல்ல. இப்பொழுது அவ் வாறு நடைபெற்றுக்கொண்டு வருகிறது.

இப்பொழுது கொண்டுவருவது சிறிய திருத்தந்தான். 15 நாட் களுக்கு மேற்படாமல் இருக்கவேண்டுமென்றால், செலக் கமிட்டி போட்டு என்ன செய்வது? கனம் அங்கத்தினர் திரு கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள், "போலீஸ் ஆக்டை ராஜ்யம் பூராவுக்கும் அமுலுக்குக் கொண் டுவரும் வகையில் சட்டத்தை மாற்றலாமே," என்று. அது வேறு விஷயம். அதற்கு அவகாசம் வேண்டும். அது செலக்ட் கமிட்டிக்குப் போக வேண் டுமே தவிர, இது போக வேண்டிய அவசியம் இல்லை.

இன்னொரு பிரிவைப்பற்றி, கனம் அங்கத்தினர்கள் சொல்லவே இல்லை. ஹோட்டல்கள் நடத்துவதில் சில தவறுகள் நடந்தால் லைசன்ஸை ரத்து செய்வது பற்றி யாரும் குறை சொல்லவில்லை. ஆகவே, அதை எல்லோ ரும் ஒப்புக்கொண்டார்கள் என்று எடுத்துக்கொள்ளுகிறேன்.

கொடும்பாவி கட்டி இழுப்பது பற்றியும் சொன்னார்கள். கொடும்பாவி கட்டி இழுப்பது தப்பு என்று எல்லோரும் சொல்கிறார்கள். சில விலக்கு இருக்கிறது, இப்பொழுதிருக்கும் சட்டத்தில். அதை நாம் தொடவில்லை. இதில் கொடும்பாவி பற்றி முக்கியமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. கொடும் பாவி கட்டி இழுக்க உரிமை வேண்டும் என்று யாரும் கூறவில்லை. அது பற்றி மகிழ்ச்சி. ஆகையால், இந்தத் திருத்த மசோதாவைக் கனம் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன்.

SRI N. K. PALANISAMI: பேச்சாளரைப் பற்றிச் சொன்னார்கள். ஆனால், கூட்டத்தில் பேச்சாளர்களைக் கல்லால் அடித்தாலும் பரவாயில்லை. மற்ற வைகளால் அடிக்கிறார்களே, அதைத் தடுக்க ஏதாவது நடவடிக்கை இருக்கி றதா?

[28th September 1961

THE HON SRI M. BHAKTAVATSALAM : சொல் அம்பைப் பற்றி நான் பேசவில்லை. போலீசும் தலையிடமாட்டார்கள். 'இப்படிப் பேசினார்களே, அப்படிப் பேசினார்களே' என்று மனம் நொந்து சிலர் சொன்னார்கள். அதற்கு நான், 'நீங்கள் பேசும்போது அவர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்களே' என்றேன். கை ஓங்கினால்தான் போலீசார் தலையிடுவார்கள். சொல் அம்பை யாரும் பொருட்படுத்தவில்லை. இதற்குப் பழக்கப்பட்டு விட்டோம்.

The amendment was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

" That the Madras City Police (Amendment) Bill, 1961 be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause* 2.

DEPUTY SPEAKER : The question is—

" That clause 2 do stand part of the Bill."

SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, I move—

" In sub-section (3) (*a*) of the proposed section 41 of the principal Act, *for* the words ' five days ', *substitute* the words ' three days '."

" In sub-section (8) of the proposed section 41, after the words ' public meeting convened by the Sheriff ' *insert* the words ' or to any public meetings convened by recognized Trade Unions '."

" In sub-section (9) of the proposed section 41, *omit* clause (*b*)."

SRI M. KALYANASUNDARAM : I second the amendments, Sir. I move—

*Amendment No.* 5.—" In the proposed section 41 of the principal Act—

(1) *renumber* sub-section (1) as sub-section (4); and

(2) *add* the following ' When the order referred to in sub-section (1) is in force ', before the words ' The Commissioner ' at the beginning of the first sentence."

" (i) *Renumber* sub-section (2) of the proposed section 41 of the principal Act, as sub-section (1);

(ii) *for* the figures ' (3) ' and ' (4) ', *substitute* the figures ' (2) ' and ' (3) ' respectively;

(iii) *delete* the words ' or public safety '; and

(iv) *for* the proviso to sub-section (2), *substitute* the following provisos :—

" Provided that every order under this sub-section shall remain in force for not more than fifteen days from the date on which such order takes effect;

Provided further that the State Government may for due and proper reasons to be recorded, sanction the extension of the order for a further period of fifteen days."

28th September 1961]

"*Renumber* sub-section (3) of the proposed section 41 as sub-section (2)."

"(i) *Renumber* sub-section (4) of the proposed section 41 as sub-section (3), and

(ii) *delete* the words beginning with "Except . . ." and ending with 'public safety'."

*Amendment No.* 9.—"*Delete* sub-section (5) of the proposed section 41 of the principal Act and renumber sub-section (6) as sub-section (5), sub-section (7) as sub-section (6), and sub-section (8) as sub-section (7)."

*Amendment No.* 10.—"(i) *Renumber* sub-section (9) of the proposed section 41 of the principal Act as sub-section (8), and

(ii) *delete* item (*b*)."

SRI S. PAKKIRISAMI PILLAI : I second the amendments. Sir.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"In sub-section 3 (*b*) of the proposed section 41 of the principal Act, *delete* the words 'or refused to grant such permission'."

DEPUTY SPEAKER : For want of a seconder, the amendment falls through.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"*Delete* sub-section (4) of the proposed section 41 of the principal Act."

"In sub-section (6) (*b*) (ii) of the proposed section 41 of the principal Act, *for* the words 'one hundred rupees', *substitute* the words 'twenty-five rupees'."

SRI M. KALYANASUNDARAM : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் பதில் சொல்லக் கூடிய சமயத்தில் சட்டத்தை தாராளப்படுத்துகிறோம். கமிஷனரின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துகிறோம் இதை என் ஆட்சேபிக்கிறார்கள் என்பது புரியவில்லை என்றார்கள். எவ்வளவோ அரசாங்கத் தந்திரங்களில் ஒன்று சட்டத்தில் கடுமையான ஷரத்தைப் புகுத்தும்போதும் கூட தாராளமாக இருப்பதாக காட்டிக் கொள்வது. ஏற்கனவேயுள்ள சட்டப்படி கமிஷனர் உத்தரவு பிறப்பித்தால் ஒரு வருடத்திற்கு அமுலில் இருக்க வேண்டுமென்ற கட்டாயம் கிடையாது. 3 நாட்களுக்கு வேண்டுமானால் பிரேரேபிக்கலாம். 15 நாள் அல்லது ஒரு மாதத்திற்கு வேண்டுமானாலும் பிரேரேபிக்கலாம். 15 நாட்களுக்கு ஒரு தடவை நீடித்துக் கொண்டே போகலாம். இது எப்படி தாராளமாகிவிட்டது ? முதலில் 15 நாட்கள் உத்தரவு பிறப்பித்து விட்டு பின் நீடிக்க வேண்டுமானால் அரசாங்க அனுமதி கேட்க வேண்டும். கமிஷனர் கெட்டிக்காரத்தனமாக செய்யவேண்டுமானால் ஒரு நாள் விட்டு விட்டு நீடிக்கலாம். அவரிடத்தில் அதிகாரம் இருந்தால் தவறாக உபயோகப்படுத்திவிடுவார், அரசாங்கத்தினிடம் இருந்தால் இதனால் ஒரு பரிகாரம் ஏற்பட்டுவிடுமென்று சொல்வது மற்ற ஷரத்துக்களுக்காக வேண்டி. மற்ற ஷரத்துகளிலும் ஆட்சேபிக்கக் கூடியது

29th September 1961]

**Sri T. S. RAMASWAMI** : May I know what sort of disciplinary action was taken against him?

**The Hon. Sri V. RAMAIAH** : His increment was postponed for six months.

**Sri T. S. RAMASWAMI** : May I know the principle adopted by the Department in particular and the Government in general for the punishment of these offenders. In the Transport Department convicted persons are dismissed but in this case of serious impersonation the convicted person's increment only was postponed for six months?

**The Hon. Sri V. RAMAIAH** : The convicted person was sentenced by the lower court but on appeal his sentence was set aside. So actually he was not convicted at the higher level.

*State Transport (travel-as-you please tickets)*

• 1899 *Q.*—**Sri A. A. RASHEED** : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether there is any proposal to issue "travel-as-you-please" tickets in the State Transport buses in the City of Madras.

**The Hon. Sri V. RAMAIAH** : No, Sir.

**Sri A. A. RASHEED** : In view of the large influx of indigenous tourists to the City, will the Government consider the question of issuing 'Travel as you please Tickets' so that the tourists may have an opportunity of seeing places with one ticket?

**The Hon. Sri V. RAMAIAH** : The hon. Member is making only a suggestion.

**Sri A. GOVINDASAMY** : ஏற்கனவே சென்னையிலே டிராம்கார் இருந்த நேரத்திலே இந்தச் சலுகை வழங்கப்பட்டது. டிராம்கார் இருந்த இடத்திலே இப்பொழுது டவுன் பஸ்கள் அதிகமாக ஓடுகிற காரணத்தினால் பிரயாணிகள் வசதிக்காக கட்டணத்தைக் குறைத்து "go as you please" டிக்கெட் வழங்குவதற்கு அரசாங்கம் உத்தேசிக்குமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : இப்பொழுது ஒன்றும் அம்மாதிரி உத்தேசம் இல்லை.

**Sri S. M. ANNAMALAI** : ஸார் இந்தக் கேள்வி "இஷ்டப்படி பிரயாணம் செய்வது" பற்றி இருக்கிறது. அப்படியென்றால், எப்படிப் பிரயாணம் செய்வது என்று பொருள் ?

**The Hon. Sri V. RAMAIAH** : "go as you please", அதாவது இந்த டிக்கட் வாங்கி விட்டால், எங்கு வேண்டுமானாலும் போகலாம். ஆனால், அதைப் பற்றி பரிசீலனையே இல்லை. ஆகவே, அது பற்றிய சிக்கல்களை கனம் அண்ணாமலை சிந்திக்க வேண்டாம்.

*Slum clearance (Tiruchirappalli municipality)*

• 1900 *Q.*—**Sri M. KALYANASUNDARAM** : Will the Hon. the Minister for Electricty be pleased to state—

(*a*) the details of the schemes of Slum Clearance sanctioned for Tiruchirappalli municipality; and

[29th September 1961

(b) the present stage of progress.

THE HON. SRI V. RAMAIAH : (a) and (b) A statement [a] is placed on the table of the House.

SRI M. KALYANASUNDARAM : ஸார், கல்மந்தை, பீச்சாங்குளம் ஆகிய இரண்டு சேரிகளும் திருச்சி நகரத்தில் எடுக்கப்பட்டிருக்கிறது என்று அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த முனிசிபாலிடிகள் அனுப்பிய திட்டங்களே இந்த இரண்டு சம்மந்தப்பட்டவைதானா அல்லது ஏதாவது அவர்கள் அனுப்பியது நிராகரிக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : என்னிடத்தில் உள்ள தகவல் இந்த இரண்டு சேரிகள் சம்மந்தமானதுதான்.

SRI N. MARUDACHALAM : ஸார், சேரி ஒழிப்பு திட்டம் கோவை நகரசபை சம்பந்தமாகவும் எடுக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது......

DEPUTY SPEAKER : மூலக்கேள்வி திருச்சி பற்றியது, கோவை பற்றியது அல்ல.

SRI M. KALYANASUNDARAM : திருச்சியில் இந்த இரண்டு திட்டங்களும் குறைந்தது 5, 6 வருஷமாக வகுக்கப்பட்டது. அதற்காக நிலம் வாங்கப்பட்டுவிட்டதா ? எவ்வளவு காலதாமதம் ஆகும் ?

THE HON. SRI V. RAMAIAH : இந்த இரண்டு திட்டங்களும் சென்ற வருஷத்திலிருந்துதான் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. நாம் அதைப் பற்றி சொல்லிக்கொண்டே இருந்திருக்கலாம். ஆனால், ஸ்லம் கிளியரன்ஸ் மொபசிலுக்கு வந்தது சென்ற வருஷத்திலிருந்துதான். திட்டம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, அதற்கு வேண்டிய சர்வே போன்ற பூர்வாங்க வேலைகள் நடக்கின்றன. அதற்கு மேல் தகவல் என்னிடம் இல்லை.

*Auto-rickshaws (licensing)*

* 1901 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether there is any proposal to restrict the issue of licences to Auto-rickshaws in the City and other district centres;

(b) if so, the reasons therefor?

THE HON. SRI V. RAMAIAH : (a) No, Sir.

(b) Does not arise.

SRI N. K. PALANISAMI : 1961-ம் வருஷத்திய சென்ஸஸுக்குப் பிறகு ஏராளமான மக்கள் டௌனில் குடியேறி இருக்கிறார்கள் என்பது நமக்குத் தெரியும். இருக்கக்கூடிய ஆட்டோ-ரிக்ஷாக்கள் போதவில்லை என்கிற காரணத்தினால், அதை லிபரலைஸ் பண்ணி அதிக ரிக்ஷாக்களைப்போட நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இப்பொழுதும் அதிகமாகக் கொடுக்கத் தடையொன்றும் இல்லை.

---

[a] Printed as Appendix I on page 426 infra.

29th September 1961]

*Sanitation (San Thome Foreshore Estate)*

* 1902 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the attention of the Government has been drawn to the complaint that the sanitation at the San Thome Foreshore Estate is in a very bad state ; and

(*b*) if so, the steps taken to keep it in good sanitary condition?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No specific complaint has been received by Government.

(*b*) Arrangements have been made with the Madras Corporation for getting the streets cleaned twice or thrice a week, pending the blacktoppnig and handing over of the streets to the Corporation.

SRI A. A. RASHEED : Sir, may I know whether the attention of the Government has been drawn to the strong criticisms that have appeared in the papers regarding the bad state of sanitation in the San Thome Foreshore Estate?

THE HON. SRI V. RAMAIAH : Letters have appeared in some of the dailies and the complaints mentioned therein were looked into. We found that the position was not so bad as stated in those letters.

SRI K. VINAYAKAM : Sir, since this San Thome Foreshore Estate belongs to the City Improvement Trust, which has now become the Madras Housing Unit, and since it takes a long time for the City Improvement Trust to form the roads and blacktop them as has occurred in the Trustpuram and Kodambakkam areas, will the Government suggest to the City Improvement Trust to hand over these colonies immediately to the Corporation and issue orders to them to pay the necessary charges for the formation of roads as well as blacktopping them so as to enable the Corporation authorities to have the streets cleaned every day instead of twice or thrice a week?

THE HON. SRI V. RAMAIAH : There are some works yet to be completed. As soon as those works are completed, they would be handed over to the Corporation as early as possible.

SRI N. K. PALANISAMI : ஸார், பீச்சு ஓரங்களிலே சர்க்கார் கட்டடம் கட்டி தொடர்ந்து இந்த மாதிரி கெடுதல் செய்யாமல் இருக்க சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : இந்த எஸ்டேட்டைப்பொறுத்த வரையில் பீச்சு ஓரத்தில் இல்லை. உள்ளே தள்ளித்தான் இருக்கிறது. அதைக் கூட வேண்டாம் என்று அங்கத்தினர் கருதுகிறார்களா என்று தெரியவில்லை.

*Government Press, Madras (purchase of straw boards)*

* 1903 *Q.*—SRI V. SUBBIAH (on behalf of Sri N. R. THIAGARAJAN) கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சர்க்கார் அச்சகத்திற்கு ஆண்டுக்கு எவ்வளவு காகித அட்டைகள் வாங்கப்படுகிறது ?

[29th September 1961

(இ) அவை எங்கிருந்து வாங்கப்படுகின்றன ?

(உ) எவ்வளவு ரூபாய் செலவிடப்படுகிறது ?

THE HON. SRI V. RAMAIAH: (அ) The quantity of strawboards purchased for the year 1960–61 is 3,550 cwts.

(இ) The requirements of strawboards are purchased through the Director-General of Supplies and Disposals, New Delhi. An indent is sent to the Director-General of Supplies and Disposals who enters into a Rate Contract for the supply of strawboards with the various Indian Mills and allocates quantities for each State with the Mills.

(உ) Rupees one lakh and fourteen thousand.

SRI V. SUBBIAH: ஸார், இந்த ஸ்ட்ரா போர்டுகள் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகிறதா அல்லது வெளி ராஜ்யங்களிலிருந்து தருவிக்கப்படுகிறதா ?

THE HON. SRI V. RAMAIAH: என்னிடத்தில் உள்ள தகவல்படி இதெல்லாம் இந்தியாவிலேயே உற்பத்திசெய்யப்படுகின்றன.

*Loan against crops through co-operative societies*
*(North Arcot district)*

*1904 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் மின்சார அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1961–ல் வடாற்காடு மாவட்டத்தில் கூட்டுறவு சங்கங்களின் மூல மாகப் பயிர்களின் மீது கடன் கொடுக்க எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டு உள்ளது ?

(இ) இதுவரை எவ்வளவு பணம் தரப்பட்டுள்ளது ?

THE HON. SRI V. RAMAIAH: (அ) It is not the practice in co-operative societies to earmark in advance any fixed amount for the issue of loans on the various types of securities.

(இ) The amount of cultivation loans issued by the co-operatives in the North Arcot district on the security of crops during the period from 1st January to 30th June 1961, is Rs. 75.74 lakhs.

SRI S. M. ANNAMALAI: ஸார், பயிர்களின் மீது கடன் கொடுப்பதில், வாரத்திற்கு பயிர்செய்யும் விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதில் தாமதம் ஏற்படுகிறது. தொகையும் குறைவாக இருக்கிறது. டெனன்ஸி ரைட் இல்லை என்று மறுக்கவும் படுகிறது. இந்தத் தொல்லைகளைப் போக்க என்ன நடவடிக்கை சர்க்கார் எடுக்கப் போகிறார்கள்

THE HON. SRI V. RAMAIAH: தனிக் கேள்வி போட வேண்டும்.

*Master Plans*

*1905 *Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the names of municipal towns for which Master Plans are under consideration;

29th September 1961]

(*b*) the details of such Master Plans; and

(*c*) the amount allotted for these plans during the Third Plan Period?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) Coimbatore and Tiruchirappalli.

(*b*) A Master Plan for a town would indicate the manner in which the town and its vicinity areas should be developed in a scientific manner for the comfortable living, working and recreation of its inhabitants. The plan will take into consideration the requirements in all these spheres for a period of about 40 years to come.

(*c*) Rs. 10·20 lakhs.

* 1906 *Q*.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether a separate unit of town-planning experts has been appointed for the preparation of a Master Plan for the towns of Tiruchirappalli and Srirangam; and

(*b*) if so, when it is expected to start functioning?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) The special staff already sanctioned for the preparation of outline Development Plans and Master Plans of Municipal Towns under the Third Five-Year Plan will take up the cases of Tiruchirappalli and Srirangam Towns also.

(*b*) By the beginning of February 1962.

SRI K. B. S. MANI: இந்த மாஸ்டர் ப்ளானில் சரித்திர காலம் தொட்டு பெரிய புகழ் பெற்ற தஞ்சையின் தலைநகரம் சேர்க்கப் படாததற்குக் காரணம் என்ன? அதைப் பரிசீலித்து தஞ்சையும் சேர்க் கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அவுட்லைன் டெவலப் மெண்ட் பிளானில் தஞ்சாவூர்கூட வருகிறது. அதுமாதிரி மதுரை, திருநெல்வேலி, உதகமண்டலம் இவையெல்லாம்கூட சேருகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Sir, is there any proposal before the Government to take into consideration Major Panchayats like Tambaram and other places, which are likely to be converted into Municipalities in the near future?

DEPUTY SPEAKER: I do not know how this supplementary arises from the main question. Anyhow, if the Hon. Minister answers, I have no objection.

THE HON. SRI M. A. MANICKAVELU: The idea is this. In respect of outline development plans, the selection is made on this basis: District headquarters, towns or industrial towns, towns of commercial importance, important harbour and sea-port towns, hill stations and towns of tourists of religious importance. The number of places for which we propose to have the outline plan during the Third Five-Year Plan is 22 municipal towns.

[29th September 1961

9–00 a.m. SRI M. P. SUBRAMANIAM : திருச்சி, கோவை இந்த இரண்டு மாவட்டங்களுக்கும் ஒதுக்கப்பட்டிருக்கும் பத்து லட்ச ரூபாயில் செலவு செய்யப்படும் என்று திட்டமிட்டிருப்பதாகச் சொன்னார்கள். இந்த அரசாங்கத்தின் பொறுப்பில் அது செலவிடப்படுமா ? என்னென்ன நகரங்களில் எந்த வகையில் செலவு செய்யப்போகிறார்கள் ? என்னென்ன இனங்களில் அதிலிருந்து செலவு செய்ய உத்தேசித்திருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அரசாங்கம்தான் இதைச் செலவு செய்யும். அதற்கு ப்ளான் எல்லாம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்டாப், மற்ற மெடீரியல் இவைகள் எல்லாம் செலவு செய்வதற்கு என்று இரண்டு நகரத்திற்கும் பத்து லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

SRI A. R. SUBBIAH MUDALIAR : குற்றாலம் டவுன்ஷிப் கமிட்டிக்கு இந்தப் பிளானிலிருந்து ஒதுக்கப்பட்டிருக்கிறதா ? அப்படி ஒதுக்கப்பட்டிருந்தால் எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது ?

DEPUTY SPEAKER : The question relates to municipal towns and not to townships.

SRI M. KALYANASUNDARAM : மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் இருபத்திரண்டு நகரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன என்று கனம் அமைச்சர் கூறினார். அவற்றுடன் பெரிய நகரங்களைச் சுற்றி இருக்கிற பஞ்சாயத்துப் பிரதேசங்களையும் இத்துடன் சேர்க்கப்படுமா ? மூன்றாவது திட்ட காலத்தில் பெரிய நகரங்களை வளர்ப்பதற்குத் திட்டமிட்டிருப்பதால் அத்துடன் சேர்ந்த பஞ்சாயத்துக்களையும் சேர்த்துக் கொள்ளுவார்களா ?

THE HON. SRI M. A MANICKAVELU: திட்டங்களைத் தயாரிக்கும்போது இவைகளெல்லாம் சேர்த்து தயாரிக்கிறார்கள். எது எதையெல்லாம் சேர்க்க சாத்தியப்படுமோ அவைகளையெல்லாம் சேர்த்து அமுலுக்குக் கொண்டுவருவதாக உத்தேசம். டவுன்களுக்கு அருகாமையிலுள்ள பஞ்சாயத்துக்களையும் சேர்த்து, நாற்பது வருஷங்களுக்கு என்ன செய்ய வேண்டுமென்ற உத்தேசமோ அதன்படி செய்யப்படும். டவுன்களுக்குப் பக்கத்திலுள்ள பஞ்சாயத்துக்களையும் சேர்த்துத்தான் ப்ளான் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே பஞ்சாயத்துக்களையும் எடுத்துக்கொள்ளப்படும்.

SRI A. GOVINDASAMY : ஜில்லா தலைநகரங்களிலும் சரித்திரம் மூலமாக பிரசித்திப்பெற்ற பிரதேசங்களையும் சேர்த்துக்கொள்ளப்படும் என்று கனம் அமைச்சர் சொன்னார். அப்படியானால் கடலூர் நகரமும் இந்தப் பட்டியலில் சேர்த்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஹெட்குவார்ட்டர்ஸ் எல்லாம் சேர்க்கப்படுவதால் அத்துடன் கடலூரும் ஹெட்குவார்ட்டர்ஸாதலால் அதையும் சேர்த்துக்கொள்ளப்படும். எழுபத்தி ஐந்து லட்சம் ரூபாய் ஒதுக்கியதில் பத்து லட்சத்து இருபது ஆயிரம் ரூபாய் வரையில் for the preparation of outline plan and master plan for municipal towns-ம் மற்ற எல்லாவற்றிற்கும்தான் செலவு செய்யப்படும்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : அந்த விபரம் அடங்கியவற்றை இந்த மேஜையின்மீது வைக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த விபரம்தான் இப்பொழுது கொடுக்கப்பட்டது. வேறு விபரம் இல்லை.

### *Infectious diseases sheds*

* 1907 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நகரசபை எல்லைக்குள்ளிருக்கும் சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலுள்ள நகரசபைக்குச் சொந்தமான தொத்து நோய்களின் ஷெட்டுகளை சர்க்கார் எடுத்துக்கொள்ள உத்தேசமுண்டா ?

29th September 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : நகரசபை எல்லைக்குள் இருக்கிற ஆஸ்பத்திரிகள் நீண்டகாலமாக தொத்து நோய்களுக்கு என்று அமைக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் தொத்து நோயாளிகளை அனுமதிக் கப்பட்டு அங்கு சிகிச்சை கொடுக்கப்பட்டு வருகிறது. அவைகள் நகரசபை எல்லைக்குள் இருப்பதால் நகரசபைகளே கட்டிடங்களைக் கட்டிக் கொடுத்து இருக்கிறது. ஆனால் இன்றையதினம் ஆஸ்பத்திரிகளிலுள்ள தொத்து நோய்கள், அதாவது, காலரா, வாந்தி பேதி போன்ற நோயாளிகள் அனுமதிக்கப்படுகிறார்கள். அங்குள்ள நோயாளிகளுக்கு சிகிச்சைகள் கொடுக்கப்படுகிறது. அவை ரொம்பவும் மோசமாக இருக்கின்றன. கட்டி டங்களும் ரொம்பவும் பழுதடைந்திருக்கின்றன. அதை ரிப்பேர் செய்ய வேண்டுமென்றால் தங்களுக்குப் பொறுப்பில்லை என்று நகரசபைகள் சொல்லிவிடுகின்றன. அவர்களைக் கேட்டால் அரசாங்கம் செய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆகவே இது எப்படி இருக்கிறது என்றால் இரண்டு ஆட்டில் ஊட்டிய குட்டிபோல் இருக்கிறது. ஆகவே சர்க்காரே எடுத்து அதை நல்ல முறையில் பழுது பார்த்து அதை நல்ல முறையில் உபயோகத்திற்குக் கொண்டுவர நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவர் ஏதோ இரண்டு ஆட் டைப்பற்றிச் சொன்னார். அது எனக்குத் தெரியாது. அது எனக்குப் புரிய வில்லை. அந்தக் கட்டிடங்களை ஸ்தல ஸ்தாபனங்கள் கட்டுவதாக இருந் தாலும் அதற்கு ஐம்பது பர்சென்ட் சப்சிடி அரசாங்கம் கொடுக்கிறது. மற்றவைகள் கொடுப்பது கிடையாது. மெயின்டினென்சுக்கும் அரசாங்கம் அவ்வப்போது உதவி செய்துகொண்டுதான் வருகிறது. அதைக் கட்ட வேண்டிய பொறுப்பு நகரசபையினதுதான். அந்த ஆஸ்பத்திரி நகரசபை யில் இருப்பதால் நகரசபை நகர சுகாதாரத்தைக் கவனிப்பதால் நகரசபை தான் எல்லாப் பொறுப்புகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும். எந்த அளவு அரசாங்கம் உதவி செய்ய வேண்டுமோ அந்த அளவில் செய்து கொண்டுதான் வருகிறது. இப்பொழுது இருக்கக்கூடிய 22 ப்ரை மரி ஹெல்த் சென்டர்களிலும் இப்படிப்பட்ட ஏற்பாடுதான் செய்யப்பட் டிருக்கிறது. அதற்கு வேண்டிய திட்டமும் இடப்பட்டிருக்கிறது. அதற்கு என்று ஒரு லட்சம் ரூபாய்கூட ஒதுக்கப்பட்டிருக்கிறது.

SRI M. K. SOMASUNDARAM : இம்மாதிரி பெரிய தொத்து நோய் ஆஸ்பத்திரிகள் எல்லாம் நகரங்களுக்கு வெளியேயும் சில இடங் களில் நகரத்திலேயும் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில இடங்களில் ஷெட் கள் அமைத்து அதில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஊருக்கு வெளியே இருக்கக்கூடியவைகள் நல்ல முறையில் நடப்பதாகத் தெரியவில்லை. அவைகளையும் நல்லமுறையில் நடத்தும்படி சர்க்கார் ஏதாவது உத்தரவு பிறப்பிப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சில இடங்களில் வெளியே அலாதியாக இருக்கிறது. சில இடங்களில் ஆஸ்பத்திரி காம்பவுண்டுக் குள்ளேயே இருக்கின்றன. இவைகள் ஆஸ்பத்திரிகளுக்கு அருகாமையில் இருப்பதால் அவைகளை எடுத்துக்கொள்ள வேண்டிய பொறுப்பை ஒரு கேள்வியின் மூலமாகப் பதில் அளிப்பதற்கில்லை. இதைப் பற்றிப் பரி சீலனை செய்துதான் பார்க்க வேண்டும். ஆனால் அதை நடத்தும் பொறுப்பு அவர்களிடம் இருக்கிறது. அந்தப் பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள முடியாது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அரசாங்கம் அதன் பொறுப்பை எடுத்துக்கொண்டு வருகிறது.

### *Handloom and mill cloths*

* 1908 *Q.*—SRI T. T. DANIEL :<br>SRI N. K. PALANISAMI : } Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the State Government have made any representations to the Central Government to demarcate the sphere of production of textiles between handloom and mills;

[29th September 1961

(*b*) whether the State Government have suggested to the Central Government that production of sarees and dhoties should be wholly reserved for the handloom sphere;

(*c*) the total quantity of handloom textile now stagnated in our State;

(*d*) whether the handloom weavers are affected by the stagnation; and

(*e*) what are the relief granted to them?

THE HON. SRI V. RAMAIAH: (*a*) and (*b*) No, Sir. Not after November 1952.

(*c*) Goods worth Rs. 18·51 lakhs, which represents 9 per cent of the total stocks (excluding bleeding Madras variety) have accumulated in the normal course with the co-operative sector of the handloom industry. The value of stocks of Bleeding Madras within and outside the co-operative sector was estimated at Rs. 27·72 lakhs. Particulars of stocks of other varieties of handloom cloth held by industry outside the co-operative fold are not available.

(*d*) Weavers of Bleeding Madras have been affected.

(*e*) At the instance of this Government, the Government of India have arranged to procure the accumulated stocks of "Bleeding Madras" through the Handloom Export Organisation.

SRI N. K. PALANISAMI: 1953–ம் வருஷம் இந்தச் சபையில் ஒரு தீர்மானம் போட்டு நிறைவேற்றி அது மத்திய சர்க்காருக்கு அனுப்பப்பட்டது. அதைப் பற்றி இந்த சர்க்கார் மத்திய சர்க்காரை வற்புறுத்தி நடவடிக்கை எடுத்துக்கொள்ளச் சொல்லக் கூடாதா? அதை அமுல் நடத்தாமல் இருப்பதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI V. RAMAIAH: இந்த சபை ஒரு தீர்மானம் போட்டு அதை நிறைவேற்றி அதை மத்திய சர்க்காருக்கு அனுப்பியது. அதன்மேல் மத்திய சர்க்கார் முயற்சி எடுத்துக்கொண்டு இந்த அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தை நடத்தி அதன்மேல் என்னென்ன ரகங்களை கைத்தறிக்கு ஒதுக்கலாம் என்று நிர்ணயம் செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அந்த முடிவுதான் இதுவரையில் அமுலில் இருந்துவருகிறது.

SRI A. GOVINDASAMY: ப்ளீடிங் மெட்ராஸ் ரகத்தை உற்பத்தி செய்யக்கூடிய நெசவாளர்கள் இதனால் பாதிக்கப்பட்டிருப்பதாக கனம் அமைச்சர் தெரிவித்தார்கள். அவர்களுக்கு இந்த அரசாங்கம் என்ன உதவி செய்திருக்கிறது? மீண்டும் அந்தத் தொழிலை நல்ல முறையில் நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார்களா?

THE HON. SRI V. RAMAIAH: அவர்களிடமுள்ள இந்த ஸ்டாக்கை, வாங்குவதற்கு மத்திய அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIAR: கைத்தறிக்கு சேலை வேஷ்டிகளை ஒதுக்கினால் அதன் மூலம் அவர்களுக்கு நிவாரணம் கிடைக்கும். அதன்மேல் அவர்கள் மில் துணியுடன் போட்டி போடலாம், மில்லுடன் இருக்கக்கூடிய போட்டிகள், தொந்தரவுகள் அவ்வளவாக இருக்காது. அவர்கள் அதன்மேல் நல்லபடியாக வாழ முடியும் என்று மாகாண சர்க்கார் மத்திய சர்க்காருக்கு மீண்டும் இதைப்பற்றி வற்புறுத்தி அதை உடனடியாக அமுல் நடத்த வேண்டிய ஏற்பாடு செய்வார்களா? அல்லது இனிமேலாவது எடுக்க முயற்சிப்பார்களா?

THE HON. SRI V. RAMAIAH: கைத்தறிக்கு எந்தெந்த ரகங்களை ஒதுக்குவது என்று பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அந்த முடிவுதான் இப்பொழுது அமுலில் இருக்கிறது.

29th September 1961]

SRI P. U. SHANMUGAM : கைத்தறிக்கு எந்தெந்த ரகங்கள் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : சென்ற வாரம்தான் ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் அதைப் பற்றிய விவரத்தைச் சொன்னேன். அது ஒரு நீண்ட பட்டியல். அந்த நீண்ட பட்டியலை திரும்பப் படிக்க வேண்டியதாக இருக்கிறது. வேண்டுமானால் படிக்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : தேங்கி இருக்கக்கூடிய சரக்குகளை மத்திய அரசாங்கம் வாங்கிக்கொள்ளும் என்றும், இன்னும் சில துணிகளை கூட்டுறவு சங்கங்கள் வாங்கிக்கொள்ளும் என்றும் இடைக்கால நிவாரணமாக சொல்லப்பட்டது. இந்த விஷயம் எவ்வாறு யோசனையில் இருக்கிறது. துணிகளை ஒதுக்குவதைத் தவிர வேறு ஏதாவது யோசனைகள் இருக்கின்றனவா ?

THE HON. SRI V. RAMAIAH : தேங்கி இருக்கும் சரக்குகளாகிய ப்ளீடிங் மெட்ராஸை வாங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மற்ற துணிகளை கூட்டுறவு சங்கங்கள் மூலமாக வாங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI K. VINAYAKAM : Saris and dhoties manufactured by the handloom industries do not compare well either in texture, appearance or even in price with those manufactured by the Mills. Keeping that in view, the Madras Legislative Assembly had previously recommended to the Central Government in the former days through a Resolution passed by the House that these two varieties of cloth should be absolutely reserved for the Handloom Industry. May I know what happened to that recommendation made to the Central Government? Did the Central Government accept our suggestion, or did they reject it? I would like the Hon. Minister to give a categorical answer in the matter so as to clear the misapprohesion that has been created in our State on this important issue.

THE HON. SRI V. RAMAIAH : Sir, that Resolution of the Honourable House was carefully considered by the Government of India. With a view to helping the handloom industry, they have reserved certain varieties for production by the handloom sector. I would like to read the list of those varieties, though it is a bit long, so that the House can have an idea of the exact position in regard to this matter.

1. (a) Dhoties with borders which contain coloured yarn exceeding $\frac{1}{4}$'' in width.

(b) dhoties with borders made of zari, muga or artsilk yarn.

2. Lungi, sarong of gamcha with a check pattern or any cloth with check pattern having a width between 42" and 52" from which lungies, sarongs or gamchas may be made.

3. (a) Checked or striped chadder (a kind o fshawn called by that name in West Bengal).

(b) bedsheets with coloured woven borders length-wise or breadth-wise.

[29th September 1961

(*c*) bedcovers with decorative or coloured effect.

(*d*) Counterpane (any other outer covering of bed woven in raised figures) other than one having overall dobby or jacquard design.

4. Low reed pick cloth.

5. Table cloth and napkins other than domask bleached cloth.

6. Duster or duster cloth or wiper cloth or glass cloth.

7. Coarse cloth of plain weave with warp or weft of counts 8's and below.

8. (*a*) Sarees with border exceeding 2½" in width.

(*b*) Sarees with borders containing real or imitation zari.

(*c*) Sarees with coloured yarn in the body.

(*d*) Sarees with heading exceeding 9" in width.

9. (*a*) Towels or towelling cloth in honey-comb weave.

(*b*) Erazha Thorthu (towel of plain weave commonly known by the name in the States of Madras and Kerala).

10. Mashru cloth, i.e., cloth in satin weave with silk or rayon warp and cotton weft and having characteristics of coloured stripes.

**Sri K. B. S. MANI** : கைத்தறி நெசவாளர்களுக்கு ரிபேட் கொடுக்கின்ற வழக்கத்தை எவ்வளவு நாளைக்கு அரசாங்கம் நீடிக்க லாம் என்று நினைக்கிறது? அதில் ஒரு முடிவு கட்டுவதற்குத் தீர்மான மான ஒரு காரியம் செய்யப்படுமா?

**DEPUTY SPEAKER** : இந்த உப கேள்வியை அடுத்த கேள்வியில் கேட்கலாம்.

**Sri N. K. PALANISAMI** : ஒரு பக்கம் நூல் விலை ஏறிக் கொண்டிருக்கிறது. அதன் காரணமாக நெசவாளர்கள் கூலி குறை கிறது. அதே சமயத்தில் ரிபேட்டும் குறைத்திருக்கிறார்கள். கூலி குறை வாகக் கொடுத்து, கைத்தறித் துணிக்கு அதிகப்படியான விலை ஏற்று வதன் மூலமாக மில் முதலாளிக்குச் சாதகமான நிலைமை ஏற்படுகிறது. இப்படி, கைத்தறிக்கு ஒரு நெருக்கடியை சர்க்கார் உண்டுபண்ணுவதற்குக் காரணம் என்ன?

**The Hon. Sri V. RAMAIAH** : Sir, this supplementary does not arise from the main question.

**Sri K. R. NALLASIVAM** : ப்ளீடிங் மெட்ராஸை நெசவாளர் களே உற்பத்தி செய்கிறார்களா? வேறு யாராவது விடுத்த வேண்டு கோளின்பேரில் உற்பத்தி செய்கிறார்களா? அப்படியானால், ஏன் இது தேங்கிக்கிடக்கிறது?

**The Hon. Sri V. RAMAIAH** : ப்ளீடிங் மெட்ராஸ் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் ரொம்ப பரபரப்பான கட்டத்திலே இருந்தது. இதற்கு மோகம் அமெரிக்காவில் ஏற்பட்டது. அந்த மோகத்தை ஏற் படுத்தியவர்கள், நமது நாட்டிலிருந்து போன கைத்தறி விற்பனைத் தூதுக் குழுவினர்களும், மற்றும் இவர்களைப் போன்றவர்களும். அந்தத் துணிக்கு அமெரிக்காவிலே பெரிய கிராக்கி ஏற்பட்டவுடனே, இவர்கள் கொடுத்த ஒப்பந்தத்தைக் காட்டிலும், தனிப்பட்ட முறையில் நெசவு நடத்தக்கூடிய

29th September 1961]

வர்கள் போட்டிக்காக கொஞ்சம் விலையைக்குறைத்து, அந்தத் துணியை அங்கே ஏற்றுமதி செய்ய முயற்சி எடுத்தார்கள். ஆனால், இந்தத் துணி அங்கே போனவுடனே, துணி மீதிருந்த மோகமே குறைந்துவிட்டது. காரணம், தரம் ரொம்பக் கம்மியாக இருந்தது. அதனால் இந்த நெசவு பாதிக்கப்பட்டது.

*Handloom (payment of rebate)*

* 1909 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have received any amount from the Centre for payment towards arrears of rebates to be paid to the handloom weavers?

THE HON. SRI V. RAMAIAH : Yes, Sir.

SRI N. K. PALANISAMI : செஸ் பண்ட்டிலிருந்து நம் மாநிலத்திற்கு எவ்வளவு தொகை கிடைக்கிறது? அதிலிருந்து ரிபேட் எவ்வளவு கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI V. RAMAIAH : ரிபேட் கொடுப்பதற்கு, மத்திய அரசாங்கத்திலிருந்து நமக்கு இரண்டு தவணைகளாகப் பணம் வந்தது. முதல் தவணையில் 7.24 லட்ச ரூபாயும், இரண்டாவது தவணையில் 107.95 லட்ச ரூபாயும் வந்தது.

SRI A. R. SUBBIAH MUDALIYAR : ரிபேட் கொடுப்பதிலே ஒழுங் கீனம் இருப்பதாகக் கண்டு, அனேக பரிசீலனை செய்யப்பட்டு, ஒவ்வொரு சொஸைட்டிக்கும் பெய்டு செக்ரடரி போட வேண்டுமென்ற ஒரு திட்டம் இருக்கிறதே, அது எந்த நிலைமையில் இருக்கிறது ?

THE HON SRI V. RAMAIAH : ரிபேட் கொடுப்பதிலே ஒழுங்கீனம் கிடையாது. ஆனால், சில சொஸைட்டிகள் தவறான புள்ளிவிவரங்கள் கணக்குகள் கொடுத்து அதிகமாக ரிபேட் வாங்க முயற்சி எடுத்தார்கள். அது போன்று தவறாக நடந்துகொண்ட சொஸைட்டிகளுக்கு உடனே கொடுக்காமல், அவைகளினுடைய கணக்குகள் பூராவையும் பரிசீலனை செய்து ரிபேட் கொடுப்பது என்று முடிவு எடுத்தார்கள்.

SRI K. B. S. MANI : ரிபேட் கொடுப்பது என்பது, பிச்சை போடுகிற மாதிரி, பரம்பரைப் பழக்கமாக வந்துவிடுகிறது. அவர்களுக்கு நிரந்தரமான உதவி அளித்து, மற்றவர்கள் தயவை எதிர்பார்க்காமல் அவர்களே கொஞ்சங்கொஞ்சமாக முன்னேறி வர அரசாங்கம் வழி வகுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : இதிலே பிச்சை போடுவது எப்படி வருகிறது என்று எனக்கே தெரியவில்லை. பிச்சை இதிலே யாருக்கும் கொடுக்கவில்லை. அந்தத் தொழில் நசித்துவிடாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தைச் சேர்ந்தது. ஏனென்றால், அதிலே ஏராள மான தொழிலாளர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். அதனால், அதற்கு வேண்டிய உதவியை எப்போதுமே அரசாங்கம் கொடுக்கத் தயங்காது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI K. VINAYAKAM : In the matter of clearance of the rebate due to the societies, are the Government aware of the fact that the societies in the Tiruttani taluk which came over from Andhra Pradesh to the Madras State have not yet received the rebate amount which is in heavy arrears for about 2 years. That is even before the merger of that taluk with Madras, they were not paid the amount. Now, even after the lapse of $1\frac{1}{2}$ years since the

merger took place, the arrears have not yet been cleared. Will the Government look into the matter and hasten the payment of the rebate amount to those societies without further delay?

THE HON. SRI V. RAMAIAH : If they have not been paid the rebate amount till now, naturally it means that there must be some difficulties. All those difficulties must be enquired and looked into. If there has been any undue delay and if the hon. Member feels that speedy action has to be taken into the matter, he may write to me separately and I will get the matter examined.

SRI S. M. ANNAMALAI : மத்திய சர்க்கார் கொடுக்கக்கூடிய ரிபேட் தொகை ஆண்டுக்கு ஆண்டு குறைந்துகொண்டு வருவது உண்மையா ? இதைச் சில வருடங்களில் நிறுத்திவிட வேண்டுமென்று மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கத்திற்கு வற்புறுத்தி வருகிறார்களா ? அப்படியானால், மாநில சர்க்கார் அதன் மீது என்ன கருத்து கொண்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : அதற்கெல்லாம் தனிக் கேள்வி போடலாம்.

SRI M. P. SUBRAMANIAM : Co-operative fold-க்கு வெளியேயுள்ள கைத்தறி நெசவாளர்கள்தான் மிகுதியாக இருக்கிறார்கள் என்ற கணக்கு இருக்கிறது. அவர்களை முன்னேற்ற அரசாங்கம் எந்தவிதமான திட்டங்கள் அவர்களுக்காக வகுத்திருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்கும் தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI M. R. KANDASAMI MUDALIAR : இந்த ரிபேட் கொடுக்கக்கூடியதிலே சிறிது நாற்பட்டைக் கலந்தால்கூட கொடுக்க மறுக்கிறார்கள். இதனால் நல்ல ரகத் துணியை உற்பத்தி செய்ய முடியாமல் கைத்தறியாளர்கள் திண்டாடுகிறார்கள். இதைக் கவனித்து தக்க வகையில் திருத்துவதற்கு யோசிப்பார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : Sir, the hon. Member is making a suggestion.

SRI A. R. SUBBIAH MUDALIAR ; ரிபேட் வாங்குவதற்காக சொஸைடிகள் கொடுக்கிற கணக்கு சில இடங்களில் ஒழுங்கீனமாக இருந்தது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இதைச் சரி செய்ய சொஸைடிகளுக்கு ஒரு பெய்ட் செக்ரடரி போடும் திட்டம் இருந்ததே, அது எந்த நிலையில் உள்ளது ? கைவிடப்பட்டுவிட்டதா ?

THE HON. SRI V. RAMAIAH : அது பற்றி தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. K. PALANISAMI : சர்க்கார் கதருக்கு மட்டும் கொடுக்கிற ரிபேட் நான்கணா வரையில் போகிறது. அதே சமயத்தில் கைத்தறிக்குப் படிப்படியாகக் குறைந்து வரக் காரணம் என்ன ?

THE HON. SRI V. RAMAIAH : நான் சொன்ன தகவலில் இருந்து பார்த்தால் தெரியும். அப்படி ஒன்றும் படிப்படியாகக் குறையவில்லை.

*Handlooms*

• 1910 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of handlooms in each district of our State;

29th September 1961]

(b) the number of handlooms which have been brought within the co-operative fold in each district of our State?

THE HON. SRI V. RAMAIAH : (a) & (b) A statement[a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : மேசையின்மீது வைக்கப்பட்டுள்ள அறிக்கையில் மொத்தமுள்ள 4 லட்சம் நெசவாளர்களில் 50 சத விகிதம் பேர்கள்கூட சொஸைடியின் கீழ் வரவில்லையே. எத்தனை ஆண்டுகளுக்குள் அவர்களை சொஸைடிகளின் கீழ் கொண்டுவர நடவடிக்கை எடுக்கப்படும் ?

THE HON. SRI V. RAMAIAH : I want a separate question.

*Pædiatric training*

* 1911 Q.—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether this Government have received any communication from the Centre inviting proposals for improving pædiatric training ;

(b) if so, the suggestions made by our Government ; and

(c) the assistance to be received from the Centre for this purpose?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir.

(b) & (c) Do not arise.

SRI A. A. RASHEED : May I know whether any Pædiatric institute has been opened in our State and if so, whether it is giving any post-graduate training in pædiatric?

THE HON. SRI M. A. MANICKAVELU : There are five upgraded Post-Graduate institutes in the Medical colleges and hospitals of our State, viz., the Institute of Obstetrics and Gynæcology, the Institute of Venerealogy, the Institute of Pædiatrics, the Barnard Institute of Radiology and the Institute of Anatomy. In these five institutes post-graduate training is given.

*Disparity in prices of cotton and yarn*

* 1912. Q —SRI T. S. RAMASWAMI (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில் பருத்தி விலை குறைந்திருக்க, நூல் விலை கூடியிருக்கும் காரணம் என்ன ?

THE HON. SRI V. RAMAIAH : The prices of certain varieties of cotton such as Jarilla and Karunganni fell slightly in January 1961 whereas the prices of certain other varieties such as Cambodia

a Printed as Appendix II on pages 426–427 infra.

and Uganda tended to go up. There has been no general fall in the price of cotton. Even when there is a fall in the price of cotton, the effect on the price of yarn is not immediately felt, because manufacturers endeavour to maintain prices at higher levels on the plea that the yarn was spun out of cotton bought at higher prices. The increase in prices of yarn is due to shortage of indigenous cotton, increase in manufacturing cost ,export to foreign countries, speculation in prices, and an increase in the production of finer counts due to large allotment of imported cotton.

SRI V. K. KOTHANDARAMAN : பருத்தி விலை நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது அல்லவா, அதேபோன்று நூல் விலை என் நிர்ணயம் செய்யப்படவில்லை.

THE HON. SRI V. RAMAIAH : Sir, with a view to consider the fair price for yarn, an informal meeting of representatives of some States and the Government of India was held in New Delhi in 1960. The Government of India have referred the question of devising a formula for fixing ex-mill and retail prices of yarn to the Tariff Commission.

SRI V. SUBBIAH : இந்த ராஜ்யத்தில் நீண்ட இழையுள்ள கர்னுடா பருத்தி உற்பத்தியாளர்களுக்குப் போதுமான விலை கொடுக்கப்படுவதில்லை. டெக்ஸி 40-ம் நம்பர் நூலுக்குக் கொடுக்கிற விலையோடு ஒட்டிப் பார்க்கிறபோது அந்த ரக நூலுக்கு எற்ற பருத்தியை உற்பத்தி செய்கிறவர்களுக்குத் தக்க பணம் கொடுக்கப்படுவதில்லை. இதை மத்திய அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டுள்ள கமிட்டிக்கு எடுத்துச் சொல்லி இந்த பருத்திக்கு நியாயமான விலையை நிர்ணயிக்க நமது சர்க்கார் சிபார்சு செய்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இதைப்பற்றித் தனியாக எழுதி அனுப்பினால் பரிசீலனை செய்யத் தயார்.

SRI M. R. KANDASWAMI MUDALIAR : பருத்தி விலையோடு கூட நூல் உற்பத்தியாவதற்கு ஆகக்கூடிய எல்லாச் செலவுகளையும் போட்டாலும் கூட நூல் கட்டு ஒன்றுக்கு ஆகக்கூடியதைவிட 5 ரூபாய், 6 ரூபாய் அதிகமாகவே விலை வைத்து விற்கப்படுகிறது. பலமுறை எடுத்துச் சொல்லியும் கூட இந்த நூல் விலை கட்டுப்படுத்தப்படவில்லை. நாம் முன்பு எடுத்த நடவடிக்கை பயன் இல்லாததனால் இனிமேலாவது கடுமையான நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : நூல் விலையைக் குறைக்க பல நடவடிக்கை எடுத்திருக்கிறது. இப்போது கனம் அங்கத்தினர் சொல்லக்கூடிய ஆலோசனையையும் எழுதி அனுப்பினால் பரிசீலனை செய்யத் தயார்.

SRI N. K. PALANISAMI : பருத்திக்கு விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறதே தவிர, நூலுக்கு சரியாக நிர்ணயிக்கப்படவில்லை. வெளி நாட்டில் விற்கக்கூடிய நூலுக்குக் கட்டுக்கு 3 ரூபாய் சப்ஸிடி கூட கொடுக்கப்படுகிறது. அப்படியிருக்க என் பருத்தி உற்பத்தி செய்கிற விவசாயிக்கு நியாயமான வரும்படி கிடைக்கும் வகையில் விலை கொடுக்கக் கூடாது ?

THE HON. SRI V. RAMAIAH : The hon. Member may put a separate question.

29th September 1961]

*Allotment of houses for Government Officials (Madras City)*

* 1913 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of Government Officers in the City of Madras who applied for accommodation (Houses) to the Accommodation Controller during the last three years and the number to whom houses were allotted each year; and

(*b*) the principles followed in the matter of allotment of houses (on rent) to Government servants and others by the Accommodation Controller?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Number of Government servants who applied for houses during the years—

| | |
|---|---|
| 1958 ... ... ... ... ... ... | 3,426 |
| 1959 ... ... ... ... ... ... | 4,298 |
| 1960 ... ... ... ... ... ... | 4,003 |

Number of Government servants to whom houses were allotted during the years—

| | |
|---|---|
| 1958 ... ... ... ... ... ... | 732 |
| 1959 ... ... ... ... ... ... | 794 |
| 1960 ... ... ... ... ... ... | 810 |

(*b*) Under Section 3 (3) of the Madras Buildings (Lease and Rent Control) Act, 1960, the Accommodation Controller can allot a building only to a Government servant or Government Department. At present, buildings are allotted only to the following categories of Government servants :—

(1) Those who have been recently transferred to the concerned City and have still not been able to secure a house either through the Accommodation Controller or privately;

(2) Those who are to be evicted from their houses under an order of Court or in pursuance of an order of release by the Government;

(3) Foreign experts working in a Government institution or whose services have been requisitioned by the State or the Central Government under some foreign aid programme and diplomatic representatives of a foreign Government stationed in Madras State.

In allotting houses to Government servants, the dates of registration of their names in the Accommodation Controller's office and their pay and other special circumstances, if any, are taken into consideration.

SRI T. S. RAMASWAMI : May I know what other arrangements are made for the rest of the Government servants in view of the fact that in 1957–58 out of about 3,000 applicants, only about 700 applicants have been provided with accommodation. In the next year also out of about 4,000 applicants, only 700 applicants have been provided with accommodation. In the next year also it is the same.

[29th September 1961

THE HON. SRI V. RAMAIAH : If we look into the figures relating to applications and allotments, an impression will be created as if we are not considering the cases of the remaining persons. Sir, applications come not only from those who come to the City for the first time but most of them come from the people who are already allotted accommodation. Whenever they find better houses coming under Accommodation Controller, they immediately apply for them. So, these figures have swollen up and they do not relate only to people who are completely without houses. They relate mostly to applicants who try to go in for better accommodation and for that, there is no end and under the Act we cannot prevent them from applying

9-30 a.m.

SRI A. GOVINDASAMY : சில அதிகாரிகள் வெளி ஊருக்கு மாற்றப்பட்டால் அந்த வீடுகளை காலி செய்யாமல் வேறு யாரையாவது வைத்துவிட்டுப் போவதால் புதிதாக வருபவர்கள் இடம் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அதைத் தவிர்க்க என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும் ?

THE HON. SRI V. RAMAIAH : வெளி ஊருக்குப் போகக் கூடியவர்கள், இருக்கக்கூடிய சட்டப்படி அரசாங்கத்தின் கவனத்திற்கு தாங்கள் அந்த வீட்டை விட்டுப் போவதற்கு முடிவு செய்திருப்பதைக் கொண்டு வரவேண்டும். இல்லாவிடில் அது குற்றம். ஒரு சில அதிகாரி கள் அப்படிச் செய்வது வழக்கமாக இல்லாமல் இருக்கிறது. அவைகளை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவந்தால் உடனே அரசாங்கம் நடவடிக்கை எடுத்து என்னென்ன செய்ய வேண்டுமோ அதைச்செய்வார் கள். வெளி ஊர்களிலிருந்து இது போன்ற முக்கிய நகரத்திற்கு வரக் கூடிய அதிகாரிகள் வீடு இல்லாமல் கஷ்டப்பட வேண்டிய அவசியமே கிடையாது. ஹோட்டல்களில் தங்கும் அதிகாரிகள் யாராக இருப்பார்கள் என்றால் அவர்கள் இஷ்டப்படி வீடு குறைந்த வாடகைக்கு கிடைக்கும் வரையில் காத்துக்கொண்டிருப்பார்கள். இல்லாவிடில் இப்பொழுதுள்ள நிலையில் ஒரு வாரத்திற்குள் கொடுக்க முடியும்.

SRI K. VINAYAKAM : Whereas it has been the policy of Government to provide accommodation for officers who come for the first time to the City of Madras, is the Hon. Minster aware of the fact that the Deputy Commissioner of Commercial Taxes in charge of Excise duty is still living in his office premises because he could not be provided with accommodation to his taste, by taste I mean his capacity to pay rent when compared to the salary he draws?

DEPUTY SPEAKER : The hon. Member himself has answered his question.

THE HON. SRI V. RAMAIAH : I will treat this as a general question and give my answer even though it relates to an individual officer.

The difficulty here is this. If the officer wants that the house should be such as to suit almost every type of his thinking and liking, then it is impossible. But if any officer makes a genuine complaint that he is not able to get accommodation in Madras City, then there is no basis at all for that. Wthin just a week's time I can get accommodation for the officer concerned. But more or less they have taken it as a practice to get accommodation with the cheapest rent possible. Such requests I am not prepared to consider.

29th September 1961]

**Sri T. S. RAMASWAMI :** சில அதிகாரிகள் தங்களுக்கு சொந்த வீடு இருந்தும் அவர்கள் அரசாங்கத்திலிருந்து வீடு அலாட் செய்து வாங்கி தங்கள் சொந்த வீடுகளை வாடகைக்கு விட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்பது வாஸ்தவமா ? அப்படியானால் அதை மாற்றுவதற்கு என்ன நடவடிக்கைகள் எடுக்கப்படுகிறது ?

**The Hon. Sri V. RAMAIAH :** இதுபோல் சில அதிகாரிகள் இருக்கிறார்கள். அரசாங்கத்தின் கவனத்திற்கு அதைக் கொண்டுவந்த காரணத்தால் அந்த வீடுகளை உடனடியாக, அல்லது காலவரை செய்து அதற்குள் அந்த வீடுகளை காலி செய்ய வேண்டும், தங்கள் சொந்த வீட்டிற்குப் போக வேண்டுமென்று அரசாங்கம் முடிவு செய்தது.

**Sri M. KALYANASUNDARAM :** அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பதற்குக் கூட அமைச்சர் அவர்களுக்கு இவ்வளவு கஷ்டமிருப்பதால் அவர்கள் எல்லோருக்கும் சர்க்காரே வீடு கட்டிக் கொடுக்கவும், அதே போல் தற்காலிகமாகத் தங்குவதற்கு ஹாஸ்டல் வசதி செய்து கொடுப்பதற்குமுள்ள யோசனையை நிதியமைச்சர் அவர்களுக்குக் கூறுவார்களா ?

**The Hon. Sri V. RAMAIAH :** கல்யாணசுந்தரம் அவர்களுக்குத் தெரியும். எனக்கு இதில் கஷ்டமே கிடையாதென்று. கிடைக்கக் கூடிய வீட்டிற்கு அவர்கள் போகத் தயாராக இருந்தால் கஷ்டமில்லை. அவர்கள் இஷ்டப்படி வீடு கிடைக்க வேண்டும் என்றால், நானே கட்டினால் கூட அவர்கள் அங்கு போக மாட்டார்கள். அவர்கள் இஷ்டப்படி வீடு கிடைக்க வேண்டும். அந்த மாதிரி டேஸ்ட் உள்ளவர்களுக்கு கஷ்டமாகத் தான் இருக்கும். கொஞ்சம் பொறுத்திருந்தால் நல்ல வீடு கிடைக்குமென்று பொறுத்திருக்கிறார்கள். வீட்டுப் பஞ்சம் மதராஸைப் பொறுத்த வரையில், கவர்மெண்ட் அதிகாரிகளைப் பொறுத்தவரை இருக்கிறது என்ற முடிவிற்கு நான் வரவில்லை.

**Sri T. S. RAMASWAMI : On a point of information, Sir. 1896, 1897** கேள்விகளைப் பொறுத்தவரை, போனஸ் கொடுக்கப்படுகிறதா இல்லையா என்பதுதான் முதல் கேள்வியின் நோக்கம். அந்தக் கேள்விக்கு அமைச்சர் அவர்கள் **'facts are being collected'** என்று பதில் சொல்லியிருக்கிறார்கள்.

DEPUTY SPEAKER : How does this arise now?

Sri T. S. RAMASWAMI : Just for the Chair to **give direction** to the Minister concerned. In various other assemblies, within ten days we get all the details. But here the only answer required is "yes" or "no". For this it has taken nine months. If that is the case what is the use of our sending questions. Every question will then be a farce. May I humbly submit for the attention of the Chair that it could give a direction to the department concerned to collect the materials. We have been waiting for the last nine months. The answer should be "yes" or "no". But instead, after nine months, it is said "facts are being collected". This is not the first instance such a thing happens. I have been drawing the attention of the Chair to the matter.

DEPUTY SPEAKER : The Chair has no right and cannot compel the Hon. Minister to give answer to suit the desire of the members. It is left to the Government to give such answer as they deem fit.

Sri T. S. RAMASWAMI : I entirely agree with your ruling. **I is correct, I can understand** if the Hon. Minister says "No, I am not prepared to answer". But after so many months it is said "facts are being collected". It is an error of the department.

[29th September 1961

DEPUTY SPEAKER : If the hon. Member is not satisfied, he has got other remedies.

THE HON. SRI V. RAMAIAH : In this particular instance I am prepared to give an explanation.

DEPUTY SPEAKER : I am not going to allow further discussion on this matter.

## UNSTARRED QUESTIONS.

*Improvements of tanks (Coimbatore district)*

435 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லாவில் ஐந்தாண்டு திட்டகாலத்திலே அபிவிருத்தி செய்ய உத்தேசிக்கப்பட்ட பெரிய சிறிய எரிகளும், குளங்களும் எத்தனை ?

(இ) இவைகளில் எத்தனை எரிகளும், குளங்களும் அபிவிருத்தி செய்யப்பட்டன ?

(உ) இதுவரை செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

*A.*— (அ) (இ) & (உ)

| | | | *Works under the control of the Chief Engineer (Irrigation).* | *Works under the control of the Superintending Engineer (Food Production).* |
|---|---|---|---|---|
| Number programmed for improvement | Big Tanks | .. | .. | .. |
| | Small Tanks | .. | 8 | .. |
| | Ponds | .. | .. | 115 |
| Number sanctioned | Big Tanks | Sanctioned .. | .. | .. |
| | | Completed .. | .. | .. |
| | | In Progress .. | .. | .. |
| | Small Tanks | Sanctioned .. | 4 | 7 |
| | | Completed .. | 3 | .. |
| | | In Progress .. | 1 | 5 |
| | Ponds | Sanctioned .. | .. | 28 |
| | | Completed .. | .. | .. |
| | | In Progress .. | .. | 17 |
| Expenditure incurred | | | Rs. 0·53 lakh up to the end of April 1961. | Rs. 1·22 lakhs up to the end of March 1961. |

*Per-capita Income.*

436 *Q.*—Sri T. S. RAMASWAMI, Sri T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state the per-capita income in each district of our State for the last five years ?

*A.*—It is difficult to reckon the per-capita income in each district as such a calculation is open to a large margin of error.

29th September 1961]

*Gazetted posts*

437 *Q.*—SRI M. P. SARATHI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) 1960 ஜூன் மாதம் முதல் இதுவரை புதிதாக ஏற்படுத்தப்பட்டுள்ள அரசிதழ் பதப்புள்ள பதவிகள் (newly created gazetted posts) எத்தனை ?

(இ) எந்தெந்த இலாகாவில் ? என்ன சம்பள விகிதங்களில் ?

*A.*—(அ) 257 Gazetted posts were newly created from June 1960 up to 31st January 1961.

(இ) A statement [a] is appended.

*Yellow journalism*

438 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) மதுரையிலிருந்து வெளிவரும் ஒரு தினப்பத்திரிகை சினிமா நடிகைகளையும், பெண் போலீசாரையும் மிகக் கேவலமாக எழுதியும் கார்ட்டூன்வரைந்தும் வருகிறது அரசாங்கத்திற்கு தெரியுமா ?

(இ) அரசாங்கம் அதற்கு நடவடிக்கை எடுக்க உத்தேசித்துள்ளதா ?

*A.*—(அ) The Government have no information ;

(இ) If specific cases are brought to the notice of Government, suitable action will be taken.

*Supply of agricultural implements*

439 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுகா சிப்பாலக்கோட்டை, சித்தார் பட்டி ஹரிஜனங்கள் விவசாய கருவிகள் வாங்க கடன் கோரி 12–7–1958-ல் ஜில்லா கலெக்டரிடம் கொடுத்த மனு என்னவாயிற்று ?

*A.*—The petitions presented by the villagers of Seepalacottai and Siddarpatti villages to the Collector on 12th July 1958 have been, in usual course, forwarded to the Tahsildar, Periakulam for necessary further action. It is reported that the action taken on these petitions could not be ascertained now in the absence of connected records which were destroyed due to efflux of time.

*Pudukkulam Kanmoi*

440 *Q.*— SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுகா கண்டமநாயக்கனூர் மக்கள் புதுக்குளம் கண்மாயை பொதுஜன உபயோகத்திற்கு வகை செய்யுமாறு 12–7–1958-ல் கொடுத்த மனு என்னவாயிற்று ?

*A.*—It is reported that no such petition was received by the Collector of Madurai.

---

a Printed as Appendix III on pages 427–431 infra

[29th September 1961

*Bridge across Vaigai*

441 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவில் வைகை ஆற்றின் குறுக்கே மங்கம்மாள் சாலையில் ஓர் பாலம் கட்டவேண்டுமென்று கண்டமநாயக்கனூர் கிராமவாசிகளிடமிருந்து, அம்பாசமுத்திரம் கிராமவாசிகளிடமிருந்து மனுக்கள் ஜில்லாக் கலெக்டருக்கு வந்தனவா ?

(இ) அப்படியானால், அவைகளின் பேரில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன ?

*A.*—(அ) It has been reported that the petitions referred to have not been received.

(இ) Does not arise.

*Asaripatti Kanmoi*

442 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா, ஆண்டிப்பட்டி பிர்க்கா, கரிசல்பட்டி மக்கள் ஆசாரிப்பட்டி கண்மாய் பெருக்கால் எங்கள் ஊருக்கு பாது காப்பளிக்க ஜில்லா கலெக்டரிடம் கொடுத்த மனு என்னவாயிற்று ?

*A.*—The Chief Engineer (Irrigation) has instructed the Superintending Engineer, Tiruchirappalli Circle to examine the question and submit) proposals. The proposals are still under investigation by the Executive Engineer, Special Minor Irrigation Programme Division, Tiruchirappalli.

*Pathway to burial ground (Bodidasanpatti)*

443 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகுப் பதில் அளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா, போடிதாசன்பட்டி ஹரிஜனங்கள் மயானத்திற்குப் பாதை ஏற்படுத்தித்தர ஜில்லா கலெக்டரிடம் கொடுத்த மனு என்னவாயிற்று ?

*A.*—The petition was sent to the Revenue Divisional Officer, Usilampatti. The Collector has instructed the Commissioner, Andipatti Panchayat Union to persuade the Ethakoi Panchayat to take up the work, as it is the responsibility of that Panchayat to execute the work.

*Lands in Bodidasanpatti (Assignment of)*

444 *Q.*—SRI N. R THIAGARAJAN: கனம் ரெவினியூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா, போடிதாசன்பட்டி ஹரிஜனங்கள் நிலம் ஜாரி செய்யக் கேட்டு ஜில்லா கலெக்டரிடம் கொடுத்த மனு என்னவாயிற்று ?

*A.*—The petition was forwarded to the Special Tahsildar(Assignment), Periakulam, for disposal. The connected papers in the Office of the Special Tahsildar have been destroyed due to efflux of time.

வரல்லவா ? இந்தச் சபையிலே பேசக்கூடிய ஒவ்வொருவரின் காவலரா கவும் பணியாற்றும் உதவி சபாநாயகர் அவர்களுக்கும் இதிலே பங்கு உண்டல்லவா, அதையெல்லாம் எப்படி நிறைவேற்றப் போகிறார்கள் ? ஒரு கூட்டுறவு சொஸைட்டியின் தலைவராக இருந்தாலும்கூட, நம்முடைய மான்யத்தைப் பெற்று சம்பளம் பெறக்கூடிய டிப்டி ரெஜிஸ்ட்ராருக்கு பதில் சொல்ல வேண்டிய நிலைமை ஏற்பட்டு விடுகிறது. அப்படிப்பட்ட நிலைமையில் இருக்கக்கூடியவர், இந்தச் சபையின் தலைவராக இருக்கலாமா என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். இந்தச் சட்டத்திலே மற்ற பிரிவு கள் சரியாக இல்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். அந்த மாதிரி உதவி சபாநாயகராக இருப்பவர், சபாநாயகர் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டு, இந்தச் சபையை நிர்வகித்து வரக்கூடியவர் அப்படிப்பட்ட ஸ்தாபனங்களிலே இருந்து விலகிக்கொண்டு, தன்னுடைய பதவியின் கவுரவத்தையும், பொறுப்புக்களையும் கவனிக்க வேண்டிய சூழ்நிலை ஏற் படுமல்லவா ? அதைத்தான் நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். தவிர, உதவி சபாநாயகர் அவர்களுக்கு சம்பளம் கொடுப்பதையோ, சலுகைகள் கொடுப்பதையோ, கார் வசதி செய்து கொடுப்பதையோ நான் ஆட்சேபிக்க வில்லை. இந்தச் சபையின் கவுரவத்தை உயர்த்தக்கூடிய முறையிலேதான், ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் சட்டத்தை அமைக்க வேண்டுமென்பது தான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அதற்கு உடன்பட்ட இந்த மசோதாவை நான் ஆட்சேபிக்கவில்லை, வரவேற்கிறேன்.

**Sri A. GOVINDASAMY** : சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, இந்த மசோதாவை வரவேற்றுப் பேசுகின்ற நேரத்திலே என் னுடைய சில கருத்துக்களையும் சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன். இன்றைய தினம் நண்பர் கல்யாணசுந்தரம் அவர்கள் எழுப்பக்கூடிய பிரச்னைக்கு, ஒரு சங்கடமான நிலைமை ஏற்படுவதற்கு நான் உண்மையிலேயே வருந்துகிறேன். அந்த சங்கடத்திற்குக் காரணம், தலைமை தாங்கக் கூடிய தாங்கள் அல்ல. ஆனால் ஆளுகின்ற சர்க்கார் தான். நமது மதிப்பிற் குரிய சபாநாயகர் காலஞ்சென்ற பிறகு, ஒரு தேர்தலை நடத்தியிருக்கலாம். அந்த இடத்திற்கு வரக்கூடிய தகுதியும், அந்தஸ்தும் கடந்த 9 ஆண்டு காலத்திலே தாங்கள் அனுபவம் பெற்றிருக்கிறீர்கள். இந்த ஆளுகின்ற கட்சிக்காரர்களும், தேவையான மெஜாரிடி வைத்திருந்தும்கூட, ஒரு தேர்தலை கொண்டு வந்து நடத்தாமல் இதுவரை காலம் கடத்தி, இப்போது இப்படி ஒரு தீர்மானம் கொண்டு வந்ததற்கு நான் உண்மையிலேயே மிகவும் வருந்துகிறேன். இந்த ஆயிரம் ரூபாய் சம்பளமும், அதோடு 500 ரூபாய் அலவன்சும் பெற்றுத்தான் தங்களுக்கு பொருளாதார நிலை காப்பாற்றப்பட வேண்டுமென்பதில்லை. ஆனால் அந்தப் பதவிக்கு கிடைக்கக் கூடிய மரியாதை, கவுரவம் கொடுக்கப்படவேண்டுமென்ற காரணத்திற்காகத் தான், அந்தச் சம்பளமும், மற்ற அலவன்சுகளும் கொடுக்கப்பட வேண்டுமென்று கூறுகின்ற காரணத்திலே எனக்கு மாறுபட்ட எண்ணமே கிடையாது. இன்றைய தினம் உதவி சபாநாயகராக இருக்கிற தாங்களே சபாநாயகராக வந்திருக்கக் கூடும். அந்த அளவுக்கு அனுபவம் தாங்க ளுக்கு நிச்சயமாக இருக்கிறது. சிவஷண்முகம் பிள்ளை அவர்கள் காலத் திலிருந்து கிருஷ்ணராவ் அவர்கள் காலம் வரையில் நல்ல அனுபவம் பெற்றிருக்கிறீர்கள். அந்த நிலைமையை உண்டாக்கி இருக்கலாம். அதைச் செய்யாத குற்றத்திற்கு அரசாங்கத்தின் மீது நாங்கள் பழி சுமத்தாமல் இருப்பதற்கில்லை.

இந்த நேரத்திலும்கூட உங்களால் நியமிக்கப்பட்ட "பானெல் ஆப் சேர்மென்" 6 பேர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவரைக் கூப்பிட்டு தலைமைத் தாங்கச் சொல்லிவிட்டு நீங்கள் உங்கள் அறையிலே ஓய்வு பெற்றுக்கொண்டிருக்கலாம். இந்தச் சட்டம் விவாதிக்கப்படும்பொழுது இங்கே எழுப்பப்பட்ட "பாயின்ட் ஆப் ஆர்டர்கள்" பேரில் நீங்களே தீர்ப்புக் கூறும்படியான சங்கடமான நிலைமை ஏற்பட்டது குறித்து உண்மையிலேயே

29th September 1961] [Sri A. Govindsamy]

வருந்துகிறேன். அதே நேரத்தில், ஸ்பீக்கர் பெற வேண்டிய மரியாதை, சம்பளம், அலவன்ஸ் முதலியவைகளைக் கொடுப்பதை நான் முழு மனது டன் ஆதரிக்கிறேன் இந்தச் சபையின் கவுரவத்தைக் காப்பாற்றுவதற்காக என்று கூறி முடிக்கிறேன்.

**Sri M. P. SUBRAMANIAM** : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, நம் முன்பு விவாதத்தில் இருக்கும் மசோதாவின் நோக்கத்தை நான் முழு மனதோடு ஆதரிக்கிறேன். எழுப்பப்பட்ட பிரச்னை கள் தனிப்பட்ட பிரச்னை என்று கருதாமல் முக்கியமாக பிற்காலத்தில் எல்லோரையும் பாதிக்கக்கூடிய பிரச்னை என்று கருதவேண்டும் என்று நான் வற்புறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

துவக்கத்தில் ஸ்ரீ கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னபடி, முதலிலே இது அரசியல் சட்டப்படி செல்லுபடியாகுமா என்பதை நன்றாக பரி சீலிக்க வேண்டும். அப்படிச் சொல்லுகிற காலத்தில் ஏதோ ஒரு நோக்கத் திற்காக சொல்லப்படுகிறது என்று கருதாமல், இந்தச் சபையிலே நிறை வேற்றப்படுகிற சட்டம் பின்னால் "அன்கான்ஸ்டிட்யூஷனல்" என்று போகக் கூடிய நிலைமை இருக்கக்கூடாது. ஆகவே, இதை ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும் என்பதை கூறிக் கொள்ள விரும்புகிறேன். இது முன்பே முடிவு செய்யப்பட்ட பிரச்னை, இதை விவாதிப்பது சரியல்ல என்று கருதாமல், இதை நன்றாக பரிசீலிப் பது அவசியம் என்பதை அமைச்சர் அவர்கள் மனதில் கொள்ளவேண்டும்.

இரண்டாவதாக, சபையின் தலைவராக இருக்கக்கூடியவர் சில விதி முறைகளை பின்பற்றுவது என்பது சம்பிரதாயம். சாதாரணமாக அரசியல் சட்டத்திலோ அல்லது சபையின் விதிகளிலோ இதைப்பற்றி சொல்லாவிட்டால் கூட, சபையின் தலைவராக இருக்கக்கூடியவர் வேறு பொறுப்புகளை வகிக்கக் கூடாது என்ற ஒரு கன்வென்ஷன் கையாளப்படுவதுதான் முறையாகும். அதுதான் மேல் நாடுகளில் சம்பிரதாயமான முறையில் அனுஷ்டிக்கப் படுகிறது. இங்கிலாந்து நாட்டில் இருக்கக்கூடிய முறைகளை நாம் பின் பற்றி வருகிறோம் என்று ஒப்புக்கொண்டிருக்கிற காரணத்தினால், அத்த கைய ஒரு சம்பிரதாய முறையை நாம் அனுஷ்டிப்பதானது பிற்காலத்தில் வர இருக்கிற சபைத் தலைவர்களுக்கு நாம் ஒரு வழிகாட்டியாக இருப்போம் இதைக் கட்சிக்கு அப்பாற்பட்ட விஷயம் என்று நினைத்து, எல்லோரும் ஒன்று சேர்ந்து இதை ஆராய்ந்து இதில் ஏதாவது தடை இருக்கிறதா என்று மீண்டும் பரிசீலனை செய்யவேண்டும் என்று நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, இப்பொழுது இதை நிறைவேற்றாமல் நிறுத்தி விட்டு, இதைப்பற்றி நன்றாக பரிசீலனை செய்து நிச்சயமாக எந்தவிதமான கோளாறும் இல்லை என்று தெரிந்தபிறகு நிறைவேற்றலாம் என்பது தான் என்னுடைய கருத்து. அமைச்சர் அவர்கள் தலையை ஆட்டுகிறார்கள். அவர் நினைப்பதுதான் முடிவான கருத்து என்று எண்ணி தலையை ஆட்டுவது தவறு என்று நினைக்கிறேன். ஏனென்றால் எல்லோருக்கும் இதில் அக்கரை உண்டு. இந்த மசோதாவின் நோக்கத்தைப்பற்றி யாருக் கும் இரண்டுவிதமான கருத்து இருக்கப்போவதில்லை. எங்களுடைய கவலை எல்லாம் நல்ல சம்பிரதாயத்தை நாம் பின்பற்றவேண்டுமென்பதுதான். இந்திய உபகண்டத்தில் தமிழ்நாடு நல்ல சம்பிரதாயங்களைப் பின்பற்றி வருகிறது என்ற ஒரு பெருமை இருக்கிறது. நாம் அதை கெடுத்துவிடக் கூடாது. துவக்கத்தில் சொல்லியபடி அரசியல் சட்ட விதிகளுக்கு இது முரணானது என்ற அச்சம் இருக்கிறது. இதை நன்றாகப் பரிசீலனை செய்து இந்த அச்சத்தைப் போக்கவேண்டியது மிகவும் அவசியம். தலையை அசைத்துவிட்டால் திருப்திப்படவேண்டும் என்று அமைச்சர் அவர்கள் நினைப்பது தவறு. அவசரப்படாமல் இந்த மசோதாவை இப்பொழுது இந்த அளவிலே ஒத்திவைத்து, பின்னாலே ஆழ்ந்து பரிசீலனை செய்து முடிவு செய்வது தான் உகந்தது என்று சொல்லிக்கொண்டு, என்னுடைய உரையை முடிக்கிறேன்.

[29th September 1961

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Deputy Speaker, Sir, as I have said in the beginning, I am also one of those who honestly feel, while supporting the measure in all its aspects, that the pay of the Deputy Speaker when discharging the duties of the Speaker should be enhanced. In order to maintain his prestige, not only his salary but also all the facilities that are enjoyed by the Speaker should be given to the Deputy Speaker and there cannot be two opinions in regard to that matter. I am one of those who entirely agree with the Bill.

Inasmuch as the Chair has just now stated that the Business Advisory Committee has agreed to this Bill, I must say that it does not mean that we have agreed in principle to the passing of the Bill. While going through the whole Bill and after hearing the point of order raised by my hon. Friend Sri Kalyanasundaram, we have looked into the relevant constitutional provisions in detail. I am one of those who feel that there is some lacuna in so far as Articles 65 and 178 of the Constitution are concerned. It may also be argued that there is no prohibition under these Articles. Whatever it is, I honestly feel that there is some lacuna and it should be examined in all its aspects by referring the whole matter to the Advocate-General if need be. The Bill can be taken up at the next session of the Assembly for further consideration and even retrospective effect can be given in the matter of salary and other things from the dates on which the Deputy Speaker has been performing the duties of the Speaker. So, it is better that we get over this lacuna.

With regard to the other point raised by hon. Friend, Sri Kalyanasundaram, the convention also requires that the prestige and dignity of the Chair should be maintained in all its aspects and he should not accept any other job even though it may be honorary. This is all my submission.

* **THE HON. SRI M.A. MANICKAVELU**: ஸார், இந்த சபைத் தலைவர், உபதலைவர் ஆகியோர்களை நியமிக்கிற விஷயமாக பல பிரிவுகள் இருக்கின்றன. முதலில் கலியாணசுந்தரம் அவர்கள் படித்தது 178-வது பிரிவு. அதில் பொதுவாக சட்டசபை எலெக்ஷன் ஆனபிறகு ஆரம்பத்தில் இம் மாதிரியாக ஒரு தலைவர், உபதலைவர் நியமிக்கப்பட வேண்டும் என்று இருக்கிறது. அதில் இரண்டாவது கட்டமும் இருக்கிறது. அதுதான் 180-வது பிரிவு. அம்மாதிரியும் செய்யலாம். இப்பொழுது 178-வது பிரிவின்கீழே ஒரு தலைவரையே நியமிக்கலாம், அப்படி ஏன் நியமிக்க வில்லை என்று கேட்கப்படுகிறது. சட்டப்பிரகாரம் 180-வது பிரிவில் சொல்லியபடியும் செய்யலாம். இது ஏன் இப்படி செய்யப்பட்டது என்பதை நாம் கவனிக்க வேண்டும். சாதாரணமாக ஒரு மெம்பர் ஸ்தானம் காலியாகும்பொழுது. . . .

SRI M. KALYANASUNDARAM: Article 180 is subject to Article 178 of the constitution.

**THE HON. SRI M. A. MANICKAVELU**: சாதாரணமாக ஒரு மெம்பர் ஸ்தானம் காலியாகும்பொழுது புது எலெக்ஷனுக்கு 5, 6 மாதங்கள் தான் இருந்தால், அந்த ஸ்தானத்திற்கு "பை-எலெக்ஷன்" வைப்பதில்லை என்று ஒரு கன்வென்ஷன் இருக்கிறது.

29th September 1961] [Sri M. A. Manickavelu]

எப்படி ஒரு தனிப்பட்ட மெம்பர் விஷயத்தில் அம்மாதிரி கன்வென்ஷன் அனுசரிக்கப்படுகிறதோ, அதுமாதிரி பொதுத் தேர்தல் சமீபத்தில் வர இருக்கிறபொழுது "பை-எலெக்ஷன்" வேண்டியதில்லை என்ற கன்வென்ஷன் இருக்கும்பொழுது, அதே பிரகாரம் இதிலும் நாம் செய்துகொள்ளலாம். இந்த மாநிலத்தில் மட்டும் இப்படி விசித்திரமாக ஒன்றும் செய்துவிடவில்லை. கேரளாவில்கூட இம்மாதிரி சம்பவம் ஏற்பட்டபொழுது தற்காலிகமாக இந்த முறையிலேதான் செய்திருக்கிறார்கள். ஆகவே, இதில் எனக்குத் தெரிந்த வரையில் சட்ட சிக்கல் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை.

இன்னொன்று. ஒரு ஒழுங்கு பிரச்னை கிளப்பப்பட்டது. இந்த விஷயம் இங்கே விவாதிக்கப்படும்பொழுது அவர் தலைமை ஸ்தானத்தில் அமர்ந்திருக்கலாமா என்பது. இதிலே ஒன்றும் "பெர்ஸனல்" விஷயம் இல்லை. இது அந்த "ஆபீஸ்" சம்பந்தப்பட்டது. ஆகையினாலே அவர் தலைமை வகிப்பதினாலே ஒரு அசம்பாவிதமும் இல்லை. காரணம், அந்த ஸ்தானத்தில் யார் தாற்காலிகமாக இருந்தாலும் ஸ்பீக்கர் என்ன சம்பளம் வாங்குகிறாரோ, அவருக்கு என்னென்ன "ப்ரிவிலெஜ்கள்" உண்டோ அதையெல்லாம் கொடுக்கலாம் என்று இருக்கிறதே தவிர, வேறு ஒன்றும் இல்லை. எதிர்க் கட்சித் தலைவர்கள் இதில் ஏதோ சட்ட சிக்கல் இருப்பதாக சொல்லுகிறார்கள். எனக்குத் தெரிந்தவரையில் அப்படி ஒன்றும் இல்லை. ஏற்கனவே கேரளாவில் ஒரு சட்டம் செய்திருக்கிறார்கள் இதேமாதிரி. அப்படி ஏதாவது தவறு இருந்தால், அதை மேலே எடுத்துக்கொண்டு போயிருப்பார்கள். இந்தப் பாகை படித்துப் பார்த்தாலே நன்றாகத் தெரியும். தாற்காலிகமாக நாம் அதேமாதிரி ஏற்பாடு செய்துகொள்ளலாம்.

இன்னொன்று ஸ்ரீ கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள், இம்மாதிரி தலைவருக்கு "ப்ரிவிலெஜ்கள்" இருக்கும்பொழுது மற்ற பொது வ்வகாரத்தில் அவர் பொறுப்பு வகிப்பது சரியல்ல என்று சொன்னார். அதெல்லாம் "மாட்டர் ஆப் டிரெடிஷன் அண்டு கன்வென்ஷன்". இம் மாதிரியான "ப்ரிவிலெஜ்கள்" ஒரு ஆபீஸுக்குச் சேர்ந்திருக்கும்பொழுது, அதற்கெல்லாம் ஒரு கன்வென்ஷன் சாதாரணமாக வைத்திருக்கிறார்கள். அந்தக் கன்வென்ஷன்படி எந்த அளவுக்கு எப்படிச் செய்துகொள்ளலாமோ அதன் பிரகாரம் நடக்கும். அதைப்பற்றி பிரமாதப்படுத்தவேண்டியதில்லை. இதற்கெல்லாம் ஒரு கன்வென்ஷன் இருக்கிறது. சில "ப்ரிவிலெஜ்கள்" இந்த ஆபீஸுக்கு "அட்டாச்" ஆகியிருக்கிறது. இதிலே என்னென்ன கன்வென்ஷன் இருக்கிறதோ அதன் பிரகாரம் நடத்தப்படும் என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1961, be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1961, be passed."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1961, be passed."

SRI M. KALYANASUNDARAM: கனம் தலைவர் அவர்களே, நான் விட்ட விஷயத்தை அனுவசியமாகக் கிளப்பி பதில் சொல்ல முயற்சித்ததுதான் திருப்திகரமாக இல்லை. நான் ஒன்றும் இப்பொழுது ஆட்சேபம் எழுப்பவில்லை; இருக்கிற கருத்தை திறந்த மனத்தோடு எடுத்துச் சொன்னேன். இந்த சபையில் சொல்ல வேண்டுமென்றுச் சொன்னேன். அப்படிச் சொல்வது ஒவ்வொரு அங்கத்தினருடைய கடமையும் கூட. திருத்தம் செய்யும்போது அங்கத்தினர்களுடைய உரிமைகள் வசதிகள் இவைகளெல்லாம் இருக்கிறது; அவற்றைப் பற்றியும் சேர்த்து பூராவாக ஒரு திருத்தமாகக் கொண்டு வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். இன்றைக்கு அங்கத்தினர்களுக்கு ஹாஸ்டல் வசதிகள் போதாது; இது அங்கத்தினர்கள் வசதி, சம்பளம், அந்தஸ்து முதலிய பல விஷயங்களைச் சார்ந்தது. சட்ட சபை அங்கத்தினர்கள் என்ற முறையில் கௌரவமாக, சபையின் உரிமைகளை பாதுகாக்கும் அளவில், உபயோகிக்கும் அங்கத்தினர்கள் சபையின் கௌரவத்திற்கு உரிய முறையில் உபயோகிக்க வேண்டிய கட்டுப்பாடுகளோடு கூடிய திருத்தமாகக் கொண்டுவர வேண்டும் என்பது என் அபிப்பிராயம். ஹாஸ்டலில் உள்ள அங்கத்தினர்கள் நல்ல முறையில் நடந்துக்கொள்ளவில்லை யென்றால், ஜனங்கள் இந்த சபையைப் பற்றி நல்ல அபிப்பிராயம் கொள்வார்களா என்று அஞ்சவேண்டியிருக்கிறது. இது ஒரு புனிதமான இடம். ஒவ்வொரு அங்கத்தினர்களும் எம்.எல்.ஏ. என்ற முறையில் நடந்து கொள்வது எப்படி இருக்கிறது என்று பார்க்க வேண்டும். ஒருவர் வக்கிலாக இருக்கலாம், அல்லது மற்ற தொழில்களில் ஈடுபட்டிருக்கலாம். ஆனால், அவர்கள் வெறும் வக்கிலாக இருந்தபோது என்ன வரும்படி, இப்பொழுது எம்.எல்.ஏ. ஆக வந்த பிறகு என்ன வருமானம் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதைப் பார்த்து யோசனை செய்து பேச வேண்டும். அதே போல, ஹாஸ்டல் அறைகளை உபயோகிக்கும் போது, எதற்காக உபயோகிக்க வேண்டும்? தங்குவதற்கும், மக்களைப் பார்ப்பதற்கும், அவர்கள் பிரச்சினைகளைக் கேட்பதற்கும் உபயோகப்படுத்த வேண்டும். ஆனால், அங்கே சொந்த வீட்டில்கூட செய்யாத சில கேவலமான, கேவலப் படுத்தக்கூடிய காரியங்கள் நடக்கின்றன. இப்பொழுது சபாநாயகர் பொறுப்பும் ஹாஸ்டல் சம்பந்தப்பட்ட பொறுப்பும் இரண்டும் சேர்ந்து இரண்டுக்கும் பாதுகாப்பாளர் என்ற முறையில் இருக்கிறீர்கள். ஆகவே, ஹாஸ்டலை சபையின் உரிமைக்கு உட்பட்டதாகச் செய்ய, உரிமைக் கமிட்டிக்குக்கூட விடவேண்டும். இப்பொழுது சபாநாயகர் இடம், சபை கூடும் இடம் இவைதான் அப்படி இருக்கிறது. அங்கத்தினர்கள் தங்கும் ஹாஸ்டலையும் கௌரவமான முறையில் பயன் படுத்த வேண்டும் என்பதையும் இதில் சேர்த்திருக்க வேண்டும். அப்படிப் பட்ட கட்டுப்பாடுகளை நாமாகவே நமக்கு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். ஜனங்களை கண்ணியமான முறையில் நடக்க வேண்டும், நேர்மையான முறையில் நடக்க வேண்டும் என்று சொல்லுகிறோம். காலையில்கூட அமைச்சர் சொன்னார்கள், கானாவில், நிக்ருமாவின் அமைச்சர்கள் அதிகமாக இருந்த சொத்தை யெல்லாம் அரசாங்கத்திற்கு கொடுத்துவிட்டார்கள் என்று. ஆகவே, எம்.எல்.ஏ. ஆனபிறகு எவ்வளவு தூரம் ஹாஸ்டலை அந்த தொழிலுக்கு உபயோகிக்கலாம் என்பது, சபையின் கௌரவத்திற்கு குறைவு வராமல் இருக்க வேண்டும். ஹாஸ்டல் வசதிகளை பயன்படுத்துவது எம்.எல்.ஏ. என்ற முறையில் தன் கடமைகளைச் செய்ய மட்டும் உபயோகிக்க வேண்டுமே தவிர, மற்ற காரியங்களுக்கு உபயோகிக்கக் கூடாது. இன்றைக்குப் பார்க்கிறோம் எம்.எல்.ஏ. களின் அந்தஸ்துக்குக் குறைவான, இழுக்கை ஏற்படுத்தக் கூடிய பல நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. அவை உதவி சபாநாயகர் அவர்களுக்கும் தெரியும். அவற்றைப் பற்றிப் பகிங்கரமாகப் பேசிக் கொண்டு இருக்க வேண்டிய அவசியம் இல்லை. பேசுவது உண்மையாக இருக்க வேண்டும். பேசுவதைச் செய்ய வேண்டும், செய்வதைப் பேச வேண்டும். அப்படி நாம் நல்ல முறையில் நடந்துக்கொள்ளவில்லை யென்றால், இந்த சபைக்கு ஒரு நாளும் மரியாதை இராது என்று சொல்லிக் கொண்டு முடிக்கிறேன்.

29th September 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : ஸார், கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் எந்த அடிப்படையில் பேசினுர் என்று எனக்குப் புரியவில்லை. ஏனென்ருல், இந்த திருத்தம் கொண்டு வந்தது முக்கியமாக ஒரு காரியத்திற்காக. இதல், salaries and allowances of Parliamentary Secretaries, travelling allowances of Ministers என்றெல்லாந் தான் இருக்கிறது. இதிலே ஆர்டிகிள் 180 பிரகாரம் டெபுடி ஸ்பீக்கர், ஸ்பீக்கா வேலை செயயலாம். அதற்கான சம்பளம் முதலியவை பற்றிச் செய்கிரும். திருத்தம் வந்திருக்கிறதே என்ற காரணத்திற்காக அந்த சந்தர்ப்பத்தில் ஹாஸ்டல் பற்றிப் பேசுவது பொருத்தம் இல்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1961, be passed."

The motion was put and carried and the Bill was passed.

(5) THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960) AS AMENDED BY THE JOINT SELECT COMMITTEE.—*cont.*

10–30 a.m.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That Clauses 5, 23 and 69 be re-opened."

DEPUTY SPEAKER : The question is—

"That Clauses 5, 23 and 69 be re-opened."

The motion was put and carried and Clauses 5, 23 and 69 were re-opened.

*Clause 5.*

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment—

In Clause 5, in item (*a*) of sub-clause (1) for the words "The ceiling area in the case of every person" substitute the words "Subject to the provisions of Chapter VIII, the ceiling area in the case of every person".

The amendment was put and carried.

Clause 5, as amended, was put and carried.

*Clause 23.*

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment—

In Clause 23, in the opening paragraph, for the words "for the purpose of fixing the ceiling area under this Act", substitute the words "for the purpose of fixing, for the first time, the ceiling area of any person holding land on the date of the commencement of this Act, in excess of 30 standard acres".

Honourable Members will remember that an amendment was proposed in some clause making provisions for the purpose of fixing

the ceiling for the " first time " and then later on. In view of that a consequential amendment has to be made. That is the object in moving this amendment.

The amendment was put and carried.

Clause 23, as amended, was put and carried.

*Clause 69.*

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment—

In Clause 69, in the heading, for the words " Cultivating tenants to furnish return ", substitute the words " Furnishing of return ".

This is in consequence of the amendment that we have made regarding cultivating tenant and we have also provided for an intermediary and said that he should also furnish a return. In consequence of that, this amendment has become necessary.

The amendment was put and carried.

Clause 69, as amended, was put and carried.

* THE HON SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" That the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960 (L.A. Bill No. 8 of 1960), as amended be passed."

இந்த மசோதாவைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் பேசிய பிறகு விரிவாக பதில் சொல்லலாம் என்று இருக்கிறேன். இப்பொழுது இந்த மசோதாவில் ஒன்று இரண்டு திருத்தங்கள் மாத்திரம் செய்யப்பட்டிருக்கின்றன. அதைப்பற்றி விளக்கினால் கனம் அங்கத்தினர்கள் பேசுவதற்கு உதவியாக இருக்கும் என்று நினைக்கிறேன். செலக்ட் கமிட்டி ரிபோர்ட் வந்த பிறகு இரண்டு திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஒன்று ஸ்திரீதனச் சொத்து பத்து எக்கர் வரை வைத்துக்கொள்ளலாம் என்றும், இன்னொரு மாறுதல் எட்டாவது சாப்டர் முழுவதையும் மாற்றி இருக்கிறோம். முதலில் வந்த பிரகாரம் நிலச் சொந்தக்காரர்கள் நிலத்தை சாகுபடி செய்து கொள்ளலாம் என்றும், ஐந்து எக்கருக்கு மேல் நிலம் வைத்துக்கொண்டிருந்தால் அந்தக் காலத்திலேயே அதை நிர்ப்பந்தம் செய்து எடுத்துக் கொள்ளாமல் மூன்று வருஷம் கழித்து எடுத்துக் கொள்வது என்றும், அந்த மூன்று வருஷங்கள் வரையில் சாகுபடியாளர்கள் கையில்தான் நிலம் இருக்கும். அதன் பிறகுதான் அதை எடுத்துக்கொள்வது என்றும் மாறுதல் செய்யப்பட்டிருக்கிறது. அப்படி எடுத்துக்கொள்ளும்போது இப்பொழுது எவ்வளவு நிலம் கிடைக்கும் என்று தெரியாமல் இருப்பதால் அதை மூன்று வருஷங்களில் தெரிந்து கொள்ளலாம் என்றும் அதற்குள் எல்லாம் தெரிந்துவிடும் என்றும் அதற்காகத்தான் மூன்று வருஷ காலம் வரையில் அதற்கு அவகாசம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த மூன்று வருஷம் என்று வைத்துவிட்டால் மூன்று வருஷமும் காத்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. எவ்வளவு துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமோ அவ்வளவு துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். மூன்று வருஷம் என்பது ஒரு அளவுதான் வைக்கப்பட்டிருக்கிறது. நிலச் சொந்தக்காரர்களுக்கு ஏதாவது வழி வகை செய்ய வேண்டும் என்பதால் எவ்வளவு சீக்கிரத்தில் செய்ய முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் செய்யப்படும். அதற்காகத்தான் இந்த இரண்டு திருத்தங்களும் செய்யப்பட்டிருக்கின்றன. பிற்பாடு, விவாதம் நடந்த பிறகு விரிவாக பதில் அளிக்கிறேன்.

29th September 1961]

*SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, நில உச்சவரம்பு சட்டம் மூன்றாவது முறையாக இன்று விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. அப்படி எடுத்துக் கொள்ளக்கூடிய நேரத்திலே சில முக்கியமான கருத்துக்களை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாகத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்தச் சட்டத்தின் அடிப்படையிலேயே உழுகிறவனுக்கே நிலம் சொந்தமாக இருக்க வேண்டும், நிலத்தில் பாடுபடுகிறவனுக்கே அந்த உரிமை இருக்க வேண்டுமென்ற கருத்தை முதலில் கூறியவர்கள், அதற்கு நேர்மாறாக இன்றைய தினம் அதைக் கொண்டு வந்து நிறைவேற்றப் போகிறார்கள். அதில் குறிப்பாக உச்ச வரம்பு ஒரு குடும்பத்துக்கு முப்பது எக்கர் என்று இருப்பதை பதினைந்து எக்கராகக் குறைக்க வேண்டும் என்று திருத்தத் தீர்மானம் கொடுத்தோம். 1960-ம் ஆண்டிலிருந்து இதை அமுலுக்குக் கொண்டு வராமல் 1955-ம் ஆண்டிலிருந்தே இதை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்றும் திருத்தம் கொடுத்தோம். அவைகள் எல்லாம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. 70-வது பிரிவில் பல்வேறு விதிவிலக்குகள் கொடுக்கப்படுவதைக் கைவிட வேண்டும் என்று வற்புறுத்தியும் அதுவும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இந்த நிலைமையில் இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவது நியாயமாக இல்லை. இவைகளையெல்லாம் எதிர் கட்சியினர் எடுத்துக் காட்டியும் பல தடவைச் சொல்லியும் அவைகளை ஏற்றுக்கொள்ளாத காரணத்தினால் இந்தச் சட்டம் மூன்றாவது முறையாகக் கொண்டு வந்துள்ள இக் காலத்தில், இந்தச் சட்டத்தினால் குறிப்பிட்ட பலன் உழவனுக்கு கிடைக்காது என்ற காரணத்தினால் இந்தச் சட்டம் மூன்றாவது தடவையாக விவாதிக்கப்பட்டு நிறைவேற்றப்படுவதில் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் கலந்து கொள்ளவிரும்பவில்லையாதலால், இதில் கலந்து கொள்ளாமல், நாங்கள் வெளியேறுகிறோம் என்பதைத் தலைவர் அவர்கள் மூலமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

(திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் சபையைவிட்டு வெளியேறினர்.)

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் 'வெண்புரட்சி' என்று சொன்னார். உண்மையிலேயே இந்த மசோதா மூன்றாவது முறையாக படிக்கும்போது அதில் கலந்துகொள்வதற்கு அவசியமே இல்லை. எட்டாவது சாப்டரில் ஏதோ திருத்தம் செய்து விட்டால் மட்டும் போதாது. எதிர் கட்சியினர் உச்ச வரம்பை குறைக்க வேண்டும் என்றும் நில விஸ்தீரணத்தைக் குறைக்க வேண்டும் என்றும் 1955-ம் வருஷத்திலிருந்து இதை அமுல் நடத்த வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி பல திருத்தங்களைக் கொடுத்தும், இன்னும் இதைப்போன்ற பல நியாயமான திருத்தங்களைக் கொடுத்தும் அவைகளை ஏற்றுக்கொள்ளாமல் இதை நிறைவேற்றுகிறார்கள். சட்டத்தின் அடிப்படையிலேயே எந்தவிதமான மாறுதலும் செய்யப்படவில்லை. எங்களுடைய பல திருத்தங்களை ஒப்புக்கொள்ளவே இல்லை. இந்த நிலைமையில் நிலப் பிரபுக்களுக்கு வசதி செய்வதாக இருப்பதால் இது வெண்புரட்சியா அல்லது நாங்கள் செய்வது வெண்புரட்சியா என்பது தெரியவில்லை. வெண்புரட்சி செய்வதெல்லாம் அவர்கள்தான். அவர்கள்தான் வெண்புரட்சியை உண்டுபண்ண முயற்சிக்கிறார்கள். ஆகவே இந்தச் சட்டம், அமுலுக்கு வந்தால் விவசாயிகளுக்கு பெரும் ஆபத்துதான் ஏற்படும். ஆகவே இந்தச் சட்டம் நிறைவேறக்கூடிய காலத்தில் கம்யூனிஸ்ட் கட்சியும் அதன் சார்பாக தமிழ் தேசிய கட்சியும், பிரஜா சோஷலிஸ்ட் கட்சியும்—ஏற்கனவே திராவிட முன்னேற்ற கழகத்தின் சார்பாக ஸ்ரீ அன்பழகன் தெரிவித்து விட்டு வெளியேறி விட்டார்—இந்த மூன்றாவது முறை நடக்கும் விவாதத்தில் கலந்து கொள்வதற்கு இல்லை என்பதை தெரிவித்துக் கொண்டு நாங்களும் இந்தச் சபையை விட்டு வெளியேறுகிறோம்.

(கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்கள் சபையைவிட்டு வெளியேறினர்.)

SRI K. SATTANATHA KARAYALAR : நானும் இதில் கலந்து கொள்ளாமல் இந்த சபையை விட்டு வெளியேறுகிறேன்.

(ஸ்ரீ கே. சட்டநாத கரையாளரும் சபையை விட்டு வெளியேறினார்.)

SRI T. KARIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே இந்தச் சட்டம் இப்பொழுது விவாதிக்கப்படப் போகிறது. இதற்கு முன் இந்தச் சட்டம் இரண்டு முறை விவாதிக்கப்பட்டிருக்கிறது. அப்பொழுது ஏனைய கட்சி அங்கத்தினர்களும் இருந்தார்கள், ஆளுகிற கட்சி இதைப் பற்றி விவாதிக்கும் போது ஏனைய கட்சி அங்கத்தினர்களும் ஆளுகிற கட்சியுடன் கூட இருந்து எங்களைப் பொறுமையாகக் கேட்டிருந்து கடைசி வரையில் அதாவது இந்தச் சட்டம் நிறைவேறுகிற வரையில் இங்கேயே இருந்து வந்தால் எல்லோருக்கும் சந்தோஷமாக இருக்கும் என்று நினைக்கிறேன். அப்படி பொறுமையுடன் இங்கேயே இருந்து கேட்கவேண்டு மென்று என்னுடைய சொந்த முறையில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : சட்டமன்றத்தலைவர் அவர்களே இந்த மசோதாவை முதலில் கொண்டு வந்த காலத்தில் இதைப் பற்றி கேட்டபோது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சட்டம் ஒழுங்கான முறையில் பரிசீலிக்கப்படும் என்றும் நல்ல முறையில் ஒவ்வொரு பகுதியும் விவாதிக்கப்படும் என்றும் சொன்னார். அதை ஏற்றுக் கொண்டு விவாதிக்கப்பட்டது. பல திருத்தங்கள் கொடுக்கப்பட்டன. ஆனால் அவைகள் எல்லாம் ஏற்றுக் கொள்ளப்பட வில்லை. அதனால் இந்த மசோதா நிறைவேறுவதில் எங்களுடைய நம்பிக்கைப் போய் விட்டது. இப்படிப்பட்ட அவ நம்பிக்கையுடன் இந்த மசோதா நிறைவேறக் கூடிய காலத்தில் அதற்கு நாங்கள் பங்குதாரர்களாக இருக்கக் கூடாது என்பதைதெரிவித்துக் கொண்டு இந்தச் சபையைவிட்டு வெளியேறுகிறோம்.

(தமிழ் தேசிய கட்சி அங்கத்தினர்கள் சபையைவிட்டு வெளியேறினர்.)

SRI K. R. NALLASIVAM : மதிப்பிற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தின்மூலம் நிலம் கிடைக்குமா அல்லது கிடைக்காதா என்று அரசாங்கத்திற்கே தெரியாமல் இருக்கிறது. இப்படி அரசாங்கம் சொல்லக்கூடிய நிலையில் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றுகிறார்கள். நிச்சயமாக ஒன்று அல்லது இரண்டு ஏக்கராவது கிடைக்கும் என்ற நிலையில் அரசாங்கம் இருந்திருக்கவேண்டும். அந்த நிலையில் இல்லாமல் இந்தச் சட்டம் இப்பொழுது நிறைவேற்றப்படுகிறது. இது சரியான பொறுப்பு அல்ல. தன்னுடைய பொறுப்பை அரசாங்கம் தட்டிக் கழிப்பதாக இருக்கிறது. அந்த முறையில் இந்தச் சட்டம் நிறைவேறுகிற காலத்தில் அதில் பங்கு கொள்வது சரியல்ல என்று நினைத்து . . .

DEPUTY SPEAKER : If the hon. Member wants to stage a walk-out, he can do so. But he should not make a lengthy speech now.

SRI K. R. NALLASIVAM : இன்னொரு பெரிய பிரச்னையைச் சொல்ல விரும்புகிறேன். உச்ச வரம்பு முப்பது ஏக்கர் என்று வைத்தார்கள். அதைக் குறைக்க வேண்டும் என்று சொன்னோம். அதை ஏற்றுக் கொள்ளவில்லை. பத்து ஏக்கராவாவது குறைத்திருக்கலாம். இருபது ஏக்கர் என்றாவது வைத்திருக்கலாம். அப்படி இல்லாமல் இதைக் கொண்டு வந்து நிறைவேற்றுவதற்கு, என்னுடைய வருத்தத்தை தெரிவிக்கும் முறையில் அதற்கு நான் சாட்சியாக இருக்கக்கூடாது என்ற முறையில் என்னுடைய வருத்தத்தை தெரிவித்துக் கொண்டு இந்தச் சபையைவிட்டு நான் வெளியேறுகிறேன்.

(ஸ்ரீ. கே. ஆர். நல்லசிவம் சபையைவிட்டு வெளியேறினார்.)

29th September 1961]

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, Sir. கனம் உதவி சபா நாயகர் அவர்களே, வெளியே போகிறவர்கள் இன்று இந்த சட்ட சபைக்கு வராமலே இருந்திருந்தால் சர்க்காருக்கு ஒரு அங்கத்தினருக்கு 12½ ரூபாய் வீதம் மிச்சமாக இருக்குமே.

SRI S. M. ANNAMALAI rose.

DEPUTY SPEAKER : If the hon. Member wants to remain, he can make a speech. But if the hon. Member wants to walk-out, he can go.

SRI S. M. ANNAMALAI : கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே இரண்டொரு வார்த்தைகளை மட்டும் தெரிவித்து விட்டு அமருகிறேன். இந்தச் சட்டம் முதலில் வந்த முதற்கொண்டே இதில் நான் கலந்து கொள்ளவில்லை. இந்த மசோதா பாமர மக்களுக்கு கெடுதியை விளைவிக்கும் என்ற காரணத்தினாலேயே நான் இதில் கலந்து கொள்ளவில்லை, ஷரத்து வாரியாக பரிசீலனை நடந்த போதுகூட நான் கலந்து கொள்ளவில்லை. இது பாமரமக்களுக்கு பயனை விளைவிக்காது என்ற காரணத்தினால் நானும் இந்த சட்டசபையை விட்டு வெளியேறுகிறேன் என்று சொல்லிக் கொண்டு வெளியேறுகிறேன்.

(ஸ்ரீ எஸ். எம். அண்ணாமலை சபையை விட்டு வெளியேறினார்.)

SRI P. G. KARUTHIRUMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த உச்ச வரம்புச் சட்டம் சட்டமாகும் நிலையில் எதிர் கட்சியிலிருந்து பல அங்கத்தினர்கள் என்னென்னவோ காரணங்களை சொல்லி வெளியேறினார்கள். அவர்கள் வெளியேறும் போது சொல்லிய காரணங்கள், அவர்களுக்குத்தான் மக்களிடத்தில், விவசாயிகளிடத்தில், பிடிப்பு இருப்பதாகவும் அவர்கள்தான் அவர்களுடைய நிலத்திற்கு பாது காப்பு அளிப்பதாகவும் நினைத்துக்கொண்டு வெளியேறினார்கள். ஆனால் இப்பொழுது வந்திருக்கும்படியான மசோதா பெரிய புரட்சிகரமான மசோதா என்று சொன்னால் அது மிகையாகாது. இந்தியா தேசத்திலேயே, குறிப்பாக விவசாய ராஜ்ஜியமாகிய தமிழ் நாட்டிலே, இந்த மசோதா தேச பிதா மகாத்மா காந்தி வகுத்துக் கொடுத்த சத்தியம், அகிம்சை அடிப்படையில் ஏற்பட்ட மாபெரும் புரட்சி என்றுதான் நாம் கருத வேண்டும். ஏனென்றால், காங்கிரசினுடைய அடிப்படை லட்சியம், அடிப்படைக் கொள்கை சுமார் முப்பது வருஷங்களுக்கு முன்னாலிருந்தே உழுபவனுக்கு நிலம் சொந்தமாக இருக்க வேண்டும், விவசாயப் பிரபுத்துவ முறை ஒழிய வேண்டும், யார் நிலத்தில் பாடுபடுகின்றார்களோ, அவர்களிடத்தில் நிலம் இருக்க வேண்டும் என்று இருந்து வருகிறது. இதை அடிப்படையாகக் கொண்டுதான், சுதந்திரம் பெற்றதற்கு பின்னால், படிப்படியாக சட்டத்தை நாம் விவசாயக் குடிமக்களுக்கு ஏற்ற வாறு அமைத்து வந்தோம். அதுவும் தமிழ் நாட்டு சட்டசபையிலே இத்தகைய மசோதா இப்பொழுது வந்தது அல்ல. 1952-ம் வருஷத்திலே தஞ்சாவூர் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் முதல் படியாக அமைந்தது. அதற்குப் பின்னால், பூமியிலே உழும் குத்தகைதாரர்களை வெளியேற்றாமல் தடுக்க வேண்டும் என்று அடுத்த கட்டத்திலே அமைந்தது. அதற்குப் பின்னால், உழும்படியான சாகுபடியாளர், குடியானவர்களுக்கு நியாய வாரச் சட்டம் மூன்றாவது முறையாக அமைந்தது. இந்த மூன்று படிகளும் அமைந்ததற்கு மேல் பூமி வைத்துக்கொள்வதில் ஓரளவு உச்ச வரம்பு இருக்க வேண்டுமென்ற சட்டம் இப்பொழுது நிறைவேற்றுகிறோம்.

இப்பொழுதிருக்கும் பிரச்னை என்ன வென்றால், மாற்றுக் கட்சிகளோ எதிர் கட்சிகளோ சொல்வது போல் பூமி எல்லாவற்றையும் எடுத்துப் பிரித்து நிலமில்லாதவர்களுக்குக் கொடுத்துத் திருப்திப்படுத்த வேண்டும் என்ற முறையிலே அமைக்க முடியாது. உலகத்திலே விவசாயத்தை எடுத்துக் கொண்டு பார்த்தால், உலகத்திலேயிருக்கும் ஜனத் தொகைக்கு சராசரி இரண்டரை ஏக்கர் கூட கிடையாது. சென்னை ராஜ்ஜியத்தில்

ஒரு எக்கர் 40 சென்ட்தான் உழுவதற்கு ஏற்ற நிலம் சராசரி வருகிறது. எங்கோ ரஷ்யாவில் நிலப்புரட்சி ஏற்பட்டது. அதை அடிப்படையாகக் கொண்டு கேட்கிறோம் என்று சொல்வார்களானால், மேனாடுகளிலே ஏன் அந்தப் புரட்சி ஏற்பட்டது என்பதை இந்தச் சமயத்திலே சிந்தித்துப் பார்க்க வேண்டும். அங்கே குடும்பத்திலே இருக்கும் எல்லா மக்களுக்கும் சொத்துரிமை கிடையாது. குடும்பத்திலே இருக்கும் முதல் மகனுக்குத்தான் சொத்து உரிமை உண்டு. ஒருவனுக்கு நான்கு குழந்தைகள், ஐந்து குழந்தைகள் இருந்தாலும்கூட, முதல் மகனுக்குத்தான் சொத்து உரிமை என்ற அடிப்படையிலே, அதே குடும்பத்தில் பிறந்து வளர்ந்த மற்ற மக்களுக்கு பூமியோ சொத்தோ இல்லாத காரணத்தால் பொறாமை, துவேஷம் வளர்ந்து கொண்டு வந்தது. ரஷ்ய தேசத்தில், மேனாடுகளில், ஐரோப்பிய தேசத்தில் இருக்கும்படியான சில நாடுகளில் ஒரு குடும்பத்திற்கு ஆயிரக் கணக்கான, லட்சக்கணக்கான எக்கர் பூமி போய்ச்சேர, அதே குடும்பத்தில் பிறந்து வளர்ந்த மற்றவர்கள் தெருவிலே நிற்கும்படியான நிலை ஏற்பட்ட காரணத்தால்தான் ஜாருடைய ஆட்சியில் மாபெரும் புரட்சி ஏற்பட்டது. ஆனால், தமிழ் நாட்டிலோ, இந்தியாவிலோ பார்த்தால், ஒரு எக்கர் பூமியிலே பங்கு பிரிவினை ஏற்பட்டால், எத்தனை தகராறு, எத்தனை கொலை, களவு ஏற்பட்டுவிடும் என்பதை பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம். வேறு தேசத்தில் இருக்கும்படியான நிலையை அனுசரித்து, இங்கிருக்கும் நிலப் பிரபுக்களையெல்லாம்கூட நடுத்தெருவிலே திண்டாட வைத்து நிலத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்கிற மனப்பான்மைக்கும் கருவிலே வளரும் குழந்தைக்குக்கூட சொத்துரிமை உண்டு என்று சொல்கிற நம் தேச ஹிந்து தரும மனப்பான்மைக்கும் உள்ள வித்தியாசத்தைச் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன்.

ஆகவே, நம்முடைய மத சம்பிரதாயம், நம்முடைய நாட்டின் நிலைமை சம தர்ம அடிப்படை இவைகளைப் பார்த்துச் செய்ய வேண்டும். ஒருவருக்கு ஆயிரம் எக்கர் இருக்கலாம். அவருக்குப் பத்து குழந்தைகள் இருந்தால், தலைக்கு 100 எக்கர் வீதம் பிரிந்து விடுகிறது. அடுத்த தலைமுறையில் தலைக்கு 15 எக்கராகப்பிரிந்து விடுகிறது. எத்தனை பெரிய குடும்பமாக இருந்தாலும், மூன்றாவது நான்காவது தலைமுறையைப் பார்த்தால், சாதாரணமாக உழைக்கும் குத்தகைதாராக மாறிவிடும் நிலைமையைப் பல குடும்பங்களில் பார்க்கிறோம். சில குடும்பங்களில் பாடுபட்டு வாயைக் கட்டி, வயிற்றைக்கட்டி உழைப்பார்களானால், கொஞ்சம் முன்னேறி ஐந்து எக்கர், பத்து எக்கர், 20 எக்கர் சொந்த முறையிலே சேர்த்துவைத்துக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். சென்னை ராஜ்ஜியத்திலே ரயத்துவாரி முறை ஏற்பட்டிருக்கிறது. பூமியிலே உழைப்பைக் கொடுத்து, உற்பத்தியை அதிகப்படுத்தும் நிலையில் ரயத்துவாரி முறையாக அமைத்திருப்பதே சிறந்த முறை என்று நான் கருதுகிறேன். இனாம் பூமி, ஜமீன் பூமி என்றால், அது எந்த எந்த நிலையிலோ எப்படி எப்படியோ வந்து சிக்கியிருக்கலாம். அதற்குத் தனிச் தனிச் சட்டம் செய்தோம். ஜமீன் ஒழிப்புச் சட்டம் செய்தோம். இனாம் பூமியை ரயத்துவாரியாக மாற்றவேண்டுமென்ற காரணத்தால், ரயத்துவாரி முறை மூலமாக விவசாயிகளுக்கு நியாயம் வழங்கவேண்டும் என்ற முறையிலே வெற்றி பெற்றிருக்கிறோம். நிலச் சீர்திருத்தத்தின் அடிப்படை நோக்கம், உச்சவரம்பின் முக்கியமான நோக்கம், அதிகமான பூமி வைத்திருப்பவர்கள் அதில் சரியானபடி பாடுபடாதிருப்பதை மாற்றி, இன்டென்ஸிவ் கல்டிவேஷன் முறையில், விவசாய அபிவிருத்தி செய்து உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும். இபபொழுது இருக்கும் ஜனத் தொகைப் பெருக்கத்திற்கு ஏற்ப உற்பத்தி பெருக வேண்டும். விவசாயத் தொழிலில் ஈடுபடும் மக்களுக்கு நியாயமான ஊதியம் கிடைக்க வேண்டும் என்ற அடிப்படையிலேதான் பத்து, இருபது வருஷங்களுக்கு முன்னால், விவசாயத் தொழிலை நம்பாமல், கைத் தொழில், இதர தொழில்களில் யார் மேற்கொண்டார்களோ அவர்கள் எல்லாம், அந்தக் குடும்பங்கள் எல்லாம் சீரும் சிறப்புமாக அமைந்திருக்கின்றன. விவசாயத்தை நம்பியிருக்கும்

29th September 1961] [Sri P. G. Karuthiruman]

குடும்பங்களைப் பார்த்தால் பழைய நிலையிலேயே இருந்து கொண்டிருக் கிறார்கள். நில உச்ச வரம்பு வரும்படியான நிலையில் நிலத்திலே இருக்கும் பிடிப்பை விட்டு, விவசாயக் குடும்பம் இதர தொழில்களில் ஈடுபடுவதற்குச் சரியான சந்தர்ப்பம், சரியான வாய்ப்பு அமைவதற்கும்கூட வழி வகை செய்வதற்காகத்தான் இந்த மசோதா அமைத்திருக்கிறோம் என்றால், அது மிகையாகாது. கோவை மாவட்டத்தில் பார்த்தால், அங்கு மில் முதலாளிகள் எல்லாம் விவசாயத்தை நம்பியிராமல் இதர தொழில்களில் ஈடுபட்ட காரணத்தால் விவசாயக் குடும்பங்களைவிடப் பல மடங்கு சீரும் சிறப்புமாக வாழ்ந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, விவ சாயக் குடும்பத்தில் இருப்பவர்கள்கூட, விவசாயத்தையே பூரணமாக நம்பி யிராமல், அதிலே ஒரு பகுதியினர் வேறு தொழில்களிலே ஈடுபட வேண்டும். வேறு தொழில்களில் ஊக்கத்தையும் ஆக்கத்தையும் காட்ட வேண்டும். அப்பொழுதுதான் பொருளாதார நிலை சரியாக இருக்க முடியும். இந்த மசோதா மூலமாக பழைய போக்கிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து, ஒரு திருப்பம் ஏற்பட வழி ஏற்படுகிறது என்று நான் கருதுகிறேன்.

"இந்தச் சட்டம் வருவதால் எத்தனையோ பேர் வெளியேற்றப்பட் டிருக்கிறார்கள். நிலமில்லாதவர்களுக்குப் பூமி கொடுக்க வேண்டும். நில மில்லாத விவசாயிகள் அனைவருக்கும் பூமியைப் பிரித்துக் கொடுக்கவேண்டு மென்ற அடிப்படை நோக்கம் இந்தச் சட்டத்தில் இல்லை. உச்ச வரம்பு 30 ஏக்கர் கட்டுவது போதாது உச்ச வரம்பை 15 ஏக்கராகக் குறைக்கவேண்டும், அதைச் செய்யாததால், வெளியேறுகிறோம்" என்று சிலர் சொன்னார் கள். முப்பது ஏக்கர் வைக்கும்போது 15 ஏக்கர் வைக்கவேண்டும் என் கிறார்கள். 20 ஏக்கர் என்று வைத்திருந்தால் 10 ஏக்கர் வேண்டும் என்று சொல்வார்கள். 15 ஏக்கர் வைத்திருந்தால் 5 ஏக்கர் என்று சொல்வார் கள். முப்பது ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று வைப்பதற்கு அடிப்படைக் கருத்து என்ன? நிலப் பிரபுத்துவ முறையில், ஒருவரிடத்தில் பல ஆயிரக்கணக்கான ஏக்கர் இருக்க முடியாது என்னும்படியான நிலையை உடைத்து எறிந்தது காங்கிரஸ்தான் என்பதைத் திட்டவட்டமாக இந்தச் சபையின் முன்னால் சொல்ல ஆசைப்படுகிறேன். அதிருஷ்டவசமாகவோ துரதிருஷ்டவசமாகவோ ஐந்து ஏக்கர் என்று வைத்து அதிலே வெற்றி பெறுவாரானால், அடிப்படைக் காரணமாக இருந்தவர்கள், நிலத்திலே விவசாயிகளுக்கு ஊக்கம் கொடுத்தவர்கள் காங்கிரஸ்தான், காங்கிரஸ் சர்க் கார்தான் என்பதை மக்கள் மறக்க மாட்டார்கள் என்பதை நான் ஞாபகப் படுத்த விரும்புகிறேன்.

முப்பது ஏக்கர்தான் உச்ச வரம்பு, பாக்கி இருக்கும்படியான நிலத்தை அவர்களே வைத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லவில்லை. நேரடி யாக விவசாயம் செய்பவர்களுக்கு உரிய பூமியைக் கொடுத்தாய்விட்டது. பொறுக்குக் கமிட்டிக்கு போய்த் திரும்பி வந்த மசோதாவில், நிலங்களை மீட்க ஓரளவு சிபார்சு செய்யப்பட்டிருந்தது. இருந்தாலும், இங்கேயிருக்கும் சட்ட மன்ற உறுப்பினர்களுடைய கருத்துக்களைத் தெரிவித்தவுடனே, சர்க் கார் மிகவும் மனமுவந்து ஏற்கெனவே உழுதுகொண்டு இருந்த விவ சாயிகள் வெளியேற்றப் படுவதைத் தடுக்க வேண்டும். நிச்சயமாக இருக்க வேண்டும், ஏற்கனவே பூமியில் வேலை செய்து கொண்டிருந்தவர் களை வெளியேற்றாத வகையில் சொந்த சாகுபடிக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். நடுவிலே யாரும் நிற்கக் கூடாது என்பதற்காக எட்டாவது அத்தியாயத்தில் கொண்டு வந்த திருத்தம் மிக மிகப் பொருத்தமான திருத்தம். அது வரவேற்கத் தகுந்த அம்சம். ஒரு காரியம் செய்யும் போது, ஏற்கனவே நடந்த நல்ல காரியத்தைப் பாழ் படுத்தக் கூடாது. ஒரு சிறு கதை சொல்ல விரும்புகிறேன். ஓர் ஊரில் ஒரு ராஜா இருந் தாராம். அவர் தன்னுடைய மகனைக் கூப்பிட்டு, "நான் இத்தனை நாள் தரும பரிபாலனம் செய்து கொண்டிருந்தேன்; இனி நீ என்னுடைய பெயரைக் காப்பாற்ற வேண்டும்", என்று சொல்லி மகனிடம் ராஜ்ஜியத் தை ஒப்படைத்தான். ராஜா என்ன செய்து கொண்டிருந்தார்? ஓரளவு நெல்லைக் கொடுத்து அரிசி வாங்கிக் கொண்டிருந்தார் குடிமக்களிட

மிருந்து. மகன் வந்து நெல்லைக் கொடுத்து அரிசி வாங்குவதற்குப் பதிலாக உமியைக் கொடுத்து அரிசி வாங்க ஆரம்பித்தான். ராஜாவே தேவலை என்ற நிலைமைக்கு மகன் நடந்து கொண்டான் என்பது கதை. அப்படிப்பட்ட நிலை இந்த மசோதாவில் ஏற்படாமல் தடுக்கப்பட்டிருக்கிறது. ஏற்கனவே குத்தகைதாரர்களுக்குக் கொடுத்த சலுகை பாக்கியிருக்கும்படியான சட்டத்திலே மீண்டும் எடுத்துக் கொள்வதற்கான முறையில் ஏற்படக்கூடாது என்பதற்காக உழும் குடியானவர்களுக்கு வசதி இருக்கவேண்டுமென்பதற்காகத் திருத்தப்பட்டது வரவேற்கத்தகுந்த அம்சம். கிராமங்களில் இருக்கும் விவசாயிகள், சொந்தக்காரர்களுக்குப் பின்னராவது அவர்கள் பூமியைச் சாகுபடி செய்யும் வசதி நிச்சயமாகச் செய்து கொடுப்பார் என்ற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எந்த ஜில்லாவிலும் கஷ்டம் இல்லை. தஞ்சை, திருச்சி போன்ற ஜில்லாக்களிலே் தகராறு இருந்துகொண்டிருக்கிறது. எங்கள் பகுதியில் இருக்கும் குடியானவர்கள் பத்து வருஷங்கள், இருபது வருஷங்கள், உழுதுகொண்டிருக்கிறார்கள். பூமிச் சொந்தக்காரர்களுக்கும் குடியானவர்களுக்கும் இடையே ஒரு நல்ல எண்ணம் இருந்துகொண்டிருக்கிறது. கிராமங்களிலே உள்ளவர்கள் விவசாய மக்களுடைய நல்லெண்ணத்தைப் பெற்றால்தான் வாழ முடியும். குடியானவர்களை வெளியேற்றிவிட்டு மனிதனாக, உயர்ந்தவனாக, சிறந்தவனாக இருக்க முடியாது என்பதை இந்த சமயத்தில் ஞாபகமூட்ட விரும்புகிறேன். பூமி சொந்தக்காரர் பயிரிடுகிறவர்களுடைய நல்லெண்ணத்தைப் பெற்றால்தான், அங்கிருக்கும் ஏழை எளியவர்களுடைய சௌகரியங்களைக் கவனித்தால்தான் அவர்கள் மனிதர்களாக அங்கு வாழமுடியும். இந்த நிலை மற்ற மாவட்டங்களில் கிடையாது. குறிப்பாக கோயம்புத்தூர், சேலம் போன்ற மாவட்டங்களில் விவசாயக் குடும்பத்தினரை நிலத்தில் இருந்து வெளியேற்றும் கொடுமை கிடையாது. அவர்களாகவே வேண்டுமென்றால் குத்தகை கொடுக்க முடியாமல் நிலத்தை விட்டு விட்டு வெளியேறுவதும் உண்டு. காரணம் நிலக்காரர்களும்கூட விவசாயிகளே. சாகுபடியாளர்களைப் போல சாகுபடி வேலை அத்தனையும் நிலச் சொந்தக்காரர்களுக்குத் தெரியும். ஆகவே சாகுபடியாளர்களின் கஷ்டங்களை அவர்கள் நன்கு உணர்ந்தவர்கள். ஆகவே தான் அங்கே பலவந்தமாக நிலத்தில் இருந்து வெளியேற்றும் பழக்கம் கிடையாது. ஆனால் இந்தப் பக்கத்தில் ஒருவன் நூறு ஏக்கர் பூமியை நிலக்காரனிடம் இருந்து குத்தகைக்கு எடுத்துக்கொள்வான். பலரிடம் அதைச் சாகுபடிக்குக் கொடுப்பான். இவன் வேலை செய்வதில்லை. இடையில் இருந்து உழைப்பவர்களின் பலனை அனுபவித்து வந்தான். முக்கியமாக இந்த மசோதாவின் மூலம் இனிமேல் இடைத்தரகர்கள் என்பதேயில்லாமல் செய்துவிடக்கூடிய நன்மை ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். விவசாயம் தெரிந்தவரிடத்தில்தான் பூமி இருக்க வேண்டுமென்பதற்கு இந்த மசோதா வழி செய்கிறது. நாம் 30 ஸ்டாண்டார்டு ஏக்கர் உச்ச வரம்பு என்று வைத்திருப்பதில் அபிப்பிராய பேதம் இருக்கலாம். பதினைந்து ஏக்கர் போதும் என்பவர்களுக்கு அதிலிருந்து என்ன வரும்படி வரும், என்ன செலவாகும் என்கிற கணக்கு ஒன்றும் தெரியாது. நாம் மிக்க அனுபவத்தின் பேரில், ஆராய்ச்சியின் பேரில், மற்ற ராஜ்யங்களில் செய்திருக்கும்படியான ஏற்பாடுகளையும் கண்டுகொண்டு வந்திருக்கும்படியான இந்த மசோதா தமிழ்நாட்டுக்கு ஒரு பரிசாக, தமிழ் நாட்டுச் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கத் தக்கதாக வந்திருக்கிறது என்று தெரிவித்துக்கொண்டு, இதைச் சட்டமாக்குவதில் எல்லோரும் முனைய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

*Sri R. SRINIVASA IYER : ஸார், நமக்கு சுதந்திரம் கிடைத்த பிறகு, முதலாவதாக நடுநிலைமை வகித்த இடைத்தரகர்களை (Intermediaries) ஒழிக்க 1948-ம் வருஷத்திய 26-வது சட்டத்தை நிறைவேற்றினோம். ஜமீன்தார்கள், இனாம்தார்கள் இவர்களிடத்தில் அகப்பட்ட குடிகளைக் காப்பாற்ற 1947-ம் வருஷத்திய 30-ம் ஆக்டை நிறைவேற்றியிருக்கிறோம். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக நிலச் சொந்

தக்காரர்களுக்கும், குடிமக்களுக்கும் இடையில் நியாயமான விகிதாசாரத்தில் வரும்படியைப் பகிர்ந்துகொள்ள பல சட்டங்கள் செய்திருக்கிறோம். எல்லாவற்றையும்விட மிக ஜாஸ்தியான நிலச்சுவாந்தார்கள், குடியான வர்கள் ஆகிய எல்லோருக்கும் பயன் அளிக்கக்கூடியதாக வந்திருக்கக் கூடிய மசோதா இந்த நில உச்ச வரம்பு மசோதா.

இந்தச் சட்டத்தின் முன்னுரையைப் போல வேறு எந்தச் சட்டத்திலும் அவ்வளவு நீண்டதொரு முன்னுரை—பிரியாம்பிள் கிடையாது. இவ்வளவு ஜாஸ்தியான குறிக்கோள்கள் வேறு எந்தச் சட்டத்திலும் கிடையாது. எதற்காக இத்தனை குறிக்கோள்களை அடிப்படையாகக்கொண்டு இந்த மசோதாவை நிறைவேற்றுகிறோம் என்பதுபற்றி முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆகியவற்றில் கொடுக்கப்பட்டுள்ளது. பிளானிங் கமிஷன் அறிக்கை யிலும் இருக்கிறது. ஆனால் ஒரு சிலர் அந்தக் குறிக்கோள்களை, லட்சியங் களை விட்டு இவர்கள் சில குறிக்கோள்களைக் கொண்டு, நிர்ப்பந்தத்தின் மூலம் சட்டசபையினரைப் பணிய வைக்க நினைத்து சட்டமன்றத்தின் முன் மறியல்களைச்செய்தும், இன்று சட்டமன்றத்தை விட்டே வெளியேறியும் இருக் கிறார்கள். ஒரு தாய் தன் பல குழந்தைகளையும் காப்பாற்றுவது போல இந்த அரசாங்கம் தன்னுடைய மக்களை—நிலச்சுவாந்தார்கள், குடியான கள், குத்தகைக்காரர்கள் ஆகிய எல்லோரையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பைக் கொண்டிருக்கிறது. மற்ற மாநிலங்களில் நிறைவேற்றப் பட்டுள்ள மசோதாக்களின் ஷரத்துக்களைப் பார்த்தும், இங்கும் நன்கு பரிசீலனை செய்துதான் இந்த மசோதாவை அரசாங்கம் கொண்டுவந்திருக் கிறது. அதுவும் நிறைவேறும் தருவாயில் இருக்கிறது. கனம் கருத்திருமன் அவர்கள் சொன்னதுபோல நிலத்தைப் பங்கு போட்டுக்கொள்கிற சட்டம் அல்ல இது. முக்கியமாக ஜாஸ்தியாக சிலரிடம் குவிந்து கிடக்கும் நிலத்தை மட்டும் எடுத்துப் பிரித்துவிட்டால் உணவு உற்பத்தி ஜாஸ்தி யாகும் என்ற நோக்கத்தோடு செய்யப்பட்ட ஒரு சட்டம் இது. ஆனால் எத்தனை நிலம் கிடைக்கும், இதை எத்தனை பேர்களுக்கு வினியோகிக்க லாம் என்கிற புள்ளி விவரம் இல்லையென்று சொன்னால் அது சரியல்ல.

மற்ற மாநிலங்களில் இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீமன் நாராயணன் சொன்னதுபோல உணவு உற்பத்தி சம்பந்தப்பட்ட வரையில் நமக்குச் சரியான புள்ளி விவரங்கள் இன்று வரை கிடையாது. இந்த மசோதாவின் நோக்கமே உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதுதான் என்று சொல்கிறோம். நிச்சயமாக உணவு உற்பத்தி பெருகும் என்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் ஒரே ஒரு ஆலோசனை கூற விரும்புகிறேன். உணவு உற்பத்திப் பெருக்கம் பற்றிய புள்ளி விவரங்களை இவ்வருடத்தில் இருந்தே சேகரிக்க வேண்டும். சாம்பிள் சர்வே என்று எங்கோ ஒருமூலை முடுக்கில் அறுவடை செய்து புள்ளி விவரம் சேகரிப்பதுகூட இண்டியன் கவுன்சில் ஆப் அக்ரிகல்சரல் ரிசர்ச் ஒப்புக்கொள்ளவில்லை. இந்தச் சட்டத்தை நிறைவேற்றியதனால் ஏற்படும் பலனைக் காண அவ்வப்போது வருஷாவருஷம் புள்ளி விவரம் எல்லா இடங்களிலும் சேகரிக்க வேண்டும். அத்துடன்கூட முன்பு ஒரு காணி நிலம் இருந்தாலும் லாண்டு லார்டு, ஒரு குச்சுக் குடிசையை வாடகைக்கு விட்டாலும் லாண்டு லார்டு, குடியிருப்பவன் டெனன்ட் என்று ஆங்கில ஆட்சியிலிருந்தது. இனிமேல் லாண்டு லார்டு என்றே இருக்காது. அதுவும் இந்தச் சட்டம் நிறைவேற்றிய பிறகு நிலம் சம்பந்தப்பட்ட பிரபுக்கள் இனி இராது. மற்ற தொழில்களில் உள்ளவர்களுக்கு இருக்கலாம்.

11-00 a.m.

இதர வருமானத்தைப்பற்றி அதைக் கட்டுப்படுத்துவதற்கு இப்பொழுது நோக்கம் இல்லை. ஆனால் அதிக வரி விதித்து அவர்கள் வருமானத்தைக் குறைப்போம் என்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிய பெரிய புத்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இனிமேல் நிலச்சுவான் தார் என்ற வார்த்தையோடுதான் இருக்கும், நிலப்பிரபுக்கள் என்ற வார்த்தையும் எடுபட்டுவிடும். அந்த வர்க்கமே இல்லாது போய்விடும்.

சில ஆண்டுகளுக்கு முன்பு ஆந்திராவும் நாமும் ஒன்ருக இருந்தபோது ஜமீன் ஒழிக, இனும் ஒழிக என்று ஒழிக சப்தம் ஆரம்பித்ததிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக எல்லோரும் ஒழிந்துகொண்டு வருகிருர்கள். மைனர் இனும், இரு வார இனும், செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ளவை போன்ற குத்தகை கிராமங்கள்—ஈஸ்ட் இந்தியாக் கம்பெனியிடமிருந்து குத்தகைக்கு வாங்கியவர்கள்—அவர்களுக்கும்கூட சட்டம் வந்து விட்டது.

பின், கோயில், மடங்கள், சொத்துக்களுக்கு விலக்கு அளிப்பதுபற்றி இந்த மன்றத்தில் பிரமாதமாக வாதிடப்பட்டு அப்படி விலக்கு அளிக்கக் கூடாது என்று சொன்னதற்கு பதில் இதில் அதைச் சேர்த்தால் அரசியல் சட்டத்திற்கு விரோதமாக இது இருக்குமோ என்ற சந்தேகத்தால் வேறு சட்டம் கொண்டுவருகிறேம் என்று சொன்னதற்கிணங்க, சர்க்கார் வாக்குறுதியை நிறைவேற்ற, அந்த நிலங்களை சாகுபடி செய்வது குறித்துள்ள ஒரு மசோதா நேற்று இந்த மன்றத்தில் "இன்ட்ரட்யூஸ்" செய்யப்பட்டுவிட்டது. கோயில்கள், மடங்கள் இவற்றின் நிர்வாகத்தில் பிரவேசிக்காத முறையில் அதன் நிலங்களை சாகுபடி செய்வதற்கு மட்டும், சுப்ரீம் கோர்ட் தீர்ப்பிற்குட்பட்டு "சீரூர்மட்" கேஸ் தீர்ப்பிற்கு உட்பட்டு— நிலங்களைப் பராமரிப்பதற்குமட்டும், உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு மட்டும், கோவாப்பரேடிவ் பார்மிங் சொஸைட்டி அமைத்து சாகுபடி செய்வதற்குத்தான் இந்தச் சட்டம் இருப்பதாகப் பத்திரிகையில் இருந்து தெரியவருகிறது.

அந்த மசோதா கிடைத்த பிறகு விவரமாக சொல்லிக்கொள்ளலாம். நிலச் சொந்தக்காரர்கள், சாகுபடிதாரர்கள் இருசாராரையும் நியாயமான முறையில் நடத்தவேண்டுமென்று இங்கு கூறப்பட்டது. சட்டசபை செக்ரட்டேரியட்டிலிருந்து **Level of ceilings on existing holdings in the various States** என்று நமக்கு ஒரு புத்தகம் கொடுத்திருக்கிருர்கள். அதிலிருந்து, ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் எவ்வளவு ஏக்கர், எவ்வளவு வருமானம் உள்ள நிலம் என்று குறிப்பிட்டு உச்சவரம்பு நிர்ணயித்திருக்கிருர்கள் என்று பார்த்தால், **Extremist** ஆக இல்லாமல் ஒரேயடியாக நிலச்சுவாந்தார்களை அடியோடு ஒழித்து விடவேண்டுமென்றில்லாமல் அவர்களுக்கு ஜாஸ்தியாக நிலம் கொடுத்து விடவேண்டுமென்றில்லாமலும் நடுநிலைமையாக, சுமாரான வாழ்க்கை நடத்தும் முறையில் இந்த சட்டம் ஏற்பட்டிருக்கிறது. அதிலும் ஏக்கர் ஒன்றுக்கு 15 ரூபாய்க்குமேல் தீர்வையுள்ள நிலங்கள் 24 ஏக்கர் என்றிருக்கிறது. 1960-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ம் தேதி ரயத்துவாரி செட்டில்மெண்ட் ஏற்படுத்தப்பட்ட கிராமங்களுக்கு அந்த தீர்வை என்றும் அது ஏற்படுத்தாத, 26 ஆப் 1948 சட்டத்தின் 22-வது செக்ஷன்படி செட்டில்மெண்ட் நிறைவேற்றப்படாத கிராமங்களுக்கு வேறு முறையில் செக்ஷன் 3, கிளாஸ் 40, எக்ஸ்ப்ளனேஷன்படி சர்க்கார் நிர்ணயிக்கலாம், அதுபற்றி நோட்டிபை செய்யலாம் என்றிருக்கிறது. செக்ஷன் 10 சப் செக்ஷன் 5 படி ட்ருப்ட் ஸ்டேட்மெண்ட் கொடுக்கும்போது ஏற்படும் செட்டில்மெண்ட் தீர்வையை எடுத்துக்கொள்ளலாம், என்றிருக்கிறது. அது நியாயமல்ல. 30, 40 ஆண்டுகளுக்கு முன்பு பக்கத்திலிருந்து ரயத்துவாரி தீர்வையை அந்நிலங்களுக்கு எடுத்துக்கொண்டு அடுத்தாற்போல் உள்ள நிலங்களுக்கு இப்போதுள்ள நிலவளத்தைப் பொறுத்து ஏற்படுத்தும் செட்டில்மெண்ட் தீர்வையை எடுத்துக்கொண்டால் அது நியாயமானதல்ல என்று சுட்டிக் காட்டி சில திருத்தங்கள் கொண்டுவந்தோம். அவை நிறைவேற்றப்படவில்லை. 1960-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ம் தேதி ரயத்துவாரி செட்டில்மெண்ட் ஏற்படுத்தாத எல்லா நிலங்களுக்கும் சர்க்கார் அந்தத் தீர்வையை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஸ்டான்டேர்ட் ஏக்கர் நிர்ணயிக்க வேண்டுமென்று குறிப்பிட அந்த பவரை சர்க்கார் வைத்துக்கொண்டிருப்பது நியாயம். அந்தத் தீர்வையை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்வதற்கு நிலச்சுவாந்தாரர்களுக்கு ஒரு சந்தர்ப்பம், அவ்வளவுதான். இதைச் சர்க்காருக்கு விட்டுவிடுகிறேன்.

29th September 1961] [Sri R. Srinivasa Iyer]

பின்னர், 8-வது சாப்டர் திருத்தப்பட்டதைப்பற்றி திரு. கருத்திருமன் அவர்கள் சொன்னார்கள். ஏற்கனவே, 55-வது வருடத்திய 25-வது சட்டப்படி நாம் கொடுத்திருந்த உரிமையை, இத் தேதி முதல் இரண்டு வருடத்திற்குப் பிறகு ஏழு ஆண்டுகளுக்குள்ளாக நிலத்தை மீட்டுக்கொள்ள லாம் என்றும், இரண்டு வருடத்திற்குள்ளாக ஐந்து ஸ்டான்டேர்ட் ஏக்கர் மட்டும் உள்ளவர்கள் 3 ஸ்டான்டேர்ட் ஏக்கர் வரை இன்னும் சில விதிக ளுக்கு உட்பட்டு எடுத்துக்கொள்ளலாம் என்றும் ஏற்படுத்தியிருந்தோம். அதில், "மிலிட்டரி பெர்ஸானல், ஏர்மென், ஸீமென், டிஸேபில்ட் பேர்ஸன்ஸ், விமன்" இவர்களுக்கெல்லாம் சலுகை கொடுத்திருந்தோம். புது வெள்ளம் வந்து பழைய வெள்ளத்தை அடித்துக்கொண்டுபோய் விட்டது என்று சொல்லுவதுபோல் சாப்டர் 8-ஐ திருத்தியதினால் 55-வது வருடத்திய 25-வது சட்டத்தை வைத்துக்கொண்டு சில திருத்தங்களை இந்த புது சாப்டரில் செய்து அந்த வெள்ளம் போய்விட்டது. இப்பொழுது நிறைவேற்றியிருக்கும் சட்டத்தைப் பார்த்தால் டிஸேபிள்ட் பேர்ஸன்ஸ், பெண் பிள்ளைகள், விதவைகள், நொண்டிகள், அல்லது வேறு காரணங் களினால்—படையில் சேர்ந்து தேச சேவை செய்திருந்தாலும் அவர்களுக்கு ஒரு உரிமை கொடுப்பதாக சொல்லியிருந்தோம். அது எடுபட்டுப்போய் விட்டது. அதையும் ஞாபகத்தில் வைத்திருந்து, நிதியமைச்சர் அவர்கள் சொன்னதுபோல் நிலச் சொந்தக்காரர்கள் சாகுபடிதாரர்கள் உறவுபற்றி மீண்டும் பரிசீலனை செய்து புதிதாக கொண்டுவரப்போகும் சட்டத்தை சீக்கிரத்தில் இப்பொழுது 5, 6 மசோதாக்கள் கொண்டுவந்ததைப்போல் அந்த சட்டத்தையும் இதேபோல் அவசரமாகக் கொண்டுவந்து நிறைவேற்றி னால் சிலருக்கு சில காபந்துகள், உதவிகள் கொடுத்ததாக ஏற்படும்.

விலக்குகள்பற்றி சொன்னார்கள். நான் ஒன்று சொல்ல ஆசைப்படு கிறேன். ப்ளானிங் கமிஷன் சொன்னதைக்கூட நிறைவேற்றவில்லையென்று. மெக்கானைஸ்ட் பார்ம்ஸ், நிறைய பணம் செலவு செய்து உற்பத்தியைப் பெருக்குவதற்கு வேண்டிய சாதனைகளைச் செய்து, நல்ல விதத்தில் மானேஜ்மெண்ட் செய்யப்படுகிற பார்மிஸ்க்கு விலக்கு அளிக்க வேண்டு மென்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அந்தமாதிரி விலக்கை நாம் அளிக்கவில்லை. ஏன் அப்படி விலக்கு அளிக்கவேண்டுமென்பதற்கு காரணம் சொல்லியிருக்கிறார்கள். திட்டக் கமிஷன் ரிப்போர்ட்டில் அப்பேர்ப்பட்ட பெரிய பண்ணைகளை சிறிது சிறிதாகப் பிரித்துவிட்டால் அதனால் உற்பத்தி பாதிக்கப்படாலாமோ என்ற சந்தேகம், அதனால் "வெல் மானேஜ்ட் பார்ம்ஸ்" க்கு விலக்கு அளிக்க வேண்டுமென்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அது தவிர நாம் விலக்கு அளிப்பதாக சொல்லப்பட்டிருப்பதெல்லாம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சொல்லப்பட்டவை. இதையும் சர்க்கார் ஆலோசிக்க வேண்டும். செலக்ட் கமிட்டியில் இதுபற்றி விவாதம் வந்தபோது ஒரு சிலருக்கு சாதகமாகச் செய்ததாக சர்க்கார் பேரில் குறை ஏற்படும் என்று சொல்லி அந்த விதியை எடுத்துவிட்டார்கள். "வெல் மானேஜ்ட் பார்ம்ஸ்"க்கு விலக்கு கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டார்கள். ஆனால் இன்று விலக்கு அளித்ததுபற்றி குறை கூறாமல் யாராவது இருக்கிறார்களா ? அதைப்பற்றி பிரசாரம் செய்யாமல் யாராவது இருப்பார்களா ? பிறர் நம்மை நிர்ப்பந்தப்படுத்தி அல்லது மறியல் செய்து அல்லது வெளிநடப்பு செய்து நம்மை நிர்ப்பந்தம் செய்தால் அதன் காரணமாக நியாயம் செய்வதில் நாம் தவற முடியுமா ? நாம் நடுநிலைமையாக நடந்துகொள்ளக்கூடிய முறையில் இந்தச் சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறோம்.

அதே நேரத்தில் நிலத்திற்கு மட்டும் உச்ச வரம்பு ஏற்படுத்திவிடுவதினால் மட்டும் இந்த நாட்டிலுள்ள மக்கள் எல்லோருக்கும் ஸோஷியல் எக்னாமிக் ஸ்டாட்டஸ் வந்துவிடாது. எல்லா இடங்களிலும் இதேபோன்றுள்ள நிலைமை வரவேண்டும். இன்றைக்கு சாகுபடி செய்யக்கூடியவர்கள்கூட, இன்னும் மற்ற இனங்களில் ஈடுபடக்கூடிய வழியில் ஏற்பாடுகளை அரசாங்கம் செய்து கொடுக்க வேண்டும். அதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

அப்படி செய்யாவிட்டால் "**wider social economic outlook**" என்பது நிறைவேருது. இன்னொரு விஷயத்தையும் சொல்ல விரும்பு கிறேன். இன்றைக்கு நாம் நிலச்சுவாந்தார்கள், நிலப்பிரபுக்கள், மிராசு தார்கள் என்பவர்களையெல்லாம் அனேகமாகக் குறைத்து அவர்களுக்கு இருந்த வசதிகளை எல்லாம் குறைத்திருக்கிறோம். அதே சமயத்தில் சாகுபடியாளர்களுக்கு ஐந்து ஏக்கர் இருக்கவேண்டும் என்பதையும் சொல்லியிருக்கிறோம். நான் சொல்லுவதை தவருக எடுத்துக்கொள்ளக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு இந்தச் சட்டத்தின் எட்டாவது அத்தியாயத்தின் மூலம் நிலச்சுவான்தாரர்களுக்கு சர்க்கார் தான் டெனன்ட்டாகியிருக்கிருர்கள். இம்மாதிரி சட்டம் எந்த மாநிலத்தி லும் கிடையாது. இதனுல் நிலச் சொந்தக்காரர்களுக்கு இருக்கின்ற லாபம் என்னவென்றுல், எந்த நேரத்திலும் குறிப்பிட்ட நேரத்தில் நிச்சயமாக சர்க்காரிடமிருந்து குத்தகை கிடைக்கும். முன்னுல் குத்தகை எடுத்துக் கொண்டிருந்தவன் குத்தகை கொடுக்காமல் மலேயாவுக்கோ அல்லது வேறு எங்காவது போய்விடக்கூடும். குத்தகை வசூலாகாது. டெனன்ட் இன்ஸால்வென்டாகிவிடலாம். ஆனுல் இப்போது யார் எங்கு போனுலும் நிலச்சுவான்தார்களுக்கு சர்க்காரிலிருந்து நிச்சயமாக குத்தகை கிடைக்கும். இதன் மூலம் சர்க்கார் கஜானுதான் பாதிக்கும். மற்ற மாநிலங்களில் எல்லாம் இம்மாதிரியான ப்ரொவிஷன்ஸ் கிடையாது.

இன்னொரு சிறிய விஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். நிலச் சுவான்தார்கள் எல்லாம் எவ்வளவோ கொடுமை செய்கிருர்கள் என்றெல் லாம் இங்கு பலர் சொன்னுர்கள். கல்யாணம் வருகிறது என்று சொன்னுல் முன் பணமாக 100 ரூபாய் கொடுத்து பின்னுல் மொய் பணத்திலிருந்து எடுத்துக்கொள்வார்கள் நிலச்சொந்தக்காரர்கள், அல்லது மிராசுதார்கள், அல்லது நிலச்சுவான்தார்கள். பிரசவம் என்று சொன்னுல் ஐந்து, பத்து முன்பணமாகவோ இனுமாகவோ கொடுப்பார்கள். வியாதி வந்துவிட்டது என்று சொன்னுல் அதற்குரிய வசதியைச் செய்து கொடுப்பார்கள். இனு மாகக் கூட பல வசதிகளை செய்து கொடுப்பார்கள். இவ்விதம் பல உதவி களை செய்து கொடுக்கக் கூடிய நிலச்சுவான்தார்கள் அல்லது மிராசுதார் கள் எவ்வளவோ பேர்கள் இருக்கிருர்கள். எல்லோரும் கொடுமை செய் கின்றுர்கள் என்று சொல்லிவிட முடியாது. பத்தாயிரம் பேர்கள் இருக் கிருர்கள் என்றுல் அதில் 100 பேர்களோ அல்லது 50 பேர்களோதான் கொடுமை செய்யக்கூடியவர்களாக இருக்கலாம். இவ்விதம் இருக்கவே மாட்டார்கள் என்று நான் சொல்ல வரவில்லை. "குட்டி குலேத்து தாயின் தலேயில் வைத்தது" போல் நாலேந்து பேர்கள் செய்யக்கூடியது எல்லோ ருக்கும் என்று பொதுவாக ஆகிவிடுகிறது. அவர்களை எல்லாம் கட்டுப் படுத்தக்கூடிய வகையில் இன்றைய காங்கிரஸ் அரசாங்கம் பல சட்டங்களைக் கொண்டுவந்திருக்கிறது. இன்றைக்குக் கொண்டுவந்திருக்கின்ற சட்டத்தின் மூலம் சர்க்கார்தான் இனிமேல் சாகுபடியாளருக்கு இதுவரை கிடைத்துக் கொண்டிருந்த சலுகைகளை எல்லாம் கொடுக்க வேண்டும். சாகுபடி யாளர்களுக்குக் கிடைத்து வந்த கடன் வசதி, மற்றபடியுள்ள எல்லா வசதி களேயும் அவ்வப்போது சர்க்கார் செய்து கொடுக்க வேண்டும். இவ்வருஷம் பணமுடையானுல் அடுத்த வருஷம் குத்தகையை வாங்குவார்கள். இது வரை மிராசுதார்கள் அல்லது நிலச்சுவான்தார்கள் கொடுத்துவந்த முன் பண வசதி சர்க்காரால் கொடுக்க முடியுமா ? வட்டியில்லாமல் கொடுத்துவந்த வசதி இனிமேல் சர்க்காரால் கொடுக்க முடியுமா ? என் பதை எல்லாம் அரசாங்கம் நன்றுக ஆலோசித்து சாகுபடியாளர்களுக்கு அவ்வப்போது வேண்டிய சலுகைகளை கொடுக்க முன் வர வேண்டும். அதே சமயத்தில் உணவு உற்பத்தியைப் பாதிக்காமல் உணவு உற்பத்தி பெருகவேண்டும் என்கின்ற நோக்கத்துடன் குடிகளுக்கு தேவையான கடன் வசதிகள், அவர்களுக்கு கிடைக்க வேண்டிய ஸப்ஸிடி ஏராளமாக கொடுக்க வேண்டிய ஏற்பாடுகள், இவைகளை எல்லாம் வழங்கி நம்முடைய குறிக்கோளை நிறைவேற்றுவதற்கு சர்க்கார் ஈடுபட வேண்டும் என்று கேட் டுக்கொள்கிறேன். இல்லேயென்றுல் இந்தப் பிள்ளைகள், இந்த சாகுபடி யாளர்கள் மாற்றுந்தாய்ப் பிள்ளைகளைப்போல் ஆகிவிடுவார்கள். மிராசு

தாரர்களிடமிருந்து இனிமேல் இவர்களுக்கு எந்தவிதமான சலுகையும் கிடைக்கப்போவதில்லை. இனிமேல் சர்க்கார் தான் இவர்களுடைய நிலச் சுவான்தார்கள். அதை மனதில் வைத்துக்கொண்டு அவர்களுக்கு எந்த எந்த சமயத்தில் என்னென்ன வசதிகள் தேவையோ அவைகளையெல்லாம் கொடுக்க வேண்டும். இனிமேல் இன்டர்மீடியரி என்று இருந்துவந்தது எல்லாம் போய்விடும். ஆகவே சாகுபடியாளர்களுக்குக் கிடைத்துவந்த எல்லா சலுகைகளும் கிடைக்க வழிவகை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்.

இன்னொரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். நஷ்ட ஈடு கொடுப் பது சம்பந்தமாக நான் சில திருத்தங்கள் கொண்டுவந்திருந்தேன். இவைகளை எல்லாம் ரூல்ஸில் போட்டுக்கொள்ளலாம் என்று எண்ணியிருக் கிறார்கள் என்று நினைக்கிறேன். இது சம்பந்தமாக திட்டகமிஷனின் கொள்கை என்ன என்பதைப் பற்றி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டப் புத்த கத்தில் 221 முதல் 227-வது வரையில் பக்கத்திலுள்ள கருத்துக்களைப் பார்க்க வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன், தங்கள் மூலமாக. நஷ்டஈடு கொடுக்கும்போது நம்முடைய பொதுப் பணத்திலிருந்து கொடுத்தபோதிலும், பொது வரிப்பணத்திலிருந்து கொடுத்தபோதிலும், பொது வரும்படியிலிருந்து கொடுத்த போதிலும், (அதாவது 30 ஏக்கருக்கு மேற்பட்டு இருக்கக்கூடிய நிலங்களை எடுக்கும்போது சர்க்கார் அதற்கு நஷ்ட ஈடு கொடுக்கும்போது) நான் சொன்னபடி நஷ்டஈடு கொடுத்து நிலங்களை எடுத்து பிறருக்கு கொடுத்துவிட்டால், பொதுப் பணத்திலிருந்து எடுத்த பணம் நமக்குத் திரும்பி வருவது எப்படி? அதற்கு வழி இந்தத் திட்டக் கமிஷனின் அறிவிப்பில் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் நிலங்களை நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து நஷ்டஈடு கொடுத்து வாங்கி குடியானவர்களுக்கு கொடுக்கும்போது அவர்களிடமிருந்து ஷெ நஷ்டஈட்டுப் பணம் திரும்ப வசூல் செய்யவேண்டும். ஏற்கனவே எஸ்டேட் அபாலிஷன் ஆக்ட் கொண்டுவந்து அதன்படி கொடுக்க வேண்டிய நஷ்டஈடு எல்லாம் இன்னும் சரியான முறையில் கிடைக்கவில்லை என்று ஒரு பக்கம் எஸ்டேட் சொந்தக்காரர்கள் எல்லாம் கதறிக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் பொதுப் பணத்திலிருந்து பணத்தை எடுத்து நஷ்டஈடு கொடுத்து நிலச்சொந்தக் காரர்களிடமிருந்து நிலங்களை எடுத்து குடியானவர்களுக்கு இனாமாகக் கொடுப்பது **Rob Peter to pay Paul** என்பது மாதிரி ஆகிவிடும். குடியானவர்களிடம் ஒப்படைக்கும்போது கொஞ்சம் பணமாவது குடியான வர்கள் கொடுத்தால் தான் அவர்களுக்கும் அதில் உற்சாகமாக ஈடுபட்டு, உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு ஒரு வழியாக இருக்கும். இது ஒரு முக்கியமான விஷயம். இன்றைக்கு ஏராளமான வீடுகள் கட்டி ஏழைகளுக்கு இனாமாக கொடுத்தும்கூட, ஒரு ஓடு அதில் உடைந்துபோய் விட்டால், இன்ஜினியர் வந்து பழுது பார்க்கட்டும் என்று சொல்லுகிறார்கள். வாசலில் மெழுக வேண்டும் என்று சொன்னால் அவர்கள் செய்வதில்லை. வீட்டில் ஒரு சிறிய பாகம் விழுந்துவிட்டது என்று சொன்னால், அதில் மண் வைத்து சற்று அடைத்தால் போதும்—அதைக்கூட செய்ய மறுக்கிறார்கள். இந்த நிலைமையில் குடியானவர்களிடம் இனாமாக நிலத்தைக் கொடுப்பதை விட, அவர்களிடம் நிலத்தைக் கொடுத்துவிட்டு, சிறிது சிறிதாக, 100-க்கு 2½ வீதம் 15 அல்லது 20 வருஷங்களில் வசூல் செய்ய வழிவகை செய்ய வேண்டும். மற்ற மாநிலங்களிலுள்ள சட்டத்தைப் பார்த்தால் இவ்விதம் வழிவகை செய்திருக்கிறார்கள். இதன் மூலம் இவர்களை நிலத்திற்கும் சொந்தக்காரர்களாக்கிவிடலாம். (மணியடிக்கப் பட்டது.) இன்னும் இரண்டு நிமிடங்களில் முடித்துவிடுகிறேன். நாம் இப்போது செய்திருக்கிற சட்டத்தின்படி ஐந்து ஏக்கர் கொடுக்க வேண்டும் என்று நிர்ணயித்திருக்கிறோம். இதைக் கொடுக்கும் போது அவர்களிடம் ஒரு கண்டிஷன் போட்டு நான் முன்னால் சொன்ன பிரகாரம் சிறிய சிறிய அளவில் பணத்தைத் தருவதற்கு சம்மதித்தால் அவர்களுக்கு உடனேயே சொந்தக்காரர் என்று பட்டாவும் போட்டுக் கொடுத்துவிடலாம். அவர்கள் பணம் கட்டத் தவறினால் பட்டாவை ரத்து செய்வதற்கும் கண்டிஷன் இருக்கவேண்டும். இங்கே பேசினவர்களில் பலர் இங்கிருந்து வெளி நடப்பு

செய்தவர்கள்கூட, குடியானவர்கள் எல்லாம் சொந்தக்காரர்களாக்கப்பட வேண்டும். இவர்களெல்லாம் சொந்தக்காரர்களாக்கப்படவில்லையே என்ற கவலையைத் தெரிவித்தார்கள். இப்போதுள்ள முறைப்படி பிறரிடம் நஷ்ட ஈடு கொடுத்து வாங்கிவிட்டு குடியானவர்களிடம் இனமாகக் கொடுத்துவிடுகின்ற நிலைதான் ஏற்படுகிறது. இதில் ஒரு நல்ல நிலைமையைக் கொண்டு வர, நான் முன்னால் சொன்னபடி உடனடியாக ஒரு பகுதியை அவர்களிடமிருந்து வசூல் செய்து பிறகு பாக்கியைப் பல தவணைகளாக வசூல் செய்தால், அவர்களிடமிருந்து 60—40 முறைப்படி குத்தகையும் வாங்கக் கூடிய நிலைமையும் மாறிவிடுகிறது. அதற்குரிய நல்ல வழி திட்டக் கமிஷனும் சொல்லி இருக்கிறது. கிரௌன்ட் கிரான்ட்ஸ் ஆக்ட் பிரகாரம் இன்னின்ன முறையில் நிலம் அடமானம்செய்து கண்டிஷன் ஏற்படுத்தலாம் என்றிருக்கிறது. போர்ட் ஸ்டான்டிங் ஆர்டர்ஸ் பிரகாரம் வேண்டிய விதிகளை செய்துகொள்ளலாம், அதற்கும் வழி வகை இருக்கிறது. இந்த முறையில் குடியானவர்களை நிலச்சொந்தக்காரர்களாக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். . . .

DEPUTY SPEAKER: The hon. Member has taken more time. He should try to finish his speech soon because many more Members have expressed their desire to take part in the discussion.

SRI R. SRINIVASA IYER: இதைத் தவிர ஆதரைஸ்ட் ஆபீஸர், லான்ட்போர்ட், இவைகளை எல்லாம் போட்டிருக்கிறோம். இவைகளை எல்லாம் சரியான சமயத்தில் சீக்கிரமாக நியமித்து சட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: I fix a time-limit of 10 minutes for each hon. Member.

SRI D. S. AUTHIMOOLAM: I request that the time-limit may be raised to 15 minutes.

DEPUTY SPEAKER: I am sorry, it is not possible because I have got in my list the names of about dozen Members who wish to speak.

SRI G. NARAYANASWAMY NAIDU: அன்பு மிக்க உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தை வரவேற்றும், இந்தச் சட்டம் கொண்டுவர வேண்டிய போராட்டங்களை வெகு நீண்ட காலமாக நடத்தி வந்த தஞ்சை ஜில்லா விவசாயிகளைப் பாராட்டியும் ஒரு சில வார்த்தைகள் சொல்ல வேண்டுமென ஆசைப்படுகிறேன். எனக்கு முன் பாகப் பேசிய சர்க்கார் கொறடா அவர்கள் இந்தச் சட்டங்களுக்கெல்லாம் —தொந்திரவுகளுக்கெல்லாம்—காரணம் தஞ்சை ஜில்லாதான் என்று தெரிவித்தார்கள். தஞ்சை ஜில்லாவிற்கு நிச்சயமாக அந்தச் சிறப்பு உண்டு. அதற்குக் காரணம் பண்ணை முறை என்பது தஞ்சை ஜில்லாவில்தான் பிறந்தது, வளர்ந்தது எல்லாம். அந்த ஜில்லாவிற்குப் பல்வேறு காலங்களில் பல்வேறு சிறப்புகளெல்லாம் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. "சோறுடைத்து சோழவள நாடு", "தண்ணீரும் காவிரியே, தார்வேந்தனும் சோழனே" என்று இந்த நாட்டைப் பற்றியும் அதில் வாழக்கூடியவர்களைப் பற்றியும் பாராட்டிப் பேசியிருப்பதை நாம் கேட்டிருக்கிறோம். அதைப்போலவே பிற்காலத்தவரும் பாராட்டியிருக்கிறார்கள். இவைகள் எல்லாவற்றையும் விட சமீப காலத்திய பாராட்டுக்களில், தஞ்சை ஜில்லாவிற்கு மாத்திரம் நமது மாநில சர்க்கார் தனியாகச் சட்டம் செய்து அதற்குப் பெருமை அளித்திருக்கிறார்கள். அங்கே அந்த பூமியைப் பற்றி நம்முடைய பெரியவர்கள் வர்ணிக்கும்போது "காவிரியெல்லாம் தீர்த்தங்கள், மண்ணெல்லாம் வெண்ணீறு" என்று சொல்லியிருக்கிறார்கள். தஞ்சை ஜில்லாவிலே திரும்பிப் பார்க்குமிடமெல்லாம்

கோவில்கள் ; இல்லாவிட்டால் கோபுரங்கள். அதுவும் இல்லாவிட்டால் ஊர் எல்லையில் ஆல மரத்தடியில் வீரன் சிலை இருக்கும் ; இல்லாவிட்டால் மரத்தில் முனீஸ்வரன் ஏறிக்கொண்டிருக்கும். எந்தப் பக்கம் திரும்பினாலும் இந்த மாதிரி கோவில்கள் ஏராளமாக உண்டு. அதோடு ஔவையின் வாக்கியம் "கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது. இப்படி எங்கு பார்த்தாலும கோவில்கள், குளங்கள். பெரும்பாலான சொத்துக்கள் யாவும் பெரிய மிராசுதாரர்களுக்குச் சொந்தம், இல்லாவிட்டால் கோவிலுக்குச் சொந்தம். சின்ன குடியானவர்களுக்கும், சேரியில் இருப்பவர்களுக்கும் நிலம் இதெல்லாம் கிடையாது. இடறி விழுந்த இடமெல்லாம் சத்திரம், சாவடி, தண்ணீர்ப் பந்தல் இவைகளெல்லாம் நிறைய உண்டு. இதெல்லாம், யாருக்கு. தர்மவான் என்று பெயர் வாங்கவேண்டுமென்று தோன்றுகிறதோ அவர்கள் வைப்பது. தண்ணீர்ப் பந்தல் என்று வைத்து, வருஷத்தில் ஒரு மாதத்தில் தண்ணீர் ஊற்றி—அதுவும் பச்சைத் தண்ணீர் ஊற்றி—தர்மவான் என்று பெயர் வாங்கப் பயன்படுத்தப்படுவது. அப்புறம் அன்னதானம், அப்பன் செத்துப்போனால் கோதானம், பூதானம் இதெல்லாம் மேல் தட்டில் உள்ளவர்களுக்குக் கொடுப்பது. உழவர்களுக்கு யாரும் எதுவும் செய்வதில்லை. அவர்களுக்குத் தலைமுறை தலைமுறையாக சிரஞ்சீவிச் சம்பளம் கொடுத்து வந்தார்கள், இரண்டு படி நெல்—பட்டணம் படி ஒரு படி நெல். இன்னொரு படி அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்தபோது ஏகப்பட்ட எதிர்ப்புகள், கடுமையான தாக்குதல்கள் எல்லாம் ஏற்பட்டன. அதோடுகூட சில பெரியார்கள் காரைக்காலுக்குப் போய் அங்குள்ள அச்சகத்தில் இந்த இயக்கத்தைப் பற்றியும், கூலி உயர்வு பற்றியும் நோட்டீஸ்கள், வால் போஸ்டர்கள் எல்லாம் போட்டு அத்தனையையும் குளங்கள் மற்ற இடங்களிலெல்லாம் ஒட்டி, ஈட்டிக் கோலுடன் ஆட்களை நிறுத்தி பயமுறுத்தி, கூட்டங்களில் கலகத்தைச் செய்வதற்காக குடிகாரர்கள் சில பேர்கள் எல்லாம் வைத்து எப்படியாவது நிலத்தைக் காப்பாற்றி விடவேண்டுமென்று, நூற்றுக்கு இரண்டு பேர்கள் என்று ஸ்ரீமான் சீனிவாச ஐயர் அவர்கள் கூட தெரிவித்தார்களே, இந்த இரண்டு பேர்கள் செய்த கோளாறுதான் இந்த கட்டத்திற்குக் கொண்டு வந்தது. மொத்தத்தில் நூற்றுக்கு 99 பேர்கள் பண்ணை முறையை அனுஷ்டித்தார்கள். மேல்துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு, பந்தல்காலைக் கட்டிக்கொண்டு அடிமையாக நிற்கவேண்டும். அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய அந்த நெல் எப்படிப்பட்ட நெல்லாக இருக்கவேண்டும் என்று கண்டிஷன் கிடையாது—எந்த நெல்லைக் கொடுத்தாலும் வாங்கிக்கொள்ள வேண்டும். அவர்கள் இருக்கக்கூடிய வீட்டை எப்போது வேண்டுமானாலும் பிரிப்பார்கள். கணவன் முன்னிலையில் மனைவியை அடிப்பார்கள், தந்தை முன்னிலையில் தனயனை அடிப்பார்கள். இதெல்லாம் பாரம்பரியமாக வந்த வழக்கங்களாக இருக்கின்றன. பாக்கி உயர்வுகள் எவ்வளவுக்கெவ்வளவு இருந்தாலும் இந்த அடிமைப் பண்ணையைத் திட்ட வட்டமாக, அழகாக, வளர்த்த இடம் தஞ்சை ஜில்லா. புறம்போக்கு நிலங்களுக்குக்கூட அந்த ஜில்லாவிற்கு தனிச் சட்டம்—டாஞ்சூர் கஸ்டமரி ரைட்ஸ் என்று சொல்வார்கள். புறம்போக்கு நிலங்கள் கூட பட்டாக்காரர்களுக்குச் சொந்தமே தவிர, ஆயிரமாயிரம் வருஷங்களாக வாழ்ந்தவர்களுக்குக் கிடையாது. இதைப் பற்றி சண்டை ஆரம்பித்து, இந்த சட்டப் புத்தகத்தில் மாயவரம் ஒப்பந்தம் ஒன்றையும் புகுத்தி, உழவன் முதல் அடி வெற்றி நடை போட்டபோது, 40 வாரம் வந்தபோது, பிறகு 60 வாரம் வந்தபோது அப்போது வாக்-அவுட் கிடையாது, கோஷங்கள் கிடையாது, பிரசங்கங்கள் கிடையாது. இந்தச் சட்டத்தை ஒரு வருஷத்திற்கு முன் அல்லது இரண்டு வருஷத்திற்கு முன் கொண்டு வந்திருந்தாலும் இந்த தொந்திரவு ஏற்பட்டிருக்காது. வெளியேறிய அவர்களும் நம் பிரசங்கத்தைக் கேட்டுப்போயிருப்பார்கள். இப்போது எலெக்ஷன் சமீபத்தில் வருவதன் காரணமாக இதையெல்லாம் செய்து தீரவேண்டிய கட்டாயத்திற்கு அவர்கள் வந்து விட்டார்கள். உள்ளுக்குள்ளே அவர்களுக்கும் இது சந்தோஷமாகத்தான் இருக்கும். மைனாரிடி சொல்வதை மெஜாரிடி கேட்க வேண்டும் என்று உலகத்தில் எந்த இடத்திலும் இவ்விதம் இருப்பதாகச் சொல்ல முடியாது. வேறு எங்கும் அந்த மாதிரி இல்லாவிட்டாலும்

நம் நாட்டைப் பொறுத்த வரையிலுமாவது மைனாரிடி சொன்னதை மெஜாரிடி கேட்கவேண்டும் என்று சொன்னால் அதற்கு ஜனநாயகம் என்ற பெயர் இருக்க முடியாது. 30 ஏக்கரை 20 ஏக்கர் என்றோ, அல்லது 10 ஏக்கர் என்றோ, ஏன் 5 ஏக்கர் என்றோ போட்டிருந்தாலும்கூட, $2\frac{1}{2}$ ஏக்கர் என்று சொல்லக்கூடியவர்கள் இருப்பார்கள். பாரம்பரியமாக ஆண்டு வந்த இந்த உரிமையை நீக்கி, தங்கள் பரம்பரைக்குத்தான் சொந்தம் என்ற உரிமையை நீக்கி, மகன், பௌத்திரன், தௌஹித்திரன் என்று இருப்பதையெல்லாம் தடுத்து, இவ்வளவு தான் வைத்துக்கொள்ள லாம் என்ற முறை வகுத்திருப்பதே மகத்தான, அமைதியான, பலமான, வேறு எங்கும் காண முடியாத புரட்சி என்பது எனது திடமான, பலமான அபிப்பிராயம். இத்தகைய புரட்சியை மிராசுதாரர்களும் ஏற்றுக்கொண்டிருக் கிறார்கள், விவசாயிகளும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். இதற்கு மூல காரணம் 40 வருஷங்களுக்கு முன்பு தெருவெல்லாம் முழக்கம் கேட்டது எல்லோருக்கும் தெரியும். " எல்லோரும் ஒன்றென்னும் காலம் வந்ததே, பொய்யும் ஏமாற்றமும் தொலையும் காலம் வந்ததே" என்றும், " உழ வுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம், வீணில் உண்டு களித் திருப்போரை நிந்தனை செய்வோம்" என்று பாட்டுப் பாடினார்கள். " வாழ்ந் தால் 30 கோடி மக்களும் வாழ வேண்டும், வீழ்ந்தால் 30 கோடி முழு வதும் வீழ வேண்டும்" என்ற கோஷத்தைக் கேட்டோம். அதன் காரண மாக படிப்படியாக எல்லோருக்கும் ஓட்டு உரிமை அளிக்கப்பட்ட பிறகு, இதர கட்சிகள் மக்களுடைய சலுகையைப் பெற, இந்த மாதிரி பேச வேண்டிய ஒரு நிர்ப்பந்தத்திற்கு நாம் கொண்டு வந்திருக்கிறோம் என் பதை மறந்துவிடக் கூடாது. அவர்களுக்கு ஓட்டுரிமை கொடுக்கும் வரை யில் அவர்களுக்குக் கூலி அதிகமாகக் கொடுக்கவேண்டும், நிலத்தில் உரிமை கொடுக்கவேண்டும். அவர்களும் மனிதர்களாக நடத்தப்படவேண்டும் என்று பாடுபட்ட காலத்தில் பாக்கி யாரும் அந்தப் பக்கம் போனது இல்லை.

நாங்கள் தான் உங்களுக்குப் பாடுபடுகிறோம், நாங்கள் தான் உங்களுக் காக சட்ட சபையிலிருந்து வெளி நடந்தோம், ஆகவேதான் அரசாங்கத் திலிருப்பவர்கள் இதையாவது செய்தார்கள் என்று எங்கு பார்த்தாலும் சொல்லிக்கொள்ளப்போகிறார்கள். சரித்திரத்தை உண்டாக்கிய காலம் முன் னிட்டு வாங்கியவர்கள் இன்று வெளியில் போன பேர்களைவிட முன்னடி எடுத்து வைத்தது நாங்கள்தான் என்று தெரிவிக்க வேண்டியதாக இருக் கிறது. எது எப்படி இருந்தாலும்கூட நம்முடைய பிரதான லட்சியம் நிச்சயமாக உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்பது. இதே சட்ட சபையிலே சென்ற காலத்தில் ஒரு சட்டத்தை நிறைவேற்றியபோது ஒரு கேள்வி எழுந்தது. இந்த நிலத்தை மாடு இல்லாமல், கலப்பை இல்லா மல் கடன் வாங்குவதற்கு வசதி இல்லாமல் இருக்கக்கூடியவர்கள் கையில் கொடுத்தால் எப்படி இந்த நிலம் சாகுபடி ஆகும், உணவு உற்பத்தி எப்படி பெருகும் என்ற விவாதம் வந்தபோது, நிலத்தை அவர் களுக்குச் சொந்தம் என்று ஒப்படைத்து விடுங்கள், அவர்கள் கையா லேயோ அல்லது பல்லினாலேயோ சாகுபடி செய்து இப்போது சாகுபடி செய்யும் அளவை விட சாகுபடி செய்வார்கள் என்று சொன்னபோது பரிகாசம் செய்தார்கள். ஆனால் நிச்சயமாக விளைவு ஒன்றும் கெட்டுப் போகவில்லை. 1952-லிருந்து இன்று வரையில் இரண்டு திட்டங்கள் முடிந்து மூன்றாவது திட்டத்தை ஆரம்பித்திருக்கிற நாம், பாக்கி எல்லா இடங்களை விட எந்த இடத்தில் உழவர்கள் கையில் நிலமானது ஒப்படைக்கப்பட்டிருக் கிறதோ அந்த இடங்களில் முன் கூட்டியே நமது திட்ட லட்சியம் நிறை வேறியிருக்கிறது என்பதைச் சந்தோஷத்துடன் சொல்லிக்கொள்கிறேன். இன்னும் உழவர்கள் கையில் நிலம் போன பிறகு இந்த 30 ஏக்கரையும் குறைக்க இன்னும் அதிகமான இடம் இருக்கிறது என்பது எனது அபிப் பிராயம்.

(Sri N. S. Ramalingam in the Chair.)

ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று சொல்லக்கூடியதன் விளக்கம் இன்றோடு முடிந்தது அல்ல. இந்த சட்ட சபையே இவ்வளவு தீவிரமாகச் செய்திருக் கும்போது, இதற்கு அடுத்தபடியாக வரக்கூடிய சட்ட சபை இன்னும்

29th September 1961] [Sri G. Narayanaswamy Naidu]

கொஞ்சம் தீவிரமாகத்தான் இருக்கும். 40 வாரம் என்பது எந்தப்படிக்கு நிற்காமல், 60 வாரம் என்பது எந்தப்படிக்கு நிற்காமல் உச்ச வரம்புக்கு வந்ததோ அந்த மாதிரி அடுத்த சட்ட சபையிலேகூட இதையெல்லாம் மாற்றும் நிலைமை அப்போது இருக்கிற கால தேச வர்த்தமானத்தை யொட்டி ஏற்படும் என்று நம்புகிறேன். இதைவிட ஒரு நல்ல சட்டம், பலமான சட்டம், புரட்சிகரமான சட்டம் எந்தச் சட்ட சபையிலும், உலகம் தோன்றிய காலத்திலிருந்து நிறைவேற்றப்படவில்லை என்று சரித்திரம் அறிந்தவர்கள் ஒப்புக்கொள்வார்கள். கொஞ்சம் கொஞ்சமாக, கலகம் ஏதுமில்லாமல், துப்பாக்கிப் பிரயோகம் ஏதும் இல்லாமல், இரண்டு தரப் பினரும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்—மிராசுதாரர்களும் ஏற்றுக்கொண் டிருக்கிறார்கள், விவசாயிகளும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்—அரசாங்கமும் இதை நடத்தியிருக்கிறது என்பது பாராட்டுக்குரிய விஷயம் என்று தெரிவித் துக்கொள்கிறேன். அடுத்தபடியாக, இந்த மணைக்கட்டுப் பிரச்னை மிகவும் கடுமையாக இருந்தது. அதை ஓரளவு நல்ல முறையிலே அமைத்திருக் கிறார்கள். இனி வரப்போகிற கோயில், மடங்கள் தேவைக்குப்போக பாக்கி நிலங்களை, அதுகூட 10 ஏக்கர் என்று அல்லாமல் இன்னும் குறைத்துக் கொடுத்தால், உழவர்கள் நல்ல முறையிலே வாழக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும். அதோடு கொடுக்கக்கூடிய அலவன்சை மாதா மாதம் சர்க்கார் கொடுத்துவிட வேண்டும். வருஷாந்திரமாகக் கொடுத் தால்தான், அதனால் பல தவறுகள் எல்லாம் ஏற்படுகின்றன. அந்தத் தவறுகளை மறைப்பதற்காக அனாவசியமான செலவுகளையெல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே மாதா மாதம் கொடுத்து வந்தால், நிச்சய மாக அவர்கள் நல்ல முறையிலே நிரந்தரமாக வாழ்க்கையை அமைத்துக் கொள்ளக்கூடிய நிலைமை ஏற்படும். அதோடு இந்த சிறுநிலச்சுவான் தார்களுக்கு எல்லாம் விலக்களிக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது. இதிலே யாருக்கும் ஆட்சேபணையில்லை. நீதி ஸ்தலங்களிலே தர்ம சங்கடமான நிலை என்று சொல்வார்கள். அந்த தர்ம சங்கடத்திலேதான் நாம் இப்போது அகப்பட்டுக்கொண்டிருக்கிறோம். அவர்களிடம் நிலம் எடுத்தால் நடைமுறையிலே சங்கடங்கள் தான் ஏற்படும். அப்போது அவ ருடைய வாழ்க்கைக்கு தேவையான பொருளாதார வசதியும் இருக்காது. ஆகவே இன்றைய தினம் அவசரமாக அப்படிப்பட்டவர்களை 2, 3 வருஷங் களுக்கு இருந்து கிளப்பாமல், இனி உபரியாகக் கிடைக்கக் கூடிய நிலத்தைக் கொடுத்தால், அப்போது எந்த விதத்திலும் சிறுசிறு மிராசுதாரர்களும் பாதிக்கப்பட மாட்டார்கள். உழவர்கள் பக்கத்திலேயும் எவ்விதமான ஆட் சேபணையும் இருக்க முடியாது. இதைச் சர்க்காரும் ஏற்றுக்கொள்வார் கள் என்று நம்புகிறேன்.

11-30 a.m.

அதோடு ரொம்ப பேருக்கு நிலமில்லை. நிலம் எப்போதும் கொடுக்க முடியாது. இதிலே எதிர் தரப்பினர், அப்படி நிலம் இல்லாதவர்களிடம் போய் ஒன்று சொல்வார்கள். அதோ பார்த்தீர்களா, நிலம் கொடுத்தார் கள். உங்களுக்கு நிலம் கொடுக்க வேண்டுமென்றுதான் நாங்கள் முயற்சி எடுத்துக்கொண்டோம். ஆனால் கொடுக்கவில்லையென்று சொல்லி, அவர் களுடைய பலத்தை ஏற்றுக்கொள்ளத்தான் இந்த நாடகங்கள் நடத்தப் படுகின்றன. ஆகவே இந்த தினக் கூலியை, அதாவது 4 ஏக்கர் சாகுபடி செய்தால் அதற்கு ஈடான வருமானத்தை தினக்கூலியாக ஏற்படுத்து வதற்கு சட்டத்தை நிறைவேற்றி விடுவார்களானால், இந்த நிலத்தில் ஏற்பட்டிருக்கிற பற்றுதலே கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துவிடும். நீங்கள் கொடுத்திருக்கக்கூடிய 30 ஸ்டான்டர்ட் ஏக்கரா நிலம்கூட ரொம்ப காலத்திற்கு அவர்களிடம் இருக்காது. அவர்களே விட்டுப்போகக்கூடிய நிலைமை வரக்கூடிய காலம் சமீபித்து வருகிறது. நாளாவட்டத்தில் அவர் களே பெருவாரியான நிலத்தை விலைக்கு விற்று விடுவார்கள். நம்முடைய கனரகத் தொழில்கள் இன்னும் பலப்படுத்தப்பட்டு, சிறு தொழில்கள் அதன்மூலம் ஏராளமாக ஏற்படக்கூடிய வசதி ஏற்பட்டால், அதிலும் குறிப்பாக நெய்வேலி பழுப்பு நிலக்கரி சுரங்கம் தன் வேலையை ஆரம்பித்து விட்டால், விவசாயத்திலே வேலை செய்கிறவர்கள் ஒன்றுக்கு ஐந்து மடங்கு ஊதியம் பெறக்கூடிய வசதிகள் ஏற்படுமென்று நம்புகிறேன். அதோடு,

இன்று சுகாதாரம் படிக்கக்கூடிய சிறு குழந்தைகள், அதே சமயத்திலே எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசமாக எஸ்.எஸ்.எல்.சி. வரையிலே படிக்க லாம் என்று இருக்கும்போது, அப்படிப் படித்துவிட்டு வந்தபிறகு அவர் கள் அங்கேபோய் சேற்றிலேயும், சகதியிலேயும் உழவுசெய்து சாகுபடி செய் வார்கள் என்று சொல்வதற்கில்லே. அப்படி உழவு செய்வதாகச் சொன் ஞலும், மணிக்கு இவ்வளவு கூலி தரவேண்டும், 8 மணிக்கு மேல் வேலே செய்ய முடியாது, அதுவும் காலே 5 மணிக்கெல்லாம் வேலேக்கு வர வேண்டுமென்று கூப்பிடக்கூடிய நிலேமையெல்லாம் ஏற்படாது. இப்படி யெல்லாம் நிலேமை ஏற்படும்போது, உழத் தெரிந்தவர்கள்தான் நிலத்தை வைத்துக்கொண்டிருப்பார்களே தவிர, நிலப் பிரபுக்கள் என்று சொல்லக் கூடியவர்களே அப்போது இருக்க மாட்டார்கள். இதைத் தான் நண்பர் சீனுவாச அய்யர் அவர்கள்கூட இந்த நிலப்பிரபுக்கள் என்பவர்களே போய் விடுவார்களே என்று சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டார்கள். இந்த நிலப்பிரபுக்கள் என்று சொல்லக்கூடியவர்கள் ரொம்ப காலத்திற்கு முன் ஞலேயே போய்விட்டார்கள். இப்போது மட்டும் புதிதாகப் போய்விடவில்லே. சட்டம் செய்வதால், பழையனக் கழிதலும், புதியனப் புகுதலும் என்று சொல்லக் கூடிய நிலேமை ஏற்படுவதற்குப் பதில், இப்போது நாம் செய்த திலே புதியனப் புகுந்து பழைய நிலேமையை கொஞ்சம் கொஞ்சமாக நீக்கிக்கொண்டு வருகிறது; அந்தக் காலம் சமீபித்துக் கொண்டு வருகிறது. இந்தப் பிரபுக்கள் என்று சொல்லக்கூடிய வார்த்தையை இந்த நிலப் பிரபுக்களேப் பொறுத்தமட்டில் மட்டும் நீக்கி விட்டால் போதாது. மற்றத் துறைகளிலும் நீக்கப்பட்ட வேண்டும். இல்லாவிட்டால், 200 வீடுகள் வைத்துக்கொண்டிருக்கக் கூடியவர், இன்னும் 100 வீடுகள் வாங்கி வைத்துக்கொண்டு, அதிலே பிரபு என்று சொல்லக்கூடிய நிலேமை ஏற்பட்டு விடும். இல்லாவிட்டால், ஒருவரே 90 பஸ்கள் வைத்துக் கொள்ளக்கூடிய நிலேமை ஏற்பட்டு விடும். அதேபோல் ஒரு இரும்புக் கடைக்காரரே பல லேசென்சுகள் வாங்கிக் கொண்டு, அந்தத் துறையிலேதான் பிரபு என்று சொல்லக்கூடிய நிலேமை ஏற்பட்டு விடும். அதேபோல் சிமெண்டுக் கும் ஒருவரே லேசென்ஸ் பெற்றுக்கொண்டு, சொல்லக்கூடிய நிலேமை ஏற்பட்டு விடும். ஆகவே, இந்த ஏகபோக உரிமை என்பதையே நாம் அறவே நீக்கிவிட வேண்டும். அடுத்த சட்டசபை கூடுகிற காலத்திலே, இதை ஆரம்பித்து, அந்தக் காலத்திற்குள் இதையும் நாம் சாதித்து விட்டால் நாம் தேர்தலில் அதற்குப் பிறகு ஜெயித்தாலும் ஜெயிக்காவிட்டாலும் பரவாயில்லே, நம்முடைய கட்சி சரித்திரத்திலே ஒரு பலமான இடத்தைப் பெற்று விடும், அதை யாராலும் மாற்ற முடியாது. சாதாரணமாக, நாம் இப்படி ஒரு சட்டத்தைப் பிறப்பித்து விட்டாலும்கூட, இந்தச் சட்டத்தை நல்லமுறையிலே நிறைவேற்றுவதிலே அதிகாரிகள் கவனம் செலுத்த வில்லே. நல்லமுறையிலே தீர்ப்பு கொடுக்காமல், எல்லாவற்றுக்கும் எவிக் ஷன் உத்திரவு போடுவதை தஞ்சாவூர் கோர்ட்டிலே காணலாம். இதை இந்தச் சபைத் தலேவர் அவர்கள்கூட அறிவார்கள். பத்து மணிக்கு கேஸ் எடுத்துக்கொண்டால், பத்தரை மணிக்கு இந்த எவிக்ஷன் தீர்ப்பு அளிக்கப் பட்டுவிடும். நல்ல முறையிலே சமாதானம் செய்து வைக்கப்படாது. இதைத் தான் அங்குள்ள ஆபீசர்கள் செய்கிறார்களே தவிர, சட்ட ரீதியாக சலுகை கள் கொடுக்கத் தயாராக இல்லே. ஆகவே இங்கே நல்ல அதிகாரிகள் இல்லேயென்று சொல்கிறேன். அதற்காக, இந்த செஷன்ஸ் கோர்ட்டிலே தூக்குப்போடுவதற்கு முன்னல், எப்படி ஜூரர்களுடைய அபிப்பிராயம் கேட்கப்பட்டு, தண்டனே நிறைவேற்றப்படுகிறதோ, அதைப்போல் சட்டம் தெரியாத என்னேப்போன்ற சிலரையும் இந்த சீலிங் போர்டிலே அங்கத்தினர்களாகப் போட்டு, அதிகாரிகளுக்கு உதவி செய்யக்கூடிய முறை யிலே இந்தச் சட்டத்தில் செய்தால், அதிகாரிகள் இஷ்டத்திற்கு தீர்ப்பு கூறக்கூடிய நிலேமை மாறும். அதனுல் ஏழைகளாக இருக்கக் கூடியவர் கள் பெருமளவுக்கு பாதிக்கப்படாமல், பாதுகாக்கப்படுவார்கள். ஆகவே இப்போது உள்ள நிலேமையையும் இதன்மூலம் மாற்றியமைக்க முடியும். ஆகவே, இந்த போர்டிலே இப்படிப்பட்ட ஒன்றிரண்டு பேர்களேப் போட்டால் இப்போதுள்ள மனப்பான்மையும் மாறும்.

அதோடு, இப்போது நிலத்திற்கு சீலிங் வைத்திருக்கிறார்கள். சிறுசிறு நில மிராசுதாரர்களாக இருப்பவர்கள், தங்களிடமுள்ள 5, 6 எக்கர் நிலத்திலிருந்து வரக்கூடிய நிதியை எதிர்பார்த்து தங்கள் வாழ்க்கையை நடத்துகிறார்கள். அந்த நிதி வரவில்லையானால், நிம்மதியாக வாழ்க்கை நடத்தமுடியாது. அதே சமயத்தில் 10 எக்கர் என்று ஒரு பக்கத்தில் சட்டம் செய்துகொண்டு இருக்கிறார்கள். ஒரு பக்கத்திலே இந்தியாவிலே எவ்வளவு பேர்கள் நிலம் இல்லாமல் இருக்கிறார்கள், அவர்களுக்கு எப்படி நிலம் கொடுப்பது என்பதிலே கண்ணும் கருத்துமாக கவனம் செலுத்திக் கொண்டு வருகிறோம். அதற்கான சட்டங்களை செய்து கொண்டிருக்கிறோம். இது எதற்கு ? உழவர்கள் நிலத்தை வாங்கிவிடக்கூடிய நாட்கள் வெகு தூரத்தில் இல்லை. அந்த நாள் வந்து விட்டால் போதும். அதற்குத் தான் சட்டம் செய்யவேண்டும். அப்படியில்லாது நிலத்தை ஒருவன் வைத்துக்கொண்டு, மற்றொருவனுக்கு வாடகைக்கு விட்டுக் கொண்டிருக்கிறானே, அந்த நிலைமையைத் தான் மாற்றியமைக்க வேண்டும். இந்தச் சட்டம் வருகின்றபோது, அந்த வகையிலே இந்தச் சட்டத்தை அமுல் நடத்தி அதிகாரிகளுடைய மனப்பான்மையை நல்ல வகையிலே மாற்றியமைக்க வேண்டும். இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதோடு மாத்திரமல்ல, அமுல் நடத்தப்பட்டு இருந்தால், இப்போது 10,000, 5,000 பேர்கள் ஜெயிலிலே போயிருக்க வேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்காது. இப்போது இந்த நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம், அவர்களிடையே வேலையில்லாத காரணம்தான். ஆகவே அதை இன்றையத் தினம் போக்கவேண்டும். அதை முன்னாலேயே கருத்தில் வைத்துக் கொண்டு, சட்டத்தை அமுல் நடத்தி இருந்தால், இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. இப்போது இருக்கிற சட்டங்களைக்கூட எப்போது நிறைவேற்ற வேண்டுமென்றால், இந்தத் தைப் பொங்கலிலேயே யார் யாருக்கு நிலம் இல்லையோ, அவர்களிலே சிலருக்கு ஒவ்வொரு தாலூகாவிற்கும் 100 எக்கர் அளவுக்காவது நிலம் கொடுத்தாக வேண்டும். இந்த உச்ச வரம்பு காரணமாக யார் யாருக்கு, எவ்வளவு எவ்வளவு நிலங்கள் இருக்கிறது என்பதையெல்லாம் கணக்கெடுத்து, கொடுக்க வேண்டிய அளவுக்கு நிலங்களைக் கொடுத்துவிட்டு, அதற்குப் பிறகு கோயில், மடங்களிலே இருந்து கிடைக்கக்கூடிய நிலங்களையெல்லாம்கணக்கிட்டு, அவைகளையும் நிலமற்ற உழவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கக்கூடிய நிலைமை விரைவிலே ஏற்படுமானால், சரித்திரத்திலே மிகவும் பிரமாதமான சாதனையை நாம் செய்த விட்டவர்களாவோம். அப்போது உழவர்கள் அனைவரும் இந்த சர்க்காரை வாழவேண்டுமென்று சொல்வதோடு, இன்னும் நீண்ட காலத்திற்கு இருக்கவேண்டுமென்றும் சொல்வார்கள்.

அதோடு, அவர்கள் கடன் பெறுவதற்கும் வசதிகள் செய்து தரவேண்டும். நிலம் கொடுத்துவிட்டால் மட்டும் போதாது. எரு வாங்குவதற்கு, நல்ல விதைகள் வாங்குவதற்கு, இன்னும் பிற வசதிகளுக்கும் நாம் வழி செய்து தரவேண்டும். அப்போத தான் அவர்களும் பொருளாதாரத் துறையிலே முன்னேற்றமடைய முடியும். அப்படிக் கொடுக்கக்கூடிய கடனையும் அவர்கள் சுலபமாகப் பெறுவதற்கேற்ற முறையில் சட்டத்திலே திருத்தங்கள் செய்யவேண்டும். அப்படி இல்லாமல் கடன் பெறுவதற்காக முதலிலே கர்ணத்திடம் வந்து, பின்னர் பட்டா மணியத்திடம் வந்த, பிறகு ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடம் வந்து, அதற்குப் பின்னாலே தாசில்தாரிடம் வந்த, கடைசியிலே கடனுக்காக உத்திரவை வாங்க வேண்டிய நிலை ஏற்படுமானால், அவன் சாகுபடி சமயத்திலே கடனுக்கு விண்ணப்பித்தால், அது அறுவடை முடிகிற சமயத்திலே தான் அவனுக்குக் கிடைக்கும். அதேபோல் அவர்களுக்கு கொடுக்கப்படும் சல்பேட், பாஸ்பேட் போன்ற உரங்களும் அந்த சமயத்திலே அவர்களுக்கு வழங்கப்பட்டால் பயனில்லா நிலைமைதான் ஏற்படும். ஆகவே, சுலபமாகக் கடன் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். அப்படி ஏற்பாடு செய்தால், தஞ்சை ஜில்லா உழவர்கள் சார்பாக நான் கட்டாயமாய் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியுமென்று உறுதியாகக் கூறுவேன். நாம் நினைக்கிற மாதிரி 40 சதவிகிதத்திற்குப் பதில், சரிக்கு சரியாகக்கூட உற்பத்தியைப் பெருக்கலாம். அப்போத இந்தப் பஞ்சமும், பட்டினியும்கூட இருக்காத. நாட்டிலே வேலையில்லாத் திண்டாட்டம் இருக்காது. குறைந்த செலவிலேயும் உணவு

[Sri G. Narayanaswamy Naidu] [29th September 1961

உற்பத்தியைச் செய்ய முடியும். அப்படி உற்பத்தி செய்து, அதை நாம் பொதுமக்களுக்குக் கொடுக்கவும் முடியும். அப்போது, இந்த உணவுப் பண்டங்களின் விலைகள் எல்லாம் ஏறிவிட்டது என்று சொல்லக்கூடிய, இப்போது இருந்துவரக்கூடிய கிளர்ச்சியும் நாட்டிலே இருக்காது. அப்போது இந்த நிலையை மாற்றியமைக்கக்கூடிய சர்க்காராகவும் இது மாறுகிறது. இப்படி உற்பத்தியாகக்கூடிய பொருள்களினால், உற்பத்தி செய்யக்கூடியோரின் பணமும் குறையாமல் இருக்கவேண்டும். அதே சமயத்தில் உற்பத்தியின் அளவும் அதிகரிக்க வேண்டும். இந்த இரண்டு காரியத்தையும் செய்தாலேயே, ஒரு சர்க்கார் நல்ல பெயர் எடுக்க முடியும். இப்படி உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்ற அடிப்படையான காரணத்திற்கு, ஆதிகாரணமாக இருந்தவர் நமது மகாத்மா காந்தி அவர்களே ஆவார்கள். அவர்கள் அன்று சொல்லிவிட்டுப் போனவைகளை, நாம் இன்றையத் தினம் படிப்படியாக நடைமுறையிலே நடத்திக் காட்டிக்கொண்டு வருகிறோம். இன்றைக்கு நிலமில்லாதவர்களுக்கு எல்லாம் நிலம் சொந்தமாகப் போகிறது என்று சொன்னவுடன், எல்லாத் தரப்பிலே இருந்தும், குறிப்பாக உழுகின்ற உழவர்கள் தரப்பிலே இருந்தும், பெருமளவுக்கு உற்சாகம் காட்டுகின்ற நிலைமை ஏற்பட்டிருப்பதோடு, உழவர் பெருமக்கள் நிலத்தின் சொந்தக்காரர்களாகவும் ஆகி, பொருளாதாரத் துறையிலேயும் உயர்ந்து, இன்னும் பல இடங்களிலே நிலம் வாங்கக்கூடிய நிலைமையும் ஏற்பட்டு, அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயரக்கூடிய நிலைமை ஏற்பட்டு விடுமானால், அன்றைக்கு மகாத்மா காந்தி அவர்கள் கண்ட கனவு—சொன்ன வார்த்தைகள் உண்மையாகி விடும். அதை காங்கிரஸ் ஏற்றுக்கொண்டு பல கமிட்டிகள் போட்டார்கள். குமரப்பா கமிட்டி, மாகாண காங்கிரஸ் கமிட்டி, ஒரு நில சீர்த்திருத்தக் கமிட்டி போட்டது, 40 வாரக் கமிட்டி, கே. ஜி. மேனன் கமிட்டி, ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் கமிட்டி, பக்தவத்சலம் கமிட்டி, இப்படி பல கமிட்டிகள் போடப்பட்டன. குமரப்பாவின் கமிட்டி பல பேர்களை விசாரணை செய்து, பல கமிட்டிகள் போட்டு உழவர்களுடைய இயக்கத்தை பலப்படுத்தியதன் காரணமாக அவர்கள் சென்று வேலை செய்வது சுலபமாக இருக்கிறது. வேறு யாரோ கிளர்ச்சி செய்தார்கள், அதற்காக சர்க்கார் பயந்துகொண்டு விட்டுக் கொடுத்தார்கள் என்று சொன்னால் அதைவிட பயித்தியக்காரத்தனம் கிடையாது. குமரப்பா அவர்கள் சொல்லியதைவிட வேறு ஒருவரும் சொல்லிவிட முடியாது. முன்பு குருபாதம் மந்திரியாக இருந்தபொழுது விஜயவாடாவில் சொன்னார், "நான் வீட்டைக் கொடுத்துவிட்டு திரும்பி உணவு உண்கிறேன்" என்று. அம் மாதிரி வீடு கொடுத்தார்கள். அந்த நிலைமையில் உழவர் இயக்கம் நன்றாக பலப்பட்டது. காங்கிரஸ் தரப்பில் இருக்கிற மிராசுதாரர்கள் இது விஷயத்திலே தனியாக ஒதுங்கிவிடுவார்கள். அவர்கள் ஒதுங்கி எத்தனையோ கெடுதல் செய்தாலும், அதனால் ஏற்படுகிற தாக்குதல் இருந்தாலும் அவற்றையெல்லாம் சமாளிக்கக்கூடிய நிலைமையில் காங்கிரஸ் கமிட்டியும், முதல் மந்திரி அவர்களும் இருந்ததால் இதர கமிட்டிகள் வேலை செய்ய முடிந்தது. மாயவரம் ஒப்பந்தம் எல்லாம் சிரமம் இல்லாமல் நடந்தது. 40—60 வாரச் சட்டம் வந்தது. பிறகு நிலச் சீர்த்திருத்தச் சட்டம் கொண்டுவரப்பட்டது. உழவர்களுக்கு நிலத்தில் உரிமையை வாங்கித்தரவேண்டும் என்ற நோக்கத்தோடு, அதனால் ஏற்படுகிற எதிர்ப்பை சமாளித்து இந்தச் சட்டத்தை சர்க்கார் கொண்டு வந்ததை மக்கள் நன்றாக உணர்ந்திருப்பார்கள்; உழவர்களும் நன்றாக உணர்ந்திருப்பார்கள் என்று நம்புகிறேன். இந்தச் சட்டம் இப்பொழுது கடைசியாக நிறைவேற்றப்படக்கூடிய கட்டத்தில், இதை ஆதரித்த உழவர்களையும், இதை நிறைவேற்றிக்கொடுத்த காங்கிரஸ் சர்க்காரையும், இதில் முக்கியமாக பங்கெடுத்த மந்திரிகளையும், சிறப்பாக முதல் மந்திரி அவர்களையும், விவசாய மந்திரியையும், ரெவின்யூ மந்திரியையும் பாராட்டி, என்னுடைய உரையை முடிக்கிறேன்.

TEMPORARY CHAIRMAN (SRI N. S. RAMALINGAM): As many hon. Members desire to speak, I now fix a time-limit of ten minutes for each hon. Member.

29th September 1961]

**SRI T. S. RAMASWAMI** : கனம் தலைவர் அவர்களே, பல நிலச் சீர்திருத்தச் சட்டங்களுக்குப் பின்னால் இப்பொழுது இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்படுவதற்காக மூன்றாவது வாசிப்புக்கு வந்திருக்கிறது. இதற்கு முன்னால் ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம், நியாய வாரச் சட்டம், குடியானவர்கள் பாதுகாப்புச் சட்டம் இவைகளெல்லாம் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. எனக்கு முன்னால் பேசிய நண்பர் அவர்கள் குறிப்பிட்டதுபோல பல ஆண்டுகள் காலமாக விவசாயத் துறையிலே சீர்திருத்தம் செய்யவேண்டும் என்ற எண்ணத்திலே எழுந்த சட்டங்கள் இவை. இந்த சட்டத்தைப் பொருத்தவரையிலே இது நல்லெண்ணத்தோடு எழுந்த சட்டமாக இருந்தாலும், நடைமுறையில் நம்முடைய விவசாயத் துறையிலே பலவிதமான சிக்கல்கள் இருக்கின்றன. நம்முடைய நாட்டில் இருக்கக்கூடிய பிரச்னை என்னவென்றால், பெருவாரியான மக்கள், கோடிக் கணக்கான மக்கள் நிலத்தை மட்டுமே நம்பி வாழக் கூடிய மக்கள். இது தான் சிக்கலான பிரச்னையாக இருந்துகொண்டுவருகிறது. பல தேசங்களில், உதாரணமாக ருஷ்யா, சைனா போன்ற இடங்களில் "**collectivisation**" என்ற ஒரு முறையைக் கையாண்டார்கள். "எக்ஸ்ப்ரோப்ரியேஷன் ஆப் எக்ஸ்ப்ரோப்ரியேட்டர்ஸ்" என்றார்கள். நிலத்தை அத்தனையும் அரசாங்கமே எடுத்துக்கொண்டு கூட்டுறவு பண்ணைகளை அமைத்தார்கள். இன்னும் பல இடங்களில், இங்கிலாந்து போன்ற இடங்களில் தொழில் புரட்சி ஏற்பட்டதன் காரணமாக நிலத்தை மட்டும் நம்பி வாழக்கூடிய கோடிக் கணக்கான மக்கள், பாட்டாளிகள் இல்லாத நிலைமை ஏற்பட்டது. தொழில்கள் வளர்ச்சி அடைந்ததால் அவர்களுடைய வாழ்க்கைக்கு வேறு விதத்தில் வாய்ப்பு ஏற்பட்டது. அதனால் அங்கு நிலப் பிரச்னையை தீர்ப்பது சௌகரியமாக இருந்தது. துரதிர்ஷ்டவசமாக நம்முடைய தேசத்தில் சுதந்திரம் வந்த காலத்திற்குப் பின்னால் தொழில் புரட்சியோ அல்லது வேறு ஒரு புரட்சியோ ஏற்படவில்லை. ஆகவே, "இரண்டுங்கெட்டான்" நிலைமையில் நாம் இருக்கிறோம். ஒன்று "ஸோஷலிஸ்ட் பேட்டர்ன்" என்ற முறையை பின்பற்றி எல்லா நிலங்களையும் சர்க்கார் எடுத்துக்கொண்டு மக்களுக்கு உத்திரவாதம் அளிக்கவேண்டும் அல்லது பெரும்பான்மையான மக்கள் விவசாயத்தை மட்டும் நம்பிக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, ஒரு பகுதியினர் தொழில்களில் ஈடுபடுவதற்கும், இன்னொரு பகுதியினர் விவசாயத்தில் ஈடுபடுவதற்கும் வழிவகை காணவேண்டும். இது நல்லெண்ணத்தில் எழுந்த சட்டமாக இருந்தபோதிலும், என்ன ஆயிற்று என்றால், முன்னாலேயே சட்டம் கொண்டுவரப்போகிறோம் என்று சொன்னதன் காரணமாக, இதற்கு முன்னால் பெரிய நிலச்சுவான்தாரர்களாக இருந்தவர்களெல்லாம் அவர்களுக்கு வேண்டியவர்களுக்கு நிலத்தை எழுதிவைத்து "பினாமி டிரான்ஸாக்ஷன்" ஏராளமாக நடந்துவிட்டது என்பது உலகறிந்த விஷயம். அதுமட்டுமல்ல. குடியானவர்களை, சாகுபடியாளர்களை நிலத்தை விட்டு அப்புறப்படுத்தக்கூடாது, உழுபவர்களுக்கே நிலம் சொந்தமாக இருக்கவேண்டும் என்ற நல்லெண்ணத்தோடு கொண்டுவரப்பட்ட சட்டமாக இருந்தபோதிலும், பல இடங்களில் நிலத்திலிருந்து குடியானவர்களை அப்புறப்படுத்தக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதையும் நாம் நன்றாக உணர்ந்திருக்கவேண்டும். இது தவிர, என்னுடைய ஜில்லாவைப் பொறுத்தவரையிலே இப்பொழுது யாரும் பாதிக்கப்படாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அப்படி பாதிக்கப்படக்கூடிய நிலச்சுவான்தார் யாருமில்லை. அப்படி யாரும் இதனால் பாதிக்கப்படாத நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. ஒரு பக்கம் இது "டெட் லெட்டர்" ஆக இருந்துகொண்டிருக்கிறது. இன்னொரு பக்கத்தில் நிலத்தைவிட்டு குடியானவர்கள் வெளியேற்றப்படுகிறார்கள். நிலம் இல்லாத தொழிலாளர்களை ஏராளமாக வளர்த்துக்கொண்டு போகிறோம். இந்த நிலையில் தான் நாம் இந்த சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம். இது தவிர இன்னொரு பிரச்னை என்னவென்றால், வேறு உத்தியோகத்தில் இருக்கக்கூடியவர்களுக்கு, இதர தொழில்துறையிலே கவனம் செலுத்தக்கூடியவர்களுக்கு உச்ச வரம்பு கட்டவில்லை, விவசாயத்தை நம்பிக் கொண்டிருந்தவர்களுக்கு மட்டும் உச்ச வரம்பு கட்டுகிறோம். 24 ஏக்கர் உச்ச வரம்பு என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதில் நிலச்சுவான்தாரருக்கு என்ன வரும்படி

வரமுடியும்? அதை வைத்துக்கொண்டு குழந்தைகளை கல்லூரியில் படிக்க வைக்கவேண்டுமென்று சொன்னால், அதற்கு அந்த வருமானம் காணாது. அந்த நிலைமையில் அவர்களுக்கு வேறு ஏதாவது ஒரு தொழில் ஏற்பாடு செய்தாக வேண்டும். இந்த சங்கடமான நிலையில் இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட இருக்கிறது. இதை நடைமுறையிலே நன்றாக கண்காணித்து வேண்டுவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடிக்கின்றேன்.

**SRIMATHI T. N. ANANDANAYAKI**: கனம் தலைவர் அவர்களே, இந்த உச்ச வரம்பு சட்டத்தை நம்முடைய காங்கிரஸ் அரசாங்கம் இப்பொழுது கொண்டுவந்தது குறித்து உண்மையிலேயே நாம் மகிழ்ச்சி அடையவேண்டும். காரணம் இதில் அடிப்படைக் கொள்கை என்ன வென்றால், உழவர்களுக்கு உரிமை இருக்கவேண்டும் உழுகின்ற சொத்திலே, அப்பொழுதுதான் அவர்கள் உவப்போடு உற்பத்தியை அதிகரிக்க முன்வருவார்கள் என்பதுதான். அந்தக் கொள்கையை ஏற்படுத்திக்கொண்டு, அரசாங்கம் அதை நல்ல முறையில் கொண்டுவருவதற்கு எல்லாவித முயற்சியையும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த வகையிலே இம்மாதிரி உச்ச வரம்பு சட்டம் கொண்டுவந்திருக்கிறார்கள். எதிர்க்கட்சியினர் சொன்னார்கள் நிலம் மிச்சம் இருக்கக்கூடிய அளவுக்கு உச்சவரம்புச் சட்டம் கொண்டுவரப்பட வேண்டும், மிச்சம் இல்லாமல் இருந்தால் அதை எப்படி உச்ச வரம்புச் சட்டம் என்று சொல்ல முடியும். மிச்சத்தைக்கூட அரசாங்கமே மற்றவர்களுக்கு பிரித்துக் கொடுக்கக் கூடாது, அவர்கள் கட்சியைச் சார்ந்த சங்கங்கள் மூலம் யாருக்குக் கொடுக்கவேண்டுமென்கிறார்களோ அவர்களுக்குத்தான் கொடுக்கவேண்டும் என்று. இவ்வளவு நிபந்தனையோடு இந்தச் சட்டம் கொண்டுவரப்படவேண்டும் என்று கூறுவது நல்லதா என்பதைச் சிந்திக்க வேண்டும். அடிப்படை நோக்கம் என்ன என்பதைக் கவனிக்க வேண்டும். ஒரு தனி மனிதன் கையிலே அதிகமாக சொத்து குவிந்தால் அவன் அக்கறை இல்லாமல் இருந்து, அதன் காரணமாக விளைச்சல் குறைந்து, சமூகத்தில் ஒரு நல்ல பொருளாதார அமைப்பு இல்லாமல் போய்விடும் என்பதுதான். அதனால்தான் ஒரு தனி மனிதன் கையில் 1,000 வேலி, 2,000 வேலி நிலம் வைத்துக்கொள்ளக் கூடாது என்ற முக்கிய நோக்கத்தோடு தான் இந்தச் சட்டத்தை கொண்டு வந்திருக்கிறோம். அந்த வகையில்தான் ஆளுக்கு 30 ஏக்கர் என்று வரம்பு கட்டியிருக்கிறோம். அதுவும் இப்பொழுது கொடுத்திருக்கும் திருத்தத்தின்படி, 24 ஏக்கர்தான் தேறும்; அதாவது 15 ரூபாய்க்குமேல் கிஸ்தி கட்டினால் அவர்களுக்கு இந்த கணக்கு 'அப்ளை' ஆகும். அதுபடி 24 ஏக்கர்தான் வரும். அந்த வகையில் தனி மனிதன் கையில் நிலம் குவியக்கூடாது என்று 30 ஏக்கர் அல்லது 24 ஏக்கர் என்ற அளவில் உச்ச வரம்பு கட்டி விட்டோம். அப்படிக் கட்டிய பிறகு, அதை மிராசுதார் விருப்பப்படி அவரே இஷ்டப்பட்ட விவசாயிக்கு கொடுக்கலாம் என்பதில் என்ன ஆட்சேபம்? அவரிடத்தில் பல ஆண்டு காலமாக உழைத்திருக்கும் உழைப்பாளிக்கு, "எனக்கு இந்த நிலத்தில் உடமை இல்லை; நீ இந்த 10 ஏக்கரை வைத்துக்கொள்" என்று சொல்லி விவசாயிக்குக் கொடுத்தால் அதில் என்ன தவறு இருக்கமுடியும். ஆனால், எதிர்க்கட்சிகள் சொல்கிறார்கள், "அப்படி உபரியாக வரும் நிலத்தை எங்களிடம்தான் கொடுக்க வேண்டும், அவர்களே என்ன கொடுக்கிறது" என்கிறார்கள். அவர்களே கொடுத்தாலும், அடுத்தவன் கொடுத்தாலும் அதுதான் கொடுக்கமுடியும். உடமை மாறுகிறது. அவ்வளவுதான். இதுதான் நமக்கும் வெளியே போகிறவர்களுக்கும் வித்தியாசம். காலையிலே திராவிட முன்னேற்றக் கட்சியும், கம்யூனிஸ்ட் கட்சியும் ரூ. 12½ படியையும் வாங்கிக் கொண்டு, அரசாங்கத்திற்கு நஷ்டத்தையும் வைத்துவிட்டு, வெளி நடப்புச் செய்தார்கள். கம்யூனிஸ்ட் கட்சி உச்ச வரம்பு பற்றி இப்படிச் செய்வதை யாவது புரிந்துகொள்ளலாம். ஆனால் திராவிட முன்னேற்றக் கட்சிக்குப் பேச என்ன அருகதை இருக்கிறது? கதை, வசனம் எழுதி 40 ஆயிரம், 50 ஆயிரம் என்று ஒரு உச்ச வரம்பு இல்லாமல் வாங்குகிறவர்களுக்கு இது முரண்பாடாகத் தோன்றவில்லையா? நியாயமாகச் சொல்ல

வில்லை. குற்றம் சொல்ல வேண்டுமென்றே சொல்கிறார்கள். இன்றைக்கு 30 ஏக்கர் என்று கொடுத்தால், ஒரு விவசாயக் குடும்பம் சமுதாயத்திலே வாழவேண்டும். சமுதாயத்தில் நோயாளியாக இருக்கக்கூடாது. இந்த 30 ஏக்கரில் புருஷன், மனைவி, பெண் பிள்ளைகள், மைனர்கள் எல்லாம் சேர்ந்த ஐந்து பேர்கள் கொண்ட குடும்பத்திற்கு ஒரு "பாமிலி" என்று வைத்திருக்கிறோம். இதிலே அவர்கள் வாழ்க்கை நடத்தி, பிள்ளைகளைப் படிக்க வைத்து, பெரும்படிப்புக்கும் போய், கல்யாணம் முதலியன செய்து வாழவேண்டும். இதிலே நோயாளிகளுக்கும்—டி.பி. போன்ற க்ஷயரோகம் என்றால், ஆயிரக் கணக்காகச் செலவு செய்தாக வேண்டியிருக்கும்—செலவு செய்தாக வேண்டும். இப்படி பல நிபந்தனைகளுக்கு உட்பட்டு அவர்கள் வாழ்ந்தாக வேண்டும். மேலும், விளைச்சல் வருஷா வருஷம் ஒரே மாதிரியாக இருக்கும் என்ற நிச்சயம் இல்லை. இந்த வருஷம் விளையும், அடுத்த வருஷம் பூச்சி விழும், அல்லது மழை இல்லாமல் போகும். இன்னும் வேறு ஏதாவது வரும், சிக்கல்கள் ஏற்படலாம். பருவ மழை தவறலாம். அப்படி விளைச்சல் இல்லாத காலத்தில், அரசாங்கம் கஜானாவிலிருந்து கொடுப்போம் என்று சொல்வதானால் 10 அல்லது 5 ஏக்கர் கூட உச்ச வரம்பு வைக்கலாம். யாரும் ஏன் என்று கேட்க மாட்டார்கள். ஆகவே "பர்க்சுவேஷன்"கள் என்று சொல்கிறோமே அம்மாதிரியான நிபந்தனைகளுக்கெல்லாம் உட்பட்டு சொல்ல முடியாத நிகழ்ச்சிகளுக்கும் ஆளாகி அவர்கள் இந்த 30 ஏக்கரைக் கொண்டு வாழவேண்டும். 10 ஏக்கரே கொடுப்பதானாலும் பரவாயில்லை. வேறு பக்கத்தில் வேறு தொழிலில் ஈடுபட்டிருக்கும் நிலைமை உண்டென்றால், அப்பொழுது 10, 5 அல்லது 3 ஏக்கர் கூட வைக்கலாம். ஒரு விவசாயக் குடும்பத்திற்குக் கிடைக்கும் வருமானம் ஒரு நடுத்தர குடும்பத்தை நடத்தும் அளவுக்கு இல்லாவிட்டால் அந்தக் குடும்பம் நசித்து ஒரு நோயாளிக் குடும்பமாக சமுதாயத்தில் இருந்து மறைய வேண்டு மென்றால், அப்பொழுது, அரசாங்கத்தின் முயற்சிகள், பொருளாதார வளர்ச்சிகள் எல்லாம் பற்றிப் பெருமையாகப் பேச என்ன இருக்கும்? இவைகளெல்லாம் பாதிக்கப்படும் என்பதை உணர்ந்தால் அவர்களும் இப்படிப் பேச மாட்டார்கள். ஆனால் செய்வதைக் குறை கூறவேண்டுமென்றே சொல்வது நியாயம் இல்லை. எதிர்க் கட்சிகள் பணி சரியாக இல்லை.

அடுத்தபடியாக, இந்த சட்டத்தை மிக ஆர அமர யோசித்து பொறுக்குக் கமிட்டி போட்டு, அதற்கு பிறகு அதைத் திருத்தி, சட்ட சபைக்கு கொண்டுவந்த பிறகும் ஒரு சாப்டரையே மாற்றியும், இவ்வளவு தூரம் அக்கரை செலுத்தியிருக்கிறோம். ஆனால் ஸ்ரீதனம் சம்மந்தப்பட்டவரை, சரியாக இல்லை. ஒரு இடத்திலே 5–ம், 3–ம், 8 என்றும், இன்னொரு இடத்தில் 5-ம், 3-ம், 7 என்றும், மற்றொரு இடத்தில் 5-ம், 3-ம், 6 என்றும் பிரொவைஸோக்கள் இருக்கின்றன. இதையெல்லாம் கணக்குப் போட்டுச் சொல்ல முடியவே முடியாது. இதிலே பின்னால் வரும் பெண்களுக்கும் ஸ்ரீதனம் உண்டா என்பதும் சரியாகப் புரியவில்லை. இன்றைக்கு வெளி நடப்பு செய்திருக்க வேண்டுமென்றால், பெண் அங்கத்தினர்களாகிய நாங்கள் சென்றிருக்க வேண்டும். ஆனால், நாங்கள் கண்ணியமாக இங்கேயே இருந்து நிறைவேற்றி வைக்கிறோம். இதிலே ஒன்றுசொல்ல விரும்புகிறேன், எனக்கு ஒரு இஞ்ச் நிலம் கூட ஸ்ரீதனமாக வரவில்லை. ஆனால். நாட்டிலே உள்ள எல்லோருக்கும், எல்லாக் காலத்திலும் தக்க வகையில் செய்கிறோம் என்னும்போது, தொல்லைகள், இன்னல்கள், இடைஞ்சல்கள், ஏற்றத் தாழ்வுகள் பொருந்திய சட்டத்தைக் கொண்டு வருவது, எல்லோருக்கும் தொந்தரவாகத்தான் இருக்கும். இன்றைக்கு ஸ்ரீதனச் சொத்து கூட, **"from the date of commencement of the Act"** என்று போட்டிருக்கிறார்கள். ஆகவே, இந்த சட்டம் ஆரம்பிக்கும் காலத்தில் உள்ளவர்களுக்குத்தான் என்று ஆகிறது. எதிர் காலத்தில் ஸ்ரீதன சொத்தையே எதிர்பார்க்க முடியாது என்றாகிறது. இன்றைக்கு செபரேட் ப்ராபர்ட்டி என்பதைச் ஸ்ரீதனமாக வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லி, அதை **"from date of commencement of the Act"** என்று போட்டிருக்கிறோம். ஆகவே வரும் காலத்தில்

ஸ்ரீதனச் சொத்துக்கு பாதுகாப்பு இருக்கிறதா என்று தெளிவாக இல்லை. இதை ஆராய்ந்து பார்க்கவில்லை என்று நினைக்கிறேன். அதை தெளிவு படுத்த வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். (குறுக்கீடு) அமென்ட் மெண்டின்படி அது தெளிவாக இல்லை. அதைத் தெளிவாகச் சொன்னால் நல்லது. எங்களுக்கும் அது புரியும்.

எக்ஸெம்ஷன்களெல்லாம் ஒரு யூனிபார்ம் ஆக இல்லை. தோப்புக ளெல்லாம் **1959** ஜூலையில் இருக்கவேண்டும் என்று இருக்கிறது. மற்ற தெல்லாம் விதிவிலக்குக் கொடுக்கும்போது, **"date of commencement"** என்கிறோம். இதற்கெல்லாம் ஒரு யூனிபார்ம் டேட் போட்டுவிட்டால் நல மாக இருக்கும். அப்படிச் செய்தால் நாம் பாரபட்சம் இல்லாமல் நடந்துகொண்டோம் என்று மக்கள் பாராட்டுவார்கள்; நமக்கும் நல்லது.

நஷ்ட ஈடு கொடுப்பதில், கொஞ்சம் கொஞ்சமாக கொடுத்தால், எல்லாம் கரைந்துபோய்விடும். நிலச்சுவான்தார்பாடு ரொம்பக் கஷ்டமாகப் போய் விடும். வேறு எந்தத் துறையிலும் உடனடியாக ஈடுபட முடியாமல் போய்விடும். இது சம்மந்தமாகத் திட்ட கமிஷனில் கூட மூன்று வழிகள் சொல்லியிருக்கிறார்கள். ஒன்று, அந்த நிலச் சுவான்தாருக்கு நஷ்ட ஈட்டைக் கொடுத்துவிட்டு, டெனட்டிடமிருந்து வருஷா வருஷம் இவ்வளவு தொகை என்று வாங்கிக் கொள்வது; இரண்டாவது, நேரி டையாக நிலச் சுவாந்தார்களுக்கு டெனன்டே கொடுக்காமல் அரசாங்கம் பொருப்பு ஏற்கவேண்டும், அல்லது மூன்றுவதாக, அரசாங்கமே நஷ்ட ஈட்டை மொத்தமாகக் கட்டிவிட்டு, டெனன்டிடமிருந்து கொஞ்சம் கொஞ்ச மாக ரெகவர் பண்ணலாம். இந்த மூன்றில் ஒன்றைச் செய்யவேண்டும். இன்றைக்கு ஒரு புதிதான நிலைமை ஏற்படுகிறது. அரசாங்கமே டெனன் டாக மாறுகிறது. அதில் எவ்வளவோ தொல்லைகள் இருக்கின்றன. விவ சாயி குத்தகைக்கு எடுத்த நிலத்திற்கு, அதிகாரிகள் குத்தகையை உடனடி யாக அளந்தாக வேண்டும் என்பார்கள். நேரிடையாக நிலச்சுவான் தாராக இருந்தாலும், கஷ்டத்தைச் சொன்னால் அவர் "ஆல் ரைட்" என்று சொல்லி குத்தகை ரெமிஷன் கொடுப்பார்; அது கூட கொடுக்க மாட்டார் கள் இவர்கள். அதிகாரிகள் கிட்ட இருந்த அளந்துதான் ஆகவேண்டும் என்பார்கள். உடனே எதிர்க்கட்சிக்காரர்கள் ஸ்ட்ரைக், வேலை நிறுத்தம், அஜிடேஷன், புரட்சி எல்லாம் கொண்டு வருவார்கள். ஆகவே இது விஷய யத்தில் அரசாங்கமும் வேறு வழிவகை செய்ய முடியுமா என்று யோசித் துப் பார்க்க வேண்டும்.

மொத்தத்தில் இந்த நிலச் சீர்திருத்தச் சட்டம் மிக மிக வரவேற்கத் தக்கது. இதை நல்ல முறையிலே அமுல் நடத்த வேண்டும். இந்த சட்டம் கொண்டுவந்ததற்காக இந்த சட்ட சபையின் மூலமாக அமைச்ச ரவர்களுக்கு நம் மகிழ்ச்சியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். ஏதாவது சிக்கல்கள் ஏற்பட்டாலும், அவைகளை வரும் காலத்தில் தீர்க்கும் முறையில் இந்த சட்டத்தை ஜனநாயக முறையில் அமுல் நடத்த வேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

12-00 noon.

**Sri A. R. SUBBIAH MUDALIAR**: கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதா சம்பந்தமாக சில வார்த்தைகளைச் சொல்லப் பிரியப் படுகிறேன். அநேகமாக இந்த மசோதா வருவதற்குக் காரணம் தஞ்சைதான் என்று சொல்ல வேண்டும். தஞ்சையில் சாகுபடியாளர் களுக்கும், நிலச்சுவான்தார்களுக்கும் ஏற்பட்ட கிளர்ச்சியினால்தான் இந்த மசோதா வருவதற்கு காரணமாக இருந்திருக்கிறது. அங்குதான் அதிகப்படி யான நிலத்தை வைத்துக்கொண்டு விவசாயிகளை அதிகமாகத் துன்பப் படுத்தியதன் காரணமாகத்தான் இப்படிப்பட்ட மசோதா கொண்டுவரப்பட் டிருக்கிறது. இதனால்தான் மற்றவர்களும் நிலம் வைத்திருக்கிறவர் களும் சட்ட மூலமாகக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான் இப்படிப் பட்ட மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. சட்டத்தின் பெயரைப் பார்த் தாலே இது நன்றாகத் தெரியவரும், அதாவது தஞ்சை பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் என்றும், தஞ்சை நில வெளியேற்றத் தடுப்புச்

சட்டம் என்றும் அந்த ஜில்லாவின் பெயரிலேயே சட்டங்கள் கொண்டு வந்து நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. சாகுபடியாளர்களுக்கு பாதுகாப்புக் கொடுக்க வேண்டும் என்ற காரணத்தினுல்தான் இப்படிப்பட்டச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இது சரிவர நடக்க வேண்டுமென்பதற்காகத் தான் மேற்கொண்டு தனியாக எட்டாவது சாப்டர் கொண்டுவரப்பட்டிருக் கிறது. என் போன்று கிராமத்திலுள்ளவர்களுக்கும், என்போன்று நிலத்தில் பாடுபடுகிறவர்களுக்கும், என்போன்ற பொது வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கக் கூடியவர்களுக்கும் தான் சாகுபடியாளர்களுடைய கஷ்டம் நன்ருகத் தெரியும். நிலச் சொந்தக்காரர்களுடைய போக்கு மாருவிட்டால் இந்தச் சட்டமே வந்திருக்காது. தஞ்சை ஜில்லாவில் சாகுபடியாளர்களை அப்புறப் படுத்துவது முதற்கொண்டு பல விதமான கஷ்டங்களைக் கொடுத்திருக் கிருர்கள். அதை கவனித்துத்தான் இப்படிப் பட்ட சட்டங்கள் கொண்டு வந்து நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. அப்படிச் சட்டங்களைக் கொண்டுவந் தாலும் அதிலுள்ள நுணுக்கங்களை கண்டுபிடித்து அதன் பயன் அடை யாதபடி நடக்கிருர்கள். சாதாரணமாக பழைய சட்டத்தில் வாரம் பிரிப் பதற்குள் மகசூலை அப்புறப்படுத்தக் கூடாது என்று இருக்கிறது. ஆனுல் என்ன நடக்கிறது என்ருல் உடனடியாக ஆர். டி. ஒ-க்கு மனுக் கொடுத்து அப்புறப்படுத்த வேண்டும் என்று சொல்லுகிருர்கள். சட்டத்தின் கருத்து சாகுபடியாளர்களுக்கு தெரிவது இல்லை. அந்தச் சட்டத்தின் பயனை அனுபவிக்க முடியாமல் செய்து விடுகிருர்கள். சட்டத்திலுள்ள குறை பாடுகளைக் கண்டுபிடித்து சாகுபடியாளரை அப்புறப்படுத்துவதற்கு ஹைக் கோர்ட்டுவரை போகிருர்கள். ஆனுல் சாகுபடியாளர்களுக்கு அப்படிப் போக முடியவில்லை. அதனுல் அவர்களுக்கு பாதுகாப்பு வழி செய்ய வேண்டியதாக இருக்கிறது. இப்பொழுது போட்டிருக்கும் சட்டத்தைப் பார்த்தால் ஓரளவு பாடுபடுகிற சாகுபடியாளர்களுக்கு பாதுகாப்பு இருந் தாலும் அதை நல்ல முறையில் நடத்துவதற்கு வழிவகை செய்ய வேண் டும். அப்படி வழிவகை செய்தால்தான் பல விதத்தில் கோர்ட்டுக்குப் போய் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. சாகு படியாளர்களிடத்தில் பணம் இல்லாததால் கோர்ட்டுக்கு வரக்கூடியது குறைந்திருக்கிறது. ஆனுல் சாகுபடியாளர்களுக்கு கஷ்டம் ஏற்பட்டிருக் கிறது. அதனுல் இப்பொழுது இருக்கும் சட்டத்தைப் பார்க்கும்போது சாப்டர் எட்டில் 68-வது செக்ஷனை கவனித்தால்—"**Landowner's right to resume under Madras Act 25 of 1955**" என்றும் அதேமாதிரி சாப்டர் எட்டில் செக்ஷன் 59-ஐ கவனித்தால் இந்த இரண் டிற்கும் ஒன்றுக்கு ஒன்று வித்தியாசமாக இருக்கிறது. ஒரு பக்கத்தில் கல்டிவேடிங் டெனன்டாக சர்க்கார் வருகிருர்கள். அதே நேரத்தில் குடியானவர்களுக்கு மூன்று வருஷங்களுக்கு பாதுகாப்பு கொடுக்கப்பட் டிருப்பதாக சாப்டர் எட்டு 59-வது செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கிறது. இது இரண்டையும் கவனித்தால் வக்கீல்களுக்கு ஒரு வழி ஏற்படுகிறது. இதை கவனித்தால் டெனன்டுக்கு பாதுகாப்பு இருக்குமா என்பது கூட சந்தேகமாக இருக்கிறது. ரூல் மேக்கிங் காலத்தில் இதைத் தெளிவாக்க வேண்டும். ஆகவே செக்ஷன் 68, 59 இது இரண்டையும் கவனித்து அதற்குத் தகுந்தபடி விதிகள் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன்.

அடுத்தபடியாக, முப்பது ஏக்கர் உச்சவரம்பு என்று வைக்கப்பட்டிருக் கிறது. அதைத் குறைக்க வேண்டும் என்று பிறகு தீர்மானிக்கப்பட்டது. அந்த முறையில் 15¾ ரூபாய் என்று வந்தது. அதாவது 15 ரூபாய்க்குமேல் வாய்தா செலுத்தக் கூடியதற்கு 80 செண்ட் என்ற அளவில் ஸ்டாண்டர்ட் ஏக்கர் நிர்ணயம் செய்யப்பட்டது. அந்த முறையில் 24 ஏக்கர் தான் வரும் என்று நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. டெல்டா ஏரியா, **non-delta** ஏரியா என்று இருவிதம் இருக்கிறது. டெல்டா ஏரியாவில் நிச்சய மாக விவசாயம் நடக்கும். நான்–டெல்டா ஏரியாவில் மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவை தீர்வு ஏற்படுகிறது. அதைப்பற்றி கம்யூனிஸ்ட் கட்சி அங்கத் தினர்கள் சொல்லும்போது ஒரு குடும்பத்திற்கு வருஷத்திற்கு 5,000 ரூபாய் தேவை என்று சொல்லக்கூடிய அளவில் இதை கவனிக்கும்போது

நான்-டெல்டா ஏரியாவில் மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவை வரண்ட நிலைமை ஏற்படும். அதற்கு சர்க்காரால் எந்தவிதமான பாதுகாப்பும் கொடுக்கப்படவில்லை. க்ராப் இன்ஷூரன்ஸ், கேட்டில் இன்ஷூரன்ஸ் போன்ற பாதுகாப்பு கொடுக்கவில்லை. இவைகள் இல்லாவிட்டால் இதை அமுல் நடத்தும்போது கிராமப் பகுதிகளிலிருந்து நகரப் பகுதிகளுக்கு சாகுபடி யாளர்கள் போகக்கூடிய நிலைமை ஏற்பட்டு விடும். அந்த நிலைமை ஏற்படுவதற்கு முன்னதாகவே அவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்கும் அளவில் க்ராப் இன்ஷூரன்ஸ், கேட்டில் இன்ஷூரன்ஸ் போன்றவைகளைக் கொண்டு வரவேண்டும். அப்படிக்கொண்டு வராவிட்டால் எனக்கு முன் பேசியவர் சொன்ன மாதிரி இந்த இருபது ஏக்கரையும் விற்று விட்டு சாகு படியாளர்கள் வெளியேறவேண்டியதுதான். அப்படி வெளியேறி நகரப் பகுதிகளுக்குப் போக வேண்டியது தான். அப்படி அவர்களுக்குப் பாது காப்புக் கொடுத்து அவர்களுடைய ஸ்டாண்டர்ட் ஆப் லிவிங்கை உயர்த்த வேண்டும். அந்த நிலைமைக்கு வழி செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக செட்டில்மெண்டைப் பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. முப்பது வருஷத்திற்கு முன் ஏற்பட்ட தீர்வையை கணக்கிட்டு சில இடங்களில் ஸ்டாண்டர்ட் ஏக்கர் நிர்ணயம் செய்யப்படுகிறது, சில இடங்களில் செட்டில்மெண்ட் ஆன பிறகு நிர்ணயம் செய்யப்படுகிறது. ஒரே மாதிரியான நிலமாக இருந்தால் ஒரு பக்கத்தில் ஒரு மாதிரியும் இன்னொரு பக்கத்தில் வேறு ஒரு மாதிரியும் ஸ்டாண்டர்ட் ஏக்கரை நிர்ணயம் செய்ய வேண்டியதாக இருக்கிறது. நிலத்தின் பர்ட்டிலிட்டி சில இடங்களில் உயர்ந்திருக்கிறது. சில இடங்களில் ஆறு ரூபாய் தீர்வையை வைத்துக் கொண்டும் சில இடங்களில் 15 அல்லது 16 ரூபாய் தீர்வையை வைத்துக் கொண்டும் நிர்ணயம் செய்யப்படுகிறது. இதையும் கவனித்து அதற்குத் தக்கபடி நிர்ணயம் செய்யவேண்டும். டிஸ்க்ரிமினேஷன் இருக்கக்கூடாது. இப்படி டிஸ்க்ரிமினேஷன் இருப்பதால் ஒருவருக்கு நியாமாகவும் மற்றொருவருக்கு நியாயம் இல்லாமலும் இருக்கிறது. ஆகவே இதையும் நல்ல முறையில் பின்னால் கொண்டு வரவேண்டும்.

ஆதரைஸ்ட் ஆபீசர் சம்பந்தப்பட்ட மட்டில் சகல விதமான அதிகாரங்களையும் நாம் அவர்களுக்கு கொடுக்கிறோம். ஆதரைஸ்ட் ஆபீசர் கள் கல்டிவேட்டிங் டெனண்டாக ஆகிறார்கள். நிலத்தை பங்கு போடு கிறார்கள். அதனால் ஆதரைஸ்ட் ஆபீசர்களை நியமிக்கும்போது சீனியர் ஆபீசர்களாக நியமிக்கவேண்டும். கெஜெட் ஆபீசராகப் போட்டாலும் அனுபவம் உள்ளவரைத் தான் போட வேண்டும். டிபுடி தாசில்தாராக இருந்தால் இரண்டு வருஷங்களில் டிபுடி கலெக்டராக ஆகி விடுகிறார்கள். அதனால் சீனியர் ஆபீசராகப் போட்டால் தான் நலமாக இருக்கும். அவர்கள் தான் நல்ல முறையில் நீதி வழங்குவார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக சிறிய நிலச்சுவான்தார்கள் சம்பந்தமாக சில வார்த் தைகளைச் சொல்லப் பிரியப்படுகிறேன். ஸ்மால் லாண்ட் ஹோல்டர்களுக்கு வேண்டிய பாதுகாப்புக்கும் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயருவதற்கும் வழி செய்யவில்லை. அவர்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு வழிவகை செய்ய வேண்டும். அந்த மாதிரி செய்தால் மாகாண ரீதியில் பார்த்தால் அவர்களுக்கு சலுகைகள் காட்ட வேண்டியது அவசியமாக இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொளுகிறேன்.

**Sri T. KARIA GOUNDER :** கனம் தலைவர் அவர்களே, நில உடை மைக்கு உச்ச வரம்பு நிர்ணயித்து சட்டம் கொண்டுவரப்படவேண்டு மென்று நீண்ட நாட்களாக தமிழ்நாட்டிலே பேசப்பட்டது. சென்ற ஆண்டு மசோதா கொண்டுவரப்பட்டு, அது பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டது. பொறுக்குக் கமிட்டி ஜில்லாதோறும் சென்று, நிலவளத்தை ஆராய்ந்து, ஒரு ஆளுக்கு எவ்வளவு நிலம் கொடுக்கலாம் என்று யோசனை செய்து, அவர்களுடைய ரிப்போர்ட்டை சமர்ப்பித்திருக்கிறார்கள்.

அது சட்டசபை முன் கொண்டுவரப்பட்டு, பல நாட்களாக அதன் மீது விவாதம் நடைபெற்று, திருத்தங்கள் செய்யப்பட்டு இப்பொழுது அது சட்டமாக நிறைவேற இருக்கிறது.

**(Deputy Speaker in the Chair.)**

நிலம் எப்படி என் போன்ற குடியாவனருக்குக் கிடைத்தது என் பதை நாம் சற்று ஆராயவேண்டும். பிரிட்டிஷார் இந்த நாட்டிலே ஆட்சி செலுத்திய காலத்தில், எங்கள் குடும்பத்திற்கு மட்டும் ஆயிரம் ஏக்கர் பூமி இருந்ததாக என் பாட்டனுர் சொல்வார்கள். ஆனால், அந்தக் காலத்தில் மூட்டை நெல் எட்டணுவுக்கு விற்றது என்றும் சொல்வார்கள். அநேகம் பேர்கள் சர்க்காருக்கு வாய்தா பணம் கட்ட முடியாத நிலையில் சர்க்காருக்கு எல்லா நிலங்களையும் ஜோடி விட்டதாகச் சொல் வார்கள். நடந்த சங்கதியைச் சொல்கிறேன். வாய்தாப் பணம் கட்டி, புத்திசாலித்தனமாக நிலத்தை வைத்துக்கொண்டிருந்தவர்கள் மட்டுந் தான் தொன்றுதொட்டு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். வள்ளுவர் காலத் திலிருந்து இன்று வரையில் சர்க்காருக்கு வாய்தா கட்டி இதுவரை வாழ்க்கை நடத்திவந்திருக்கிறார்கள். இப்பொழுது கொண்டுவரப்பட் டிருக்கிற நிலத்திற்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கும் மசோதாவின்மீது ஒரு வாரமாகப் பேசிக்கொண்டிருக்கிறோம். பேசிய நண்பர்கள் எல்லோரும் "நிலப் பிரபுக்கள்" என்ற வார்த்தையை உபயோகிக்கப்படுத்தினார்கள். நிலப் பிரபுக்களின் அத்தியாயம் முடிந்து ரொம்ப நாளாகிறது. நில உச்ச வரம்பு சட்டம் வந்ததிலிருந்து சிறிய நிலச்சுவாந்தார் என்ற வார்த்தை கூட இல்லை. "குடியானவர்" என்றுதான் இனிமேல் அழைக் கவேண்டும். விவசாயிகளுக்கு முப்பது ஏக்கர் தான் உச்சவரம்பு இருக் வேண்டும் என்று சட்டமும் செய்தாய்விட்டது.

இந்த நிலையிலே, எதிர்கட்சியிலுள்ள நண்பர்கள், தேர்தல் நெருங்கி வருவதையொட்டிப் பேசுகிறார்கள். எங்கோ அதிகமாக நிலம் இருப் பதாகவும், நிலப் பிரபுக்கள் எல்லோரும் நிலத்தைக் கொடுக்காமல் வைத்துக்கொள்ளும் அளவுக்குச் சட்டம் செய்வதாகவும் மக்களிடத்தில் சொல்லி ஏமாற்றுகிறார்கள். 14 ஆயிரம் பேர்கள் சிறைக்குச் சென்ற தாக ஒரு நண்பர் சட்ட மன்றத்திலே குறிப்பிட்டார். இருவர் இறந்து போனதாகவும் குறிப்பிட்டார். ஐந்து நாள், ஆறு நாள், குளிக்கக்கூட தண்ணீர் இல்லாமல், படுக்கவும் வசதி இல்லாமல் சிறையில் மக்கள் வாடுகிறார்கள் என்று கூட சட்டசபையிலே அவசரத் தீர்மானம் கொண்டு வந்தார்கள். நேற்றைய தினம் அநேகம் பேர்கள் கொடியைத் தாங்கி நின்றதையும் தலைவர்கள் எல்லோரும் அணிவகுத்து, ஜீப்காரில் ஏறிச் சென்றதையும் சினிமாப் படம் எடுத்தார்கள். 40 ஆயிரம் பேர் என்று ஒரு நண்பர் சொன்னார். 20 ஆயிரம் பேர் என்று இன்னொரு நண்பர் சொன்னார். நேற்று கொடி பிடித்த நண்பர்கள் எல்லோரையும் நான் கேட்க விரும்புகிறேன்—"உச்ச வரம்பு எங்கே, எப்படிக் கட்டப் போகின் றீர்கள்?" என்று. அவர்களைப் போல் அணிவகுத்து நிற்கவேண்டு மென்றால், அது எங்களால் முடியும். நிலப் பிரபுக்கள், மிராசுதாரர் களாகி குடியானவர்கள் என்ற நிலைக்கு வந்திருப்பவர்கள் முப்பது ஏக்கர் உச்ச வரம்புக்குட்பட்டு வந்துவிடுகிறார்கள். நாங்களும் சென்னைக்குப் பட்டினிப் பட்டாளமாக அணி வகுத்து வரமுடியும். எனக்கு முப்பது ஏக்கர் என்றால், என்னுடைய நான்கு பிள்ளைகளுக்கு ஆளுக்கு $7\frac{1}{2}$ ஏக்கர் வருகிறது. ரெவினியூ அமைச்சர் அவர்கள் கூட, மசோதாவைக் கொண்டு வந்து பேசும்போது சொன்னார்கள், இந்த நாட்டிலே இருப்பவர்களுக் கெல்லாம் நிலத்தைப் பிரித்துக்கொடுத்தால், ஆளுக்கு செண்ட் கணக்கில் தான் நிலம் வரும் என்று. குடியானவர்கள் விவசாயத் தொழிலாளிகள் இந்த நாட்டில் 80 சதவிகித மக்களாக இருக்கிறார்கள். எல்லோருக்கும் நிலத்தைப் பிரித்தால் செண்ட் கணக்கில்தான் வரும் என்ற நிலை இருக்க, பட்டாளத்தைத் தயார் செய்து, "உனக்கு 30 செண்ட், உனக்கு 15 செண்ட்" என்று சொல்லி, மக்களை ஏமாற்றி, மோட்டார் வாகனங்களில் திரிகின்றார்களே 20 சதவிகித மக்கள், அவர்

களைப் பற்றி என்ன சொல்வது ? குடியானவர்களாகிய நாங்கள் எங்கள் வேலையைவிட்டு சென்னைக்கு அணிவகுத்து புறப்பட்டு வரவேண்டுமானால், வருவோம். கலப்பையையும், நுகத்தடியையும் போட்டுவிட்டு, கொடியைத் தாங்கிக்கொண்டு, சர்க்காரை ஸ்தம்பிக்கச் செய்யவேண்டுமென்று நினைப்போமானால், உலகமே அழிந்துவிடும் என்பதை இங்கே நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரையில் சொல்வேன், ஒன்பது மாதமாகிறது மழை பெய்து. ஒரே மழை பெய்திருக்கிறது. தண்ணீர் இல்லாத ஆறு. சாமி இல்லாத கோயில். அதிகாரம் இல்லாத போலீஸ், துப்பாக்கி இல்லாத கோட்டை என்ற பழமொழி எங்கள் ஊரைப்பற்றி நிலவுகிறது.

**Sri D. S. AUTHIMOOLAM**: வேலூரைச் சொல்கிறீர்களா ?

**Sri T. KARIA GOUNDER**: ஆம், ஒன்பது மாதமாக மழை பெய்யாத பகுதியில் முப்பது ஸ்டாண்டர்டு ஏக்கர் வைத்துக்கொள்ளப் போகிறோம். மிச்சம் உள்ள நிலத்தை சர்க்கார் வசம் ஒப்படைக்கப் போகிறோம். இதற்காக, ஆர்பாட்டம், செய்வது, சிறைக்குச் செல்வது என்றால், இதற்கு என்ன அர்த்தம் ? யார் நிலத்தை, யாருக்கு, எப்படி பகிர்ந்துகொடுப்பீர்கள் என்று அந்த நண்பர்களை நான் கேட்க விரும்புகிறேன்.

ஐயா, எங்கள் ஊரில் சர்க்கரை ஆலை ஒன்று வைத்திருக்கிறார்கள். அந்த ஆலைக்குத் தேவை ஆறாயிரம் ஏக்கரில் விளையும் கரும்பு. 22 ஆயிரம் ஏக்கரில் கரும்பு பயிராய்விட்டது. எல்லாம் வெல்லம் செய்தோம். வெல்லத்தைத் சிலோன் சர்க்கார் இறக்குமதி செய்வதைத் தடைசெய்து விட்டார்கள். அமைச்சர் அவர்கள் நேற்று சொன்னார்கள், "அவர்கள் வாங்கவில்லையென்றால், சர்க்கார் என்ன செய்யமுடியும் ?" என்று. இந்த நிலையில் 16 ஆயிரம் ஏக்கரில் விளைந்த கரும்பைக் கொண்டு செய்யப்பட்ட வெல்லத்தை வாங்க ஆட்கள் இல்லை. அதற்கு மார்க்கெட் இல்லை. இப்படி, விவசாயம் செய்பவர்கள் கட்டுபடியாகாத நிலையில் இருந்துகொண்டிருக்கிறோம். நாங்களெல்லாம் 15 நயே பைசா கொடுத்துத் தான் சட்டசபைக்கு சர்க்கார் வாகனத்தில் வருகிறோம். ஆனால் ,சென்னை நகரத் தெருவிலே பார்க்கிறேன் லட்ச ரூபாய் மதிப்புள்ள கார்கள் ஓடுவதை. மிக நீளமான காரர்கள் வைத்துக்கொண்டிக்கிறார்கள் சென்னை நகரத்தில். எங்கள் சொத்தை சர்க்கார் எடுத்துக்கொள்ளட்டும். முப்பது ஏக்கரைக்கூட சர்க்கார் எடுத்துக்கொண்டு எங்களையும் சென்னை நகரத்தில் குடியேற்றிவிட்டார்கள் என்றால், நாங்களும் சர்க்காரைப் போற்றக் கடைமைப்பட்டவர்களாக இருப்போம். தேர்தலில் எங்களுக்கும் சொல்லத் தெரியும். மக்களுடைய மனதை மாற்றுவதற்காக ஏதேதோ சொல்லிக் குழப்பிக் கொண்டிக்கிறார்கள். எதிர்க் கட்சித் தலைவர் திரு. ராமசாமி முதலியார் அவர்கள் எங்கள் கூட இருப்பதற்காக நான் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடைமைப்பட்டிருக்கிறேன். குடியானவர்களாகிய எங்களுக்கு இன்னும் அதிகமாக உரிமை இருக்க வேண்டும். நாங்கள் எல்லோரும் கட்டுப்பாடாக இருந்து வேலை செய்யாவிட்டால் உலகமே வாழ முடியாது. இந்த நிலைமையில் சர்க்கார் கொண்டுவந்திருக்கும் சட்டத்தை நாங்கள் வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்தச் சட்டத்தில் இன்னும் எங்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கவேண்டும். இந்த நிலையில் ஆர்பாட்டம் பண்ணுகிறார்கள் ஒரு சிலர். அதுவும் சாத்வீக ஆர்பாட்டம் என்கிறார்கள். கட்டுக்கு மீறிக் காரியம் செய்கிறார்கள். எது வேண்டுமென்றாலும், சட்ட மன்றத்திலே பேசலாம்.

அமைச்சர் அவர்களுக்கு நான் ஒன்று ஞாபகமூட்ட விரும்புகிறேன். எழுதிச் சம்பாதிக்கிறார்களே அவர்களுக்கு ஒரு உச்ச வரம்பு கொண்டு வரப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்கின்றேன். தேர்தல் வரட்டும்.

நாங்கள் சட்டமன்றத்திற்கு வருகிறோம். மீண்டும் இந்த நாட்டை ஆளப்போகிறோம். குடியானவர்களாகிய எங்களை ஏமாற்றி வாழ்கின்ற மக்களுக்கு உச்ச வரம்பு ஏற்படுத்த வழி செய்யவேண்டும் என்பதை அமைச்சர் அவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டுமென்று நான் மன்றுடிக் கேட்டுக்கொள்கிறேன். எங்களுக்கு மட்டுமா உச்ச வரம்பு? மற்றவர்களுக்கு இல்லையா? என்று நான் கேட்கிறேன். எனக்கு நான்கு பிள்ளைகள் இருக்கிறார்கள். ஒரு பிள்ளையைக் காலேஜில் படிக்க வைக்கவேண்டுமென்றால், மாதம் 500 ரூபாய் செலவாகிறது. ஐயாயிரம் ரூபாய் வருஷ வருமானம் உள்ள எனக்கு நான்கு பிள்ளையைப் படிக்கவைக்க முடியுமா என்பதைச் சர்க்கார் மனதிலே இறுதிப் பார்க்கவேண்டும் என்பதாக நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

சட்டம் நிறைவேறுகிற இந்த நேரத்தில், அமைச்சர் அவர்களையும், சட்ட இலாகா, ரெவினியூ இலாகா அதிகாரிகள், பொறுக்குக் குழுவினர் எல்லோருக்கும் இந்த மன்றத்தின் சார்பிலும், என் சார்பிலும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். குறிப்பாக, நண்பர் திரு. ராமசாமி முதலியார் அவர்கள் கடைசி வரையில் எங்களோடு ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அவருக்கும், தலைவருக்கும் நன்றியைத் தெரி வித்து என்னுடைய உரையை முடிக்கிறேன். வணக்கம்.

**Sri D. S. AUTHIMOOLAM:** இந்த மசோதாவைப் பற்றி பொதுவாக முன்பு சொன்னதையே இப்போது சொல்கிறேன். இது வெறும் குப்பைக் காகிதம். அதைக் கொஞ்சம் டிக்னிபைடாகச் சொல்லவேண்டு மென்றால் டெட் லெட்டர் என்று சொல்லலாம். ஏன் என்று சொன்னால் இந்த மசோதாவின் மூலம் பங்கிட்டுப் போட்டுக்கொடுக்க நிலம் கிடைக் கப்போவதில்லை. நிலத்ததைப் பற்றிப் பேசுவதற்கு கம்யூனிட்டுக் கட்சி ஒன்றுக்குதான் தகுதியுண்டு. இப்போது புதிதாக தி.மு.க. சேர்ந் திருக்கிறது. இன்றைக்குக்கூட வெளிநடப்பு செய்தார்கள். அதைப் பார்க்கிறபோது அவர்கள் பேச்சில் பசை இருக்கத்தான் செய்கிறது. நீங்கள் சட்டம் கொண்டு வந்தது—நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுக்கிற ஐதிகத்தில்தான். இப்போது இருக்கிற உச்சவரம்புப்படி எக்கரேஜ் ஜாஸ்தி வராது. பத்து அல்லது பதினைந்து ஏக்கர் என்று வைத்தால் ஏதோ கொஞ்சமாவது வரும் என்று சொல்கிறார்கள். அதுவும் இரண்டு லட்சம் அல்லது ஒண்ணரை லட்சம் தான் வரும். இதைக்கொண்டு நிலம் இல்லாதவர்கள் எல்லோருக்கும் கொடுக்க முடியாது. சென்னை ராஜ்யத்தில் தான் நிலம் இல்லாதவர்கள் ஜாஸ்தி. ஒன்று இவர்கள் ரோடின் வலப்பக்கம் போகவேண்டும், அல்லது இடப்பக்கம் போகவேண்டும். நடுரோடில் போனால் உயிருக்கு ஆபத்துதான். நடுரோடில் போவது போலத் தான் இந்த மசோதாவைச் சர்க்கார் கொண்டு வந்திருக்கிறார்கள். எனக்கு முன் பேசிய கனம் கரிய கவுண்டர் சொன்னதுபோல, சிறிய நிலச் சுவாந்தார்களையெல்லாம் நசுக்கிவிட்டார்கள். சாகுபடியாளர்களுக்காவது நன்மை செய்திருக்கிறார்களா என்றால் இல்லை. நன்மை செய்ய வேண்டு மென்றால் 10 ஏக்கருக்கு மேல் உச்ச வரம்பு வைத்திருக்கக்கூடாது. அதையும் இவர்கள் செய்யவில்லை. இப்படி அதுவும் இல்லாது, இதுவும் இல்லாது இவர்கள் செய்திருக்கிற காரியம் நடுரோடில் நடக்கிறமாதிரி யாகத்தான் அமைந்துவிட்டது. சிறுநிலச் சுவாந்தார்களும் ஒழிந்தார் கள். சாகுபடியாளர்களுக்கும் கொடுப்பதற்கு நிலம் கிடையாது. ஏதோ ப்ளானிங் கமிஷன் சொல்கிறது என்கிறார்கள். காந்திஜியின் கனவு, வினோபா ஜியின் பஜனை என்று இப்படியெல்லாம் சொல்லலாம். அதைத் தவிர இவர்களுக்கு இந்த மசோதாவைக் கொண்டு வருகிற எண்ணமே கிடை யாது. முன்பு கோழி, ஆடு வெட்டக் கூடாது என்று ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார்கள். ஆனால் அந்த மசோதாவை அமுல் நடத்தவே யில்லை. அதைப் போலவே இதையும் அமுல் நடத்தாமல் விட்டாலும் விடலாம். காரணம் இந்த மசோதா பற்றி அவர்களுக்கே தெளிவு இல்லை. முக்கியமாக கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் இங்கே கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தங்களுக்குப் பதில் சொல்கிறபோது

திணறுகிறார். அதுவும் இரண்டு நாள் முன்பு திரு. சுப்பிரமணியம் அவர்கள்—சிறந்த பேச்சாளர் என்று பெயர் பெற்ற வக்கீல், முக்கி முக்கிப் பேசிக்கொண்டிருந்தார். வாதிக்கும் பேசி, பிரதிவாதிக்கும் பேசுகின்ற மாதிரி இருக்கிறது இந்தச் சட்டம். ஆகவே தான் ஒன்றும் தெளிவே இல்லாது பேசினார்கள். ஏனென்றால் நிலச் சுவாந்தார்களுக்காகக் கொண்டுவரப் பட்ட சட்டம் என்றும் பேசுவார்கள்., விவசாயிகளுடைய நன்மைக்காக—சாகுபடியாளர்களின் நன்மைக்காக மட்டும் கொண்டுவரப்பட்ட சட்டம் என்றும் பேசுவார்கள்.

இப்பொழுது ஒன்று பாருங்கள். முதல் மந்திரி இங்கே இல்லை. டெல்லிக்குப் போயிருக்கிறார். தேசீய ஒற்றுமை மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக. எப்படியோ அவர்களுக்கு சுக்கிரதசை அடிக்கிறது ? அங்கே தேசீய ஒற்றுமை பற்றிப் பேச்சு, இங்கே திருவாங்கூரில் முஸ்லிம் லீகோடு கூட்டு. அதுபோல இப்போது சபையைவிட்டு வெளியேறியவர்களை வைத்துக்கொண்டே "பாருங்கள், நாங்கள் உங்களுக்காக 30 எக்கர் என்கிறோம், நாங்கள் இல்லாவிட்டால் உங்களுக்கு ஐந்து எக்கர் கூடக் கிடைக்காதே" என்று நிலச் சுவாந்தார்களிடமும் சொல்லிக்கொள் வார்கள். அதே சமயத்தில் சாகுபடியாளர்களிடம் சென்று, "பாருங்கள் நாங்கள் தான் உங்கள் நன்மைக்காக நில உச்சவரம்புச் சட்டத்தைக் கொண்டு வந்தோம்." என்று சொல்லி வோட்டு வாங்குவார்கள். உண்மையைச் சொல்லப்போனால் 1955-ம் ஆண்டு முதலே சிறுநிலச் சுவாந் தார்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொன்று வந்தார்கள். இப்போது 1961-இல் ஒரே அடியாக அடித்தாகிவிட்டது. இவர்கள் பதவியில் நிரந்தரமாக இருப்பதற்காக சிறுநிலச் சுவாந்தார்கள் சட்டினி ஆகிவிட்டார்கள். எடுத்துக் கொள்கிற நிலத்திற்காவது நஷ்ட ஈட்டை உடனே கொடுக்கலாம் என்றால் எதிர்க்கட்சிக்காரர்கள் எதிர்க்கப்போகிறார்களே என்று அதையும் வள வளவென்று விட்டிருக்கிறார்கள். அப்படியில்லாது உடனடியாக நஷ்ட ஈட்டை கொடுத்தாகவேண்டும். அதுவும் நியாயமான முறையில் கொடுத் தாகவேண்டும்.

12-30 p.m.

சிறிய நிலச்சுவாந்தார்கள் விஷயத்தில் உங்கள் வாக்கை மறந்து விட்டீர்கள். அரிச்சந்திரன் என்பவன் இந்த நாட்டில் பிறந்தான் என் பதை நீங்கள் மறந்து விட்டீர்கள். அவன், தன் வாக்கைக் காப்பாற்ற தன் மனைவி, மகனை விற்றான். ஆனால் நீங்கள் உங்கள் வாக்கை காற்றில் பறக்க விட்டு விட்டு பதவிதான் பெரிது, சிறு நிலச்சுவாந்தார் களுக்கு சொந்த சாகுபடி உரிமை கொடுத்துவிட்டால் இந்த சட்ட சபையில் 100க்கு 100 இடங்களை பிடித்துக்கொள்வது குறைந்து விடுமென்று நினைக்கிறீர்கள். அது தவிர, நியாயத்தை இந்த இடத்தில் நினைக்கவில்லை. உங்கள் கடமையை மறந்து விட்டீர்கள். காம்பன்சேஷன் விஷயத்தில் சரியான கொள்கையை கடைபிடிக்கவில்லை. ஆக இச்சட்டம் மூலம் என்னதான் செய்திருக்கிறீர்கள் என்றால் வீணை நேரம்போக்கான காரியங்களை நடத்தியிருக்கிறோமே தவிர நிலம் கொடுக்கப் போகிறதும் இல்லை, அப்படி கொடுக்கிறதாகயிருந்தாலும் அது குறைந்த அள விற்குத்தான் இருக்கும். உதாரணமாக, எஸ்டேட்டில் அபாலிஷன் ஆக்ட் 1948-ல் வந்து விட்டது. அதன் மூலம் ராயத்துவாரி பட்டா வழங்க, நம் மாநிலத்தில் கிட்டத்தட்ட 3,000 இனம் ஒழிப்பு கிராமங்கள் இருந்தால் அதில் 1,000 கிராமங்களுக்குத்தான் முடிவு ஏற்பட்டிருக்கிறது. கிட்டத்தட்ட 12 வருடங்களாகிறது. இனம் ஒழிப்பு சட்டத்தை சரியான முறையில் அமுல் நடத்தி அதனால் ரயத்துவாரி பட்டா உரிமை வழங்க, அதிலுள்ள விவசாய மக்களுக்கு உங்களால் நன்மை செய்யமுடியவில்லை. 12 வருடங்களாகியும், அங்குள்ள விவசாய மக்களை இனம்தார் பிடி யிலிருந்து காப்பாற்ற முடியாத அளவிற்கு அவர்களுக்கு பெருத்த கஷ்டங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. எவ்வளவோ கேஸ்கள் முன்சீப் கோர்ட் முதல் சுப்ரீம் கோர்ட் வரை போய்க்கொண்டிருக்கிறது. அந்தமாதிரி நிலங்களை எடுத்து பயிரிடுபவர்களுக்கு உதவி செய்திருக்கலாம். இக்காரி யங்களில் நீங்கள் தவறி விட்டீர்கள். புதிதாக இந்த மசோதாவை

வைத்துக்கொண்டு என்ன காரியம் செய்ய நினைக்கிறீர்கள் ? கடைசியாக நான் கேட்டுக்கொள்வதென்னவென்றால்—பெரிய மிராசுதார்களை கஷ்டப்படுத்திவிட்டாலும் கவலையில்லை, அப்படி இந்தச் சட்டம் மூலம் அவர்களுக்கு எவ்வித கஷ்டமும் வந்து விடவில்லை. இன்னொரு நியாயம் கேட்கிறேன். முதல் அமைச்சர் அவர்கள் இங்கு இல்லை. இந்தச் சட்டத்தைத் திருத்த அவர்கள்தானே உங்களிடம் சொல்லியிருக்கவேண்டும். காபினட் ராங்கில் முடிவு செய்யப்படுகிறதென்று கூறினாலும் முழுப் பொறுப்பும் அவர்களுக்குத்தான். 55-வது ஆண்டு சாகுபடி உரிமைச் சட்டப்படி ஒருவர் 100 ஏக்கர் சொந்தப் பயிர் வைத்தாலும் அவருக்கு உரிமையுண்டு. ஆனால் இந்த உச்ச வரம்பு வந்தால் 30 ஏக்கர்தான் சொந்தப் பயிர் வைத்துக்கொள்ளமுடியும். வசதியுள்ளவர்கள் 30 ஏக்கர் வைத்துக் கொள்ளலாம், அப்படித்தானே ? தப்பித் தவறி பயிருக்கு கொடுத்துவிட்டு வெளி ஊருக்கு போய் வந்தவர்கள் அல்லது சிறிய நிலச்சுவாந்தார்கள் பயிருக்கு கொடுத்திருந்தால் பழையபடி பயிர் வைக்க முடியாது என்றிருந்தால் எந்த அடிப்படையில் இந்தச் சட்டத்தை திருத்தினீர்கள் என்று நீங்கள் ஜவாப் சொல்லியாகவேண்டும். இந்த ஒரு இஷ்யூவில் நான் சக்தியற்றவனாகயிருந்தபோதிலும் உங்களோடு சேர்ந்து "பைட்" செய்யமுடியும் என்று சொன்னேன். ஆகவே இந்த விஷயத்தில் நான் ரெவனியூ அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். டெல்லிக்கு ஒரு அர்ஜன்ட்—ஸ்பெஷல் கால் போட்டு—டெலிபோன் அக்ட் பற்றி எனக்கு ஜாஸ்தி தெரியாது—ஒரு அர்ஜன்ட் கால் போட்டு, இது அரிச்சந்திரன் பிறந்த நாடு என்று ஆதிமூலம் சொல்றான் ஆகவே வாக்குறுதியை நாம் நிறைவேற்றிவிடுவோம், நமக்கு கடமைதான் பெரிதே யொழிய, கர்மம்தான் பெரிதே தவிர வேறொன்றுமில்லை,—பகவத் கீதையை ஜனாதிபதி கென்னடிக்குக்கூட கொடுத்திருக்கிறீர்கள்—அந்த பகவத் கீதை என்ன சொல்கிறது ? உன் கடமையைச் செய், பலனை எதிர்பார்க்காதே என்கிறது. உங்கள் கடமை என்ன ? உங்கள் கடமை வோட் பிடிக்கும் கடமையா. சிறு நிலச்சுவாந்தார்களுக்கு உரிய உரிமை அளிக்கப்படவேண்டும். உங்களுக்கு பதவிதான் பெரிதா ? ஆகவே நியாயத்தை மறந்து விடாமல் டெல்லிக்கு ஒரு அர்ஜன்ட் போன் கால் போட்டு, இந்த சட்டத்தை அடுத்த சட்டசபையில் நிறைவேற்றிக் கொள்ளலாம், சிறு நிலச்சுவாந்தார்களுக்கு விலக்கு அளிப்போம். ஆதிமூலம் தொகுதியில் நம்மை சாலெஞ்ச் செய்கிறான் என்று சொல்லி நியாயத்தை வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**SRI T. R. RAMAMIRTHA THONDAMAN:** உதவி சபாநாயகர் அவர்களே, நிலச் சீர்திருத்தச் சட்டம், நில உச்ச வரம்பு மசோதாவை பாராட்டி நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். விவசாயிகளுக்கும் உழுபவர்களுக்கும் உரிமை அளிக்கப்படவேண்டி ஒரு போராட்டத்தையும் ஒரு கிளர்ச்சியையும் செய்ய அவர்களுககு உரிமைவேண்டும் என்பது பற்றியும் உழுபவனுக்கே நிலம் சொந்தம், உழுபவனே தனது உழைப்பின் பயனை அனுபவிக்க வேண்டும் என்ற கருத்தையும் காந்திஜி அவர்களும், கவி பாரதி அவர்களும் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அதேபோன்று பின்னால் தமிழ் நாட்டு காங்கிரஸ் கமிட்டித் தலைவராயிருந்த திரு. காமராஜ் அவர்களும், திரு. ஆர். வெங்கடராமன் அவர்களும் தலைமை வகித்து தமிழ்நாட்டு விவசாயத் தொழிலாளர்களுக்கும், ஏனைய தொழிலாளர்களுக்கும் பிரதிநிதியாகயிருந்து 20, 30 ஆண்டு காலங்களுக்கு முன்பாக தஞ்சை ஜில்லாவில் நாயுடு அவர்கள் தலைவராகவும், நான் உப தலைவராகவும் தமிழ்நாட்டில் திரு வெங்கடராமன் அவர்கள் தலைவராகவும், கும்பகோணம் தாலுகாவில் நான் தலைவராகவும் இருந்து பல போராட்டங்கள் நடந்திருக்கின்றன. 50 ஆண்டுகளாக விவசாயிகளுக்கும் நிலச் சொந்தக்காரர்களுக்கும் இடையே மோதல் ஏற்பட்டு அதன் பயனாக ஏற்பட்ட மாயவரம் ஒப்பந்தம் என்ற அடிப்படையில் 100-க்கு30 கலம் வரும். பின் தேசிய பற்றற்ற நிலையில் காந்திஜியின் கருத்து பூர்ணமாக நிறைவேற்றப் படுவதாகயிருந்தபோதிலும், மக்களிடையே அது செயல்படாதிருக்க, அந்நியனுக்கு துணையாக, தேசிய ஐக்கியத்திற்கு விரோத

[Sri T. R. Ramamirtha Thondaman] [29th September 1961

மாக மன்னார்குடி ஒப்பந்தம் என்று செய்து கொண்டிருக்கிறார்கள் 27 என்று. உண்மையிலே இந்த நாட்டிலுள்ள விவசாயத் தொழிலாளர்களின் நன்மைக்காக, உழுபவர்களின் நன்மைக்காக, பாடுபடுகிறவர்களின் நன்மைக்காக, பாமர மக்களின் நன்மைக்காக பாடுபட்டு, மக்களைக் காட்டிக் கொடுக்காது சிறை சென்று போராடி அவர்களுக்குள்ள உரிமையைப் பெற்றது காங்கிரஸ் இயக்கம். மக்களை காட்டிக்கொடுத்த தலைவர்கள் தலைமறைவாக இருக்க வேண்டுமென்று மக்களைக்குழப்பத்தில் ஆழ்த்திவிட்டது பலாத்கார முறையில் இருந்த இயக்கம். நீண்ட காலமாக, விவசாயிகளின், பாமரர்களின் உழுபவர்களின் உரிமை பாதுகாக்கப்பட வேண்டுமென்று நாங்கள் சொல்லி வந்திருக்கிறோம். அப்படிப்பட்ட தலைவர்களின் பட்டியலில் வருகிற என் போன்ற ஊழியர்கள் இருக்கும் இந்த சட்ட மன்றத்தில் திரு. ஆதிமூலம் போன்றவர்கள் யாரோ உழுபவர்களுக்காக போராடுகிறார்கள் என்று அறியாமையால் அவர்கள் எங்கேயோ ஒரு தொழில் நடத்துகிற பார்வையில் பேசுவதைக் கண்டு வருந்துகிறேன். அவர்கள் சொன்னார்கள், இதை வைத்துக்கொண்டு இந்நாட்டில் தேர்தலில் போட்டியிடட்டும் என்று. நான் சவால் விடுகிறேன். என் தொகுதியில் அவரல்ல, அவரைவிட எத்தனை தலை படைத்தவர்கள் வந்தாலும் அவர்கள் லட்சக்கணக்கில் செலவிட்டுப் பார்க்கட்டும், அவர் டெப்பாஸிட் திரும்ப வாங்கினால் நான் தூக்கிட்டு தொங்குகிறேன் என்று சவால் விடுகிறேன். இந்த நாட்டிலுள்ள ஏழை எளியவர்கள் அத்தனை பேர்களுக்கும், உழுபவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் நல்லதொரு வாழ்க்கை நடத்த வேண்டியதற்குரிய வழிவகை வகுத்துக் கொடுத்து, பொருளாதார ஏற்றத் தாழ்வை போக்குவதற்கும், மனிதன் மானத்தோடு வாழ்வதற்கும், அறியாமையைப் போக்குவதற்கும் அவதார புருஷராக இன்று தோன்றியிருக்கக்கூடிய நமது முதல் அமைச்சர் திரு. காமராஜ் அவர்கள் 100-க்கு 95 பங்கு கர்ம வீரர் என்றும், கர்ம வீரர் காமராஜ் என்றும் மக்கள் ஒத்துக்கொள்கிறார்கள். இதையெல்லாம் மக்கள் நன்றாக உணர்ந்துவிட்டார்கள். அதை அறிந்து தான் சட்டசபையில் பலர் பல கருத்துக்களைத் தெரிவித்த போதிலும், முடிவு எப்படியிருக்கவேண்டும் என்பதைப் பார்த்து எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய அளவில், ஒரு ஏழைகூட இதில் பாதிக்காமல் இருக்க வேண்டும், இதன் மூலம் ஏழைகள் நன்மை பெற வேண்டும், நாமும் அவர்களுக்கு நன்மை செய்தவர்களாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு தான் இந்தச் சட்டம் உருவாக்கப்பட்டு நிறைவேற்றப் பட்டிருக்கிறது. இந்தச் சட்டமன்றத்தில் எல்லோரும் பெருவாரியாக ஒப்புக்கொள்ளக்கூடிய வகையில் இந்தச் சட்டம் வந்திருக்கிறது என்று சொன்னால், அதை நான் மட்டுமல்ல, என் தலைமையில் இருக்கக்கூடிய தஞ்சை ஜில்லாவிலுள்ள விவசாயிகள், உழவர்கள் இவர்கள் எல்லோரும் இந்தச் சட்டத்தைப் பாராட்டுகிறார்கள் என்பதை நான் உறுதியாகக் கூற விரும்புகிறேன். இம்மாதிரியான சட்டம் கொண்டுவருவதின் காரணமாக நிலமே இல்லாமல் போய் விடும் என்று பலர் சொன்னார்கள். இந்தச் சட்டம் பலன் தரவில்லை என்று கூறி வெளி நடப்பு செய்த பலர் விவசாயிகளைப்பற்றி என்ன எண்ணிக்கொண்டிருக்கிறார்கள் என்றே தெரியவில்லை. சினிமா உலகில் நபர் ஒன்றுக்கு ஐந்து அல்லது நான்கு என்கிற வகையில் 20 ஆயிரம் அல்லது 10 ஆயிரம் என்று லாபம் சம்பாதித்துக்கொண்டிருப்பவர்கள் எல்லாம் விவசாயிகளைப்பற்றி நன்கு புரிந்திருக்கமாட்டார்கள் என்பதை விவசாயிகள் நன்கு புரிந்து கொண்டிருக்கிறார்கள். இன்றைய தினம் விவசாயிகள் முட்டாள்கள் அல்ல, அவர்கள் அறியாதவர்கள் அல்ல, அவர்களுக்கு எல்லாம் 10-வது வரை இலவசமாக படிப்பதற்கு வசதி செய்து கொடுத்திருக்கின்ற காலத்தில் அவர்கள் இதையெல்லாம் நன்கு புரிந்துகொள்வார்கள். இது மாதிரியான சினிமா, நாடகத்தைக்கண்டு எந்த விவசாயியும் ஏமாந்துவிடப்போவதில்லை என்பதை நான் திட்டவட்டமாக தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதோடு முக்கியமாக ஒன்றிரண்டு ஏக்கர் என்று மட்டுமல்ல, எத்தனை ஏக்கர்கள் இருந்தாலும் தாங்களாக அனுபவித்துக்கொண்டிருந்த நிலத்தை எடுத்துக்கொள்வதுஎன்றால், பிறந்த உடமைய தன் குழந்தை இறந்துவிட்டால் எவ்விதம் ஒரு அதைரியமும்,

எக்கமும் ஏற்படுகிறதோ அதேபோன்று நிலத்தை உடனே எடுத்துப் பிரித்து கொடுத்துவிட்டால் இம்மாதிரியான ஒரு எக்கமும் அதைரியமும் ஏற்படும் என்று கருதித்தான் அதற்குத் தகுந்த முறையில் நாம் சட்டத்தை அமைத்திருக்கிறோம். அதற்கு விரோதமாகச் செய்வது ஜனநாயகத்தை கொண்டிருக்கிற நமக்கு, மகாத்மா வழியில் வாரிசாக வந்திருக்கிற நமக்கு அழகல்ல. நிலங்களை அதிகமாக வைத்திருக்கின்றவர்கள் அவர்களாகவே தங்கள் நிலத்தைக் குறைத்துக் குறைத்து தங்களுக்குஅதிகமான அளவில் நிலம் வேண்டாம் என்று சொல்லி தங்கள் நிலத்தில் ஒரு பகுதியை கொடுத்துவிடுவார்கள் என்ற கருத்துடன் அதற்காக நிலச்சொந்தக் காரர்கள் பக்கம் வாதாடக்கூடிய எனது மதிப்பிற்குரிய திரு. சீனிவாச அய்யர், திரு. ராமசாமி முதலியார் போன்றவர்கள் ஆரம்பத்தில் இந்தச் சட்டம் நல்லதாக அமையவில்லை என்று சொன்னாலும்கூட, பின்னால் மனமாற்றம் ஏற்பட்டு அவர்களெல்லாம் வரவேற்கக்கூடிய வகையில் அமைந்திருக்கிறது என்று சொன்னால் நிச்சயமாக ஏழைகள் நல்ல முறையில் இதன் காரணமாகப் பயன்பெற வேண்டும் என்ற கருத்துடன்தான் இது போன்ற சட்டங்கள் உருவாகியிருக்கின்றன. இனிமேலும் இம்மாதிரி உருவாகும். நிலச் சொந்தக்காரர்களுக்கும் உழுபவர்களுக்கும் மத்தியில் 50 ஏக்கர், 100 ஏக்கர், 200 ஏக்கர், 400 ஏக்கர் என்று குத்தகைக்கு எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் எத்தனையோ பேர்கள் எங்கள் பகுதியில் இருக்கிறார்கள். அவர்களுக்கு எல்லாம் இன்றுள்ள சட்டத்தின்படி ஐந்து ஏக்கர் கொடுத்துவிட்டு மீதியுள்ளதை எடுத்தால் என் தொகுதியைப் பொறுத்த அளவில் 3,000 ஏக்கர் அல்லது 4,000 ஏக்கர் எடுக்க முடியும். இம்மாதிரி எடுக்கக்கூடிய நிலங்கள் எல்லாம் அந்தப் பகுதியில் உழுது கொண்டிருக்கிற விவசாயிகளுக்குத்தான் கிடைக்கப்போகிறது. (மணி யடிக்கப்பட்டது.) இன்னும் ஒன்றிரண்டு நிமிடங்களில் முடித்துவிடுகிறேன். அமைச்சர் அவர்களிடம் ஒரே ஒரு விளக்கம் மட்டும் கேட்க விரும்புகிறேன். இன்றைக்கு தேவஸ்தான, மடாலயங்களுக்குச் சொந்தமான எத்தனையோ ஏக்கர் நிலங்களை குத்தகைக்காரர்கள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலங்களை எல்லாம் இப்போதே நாம் கொண்டு வந்திருக்கின்ற சட்டத்தின் மூலம் எடுக்க முடியுமா அல்லது தேவஸ்தான, மடாலயங்களுக்கு என்று தனியாக ஒரு சட்டம் கொண்டு வந்ததன் பின்னால்தான் எடுக்க முடியுமா என்கிற கருத்தை விளக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே நேரத்தில் இதற்கான ஒரு சட்டத்தைக் கொண்டுவருகின்ற காலத்தில் ஏராளமான மக்கள் எங்கள் பக்கத்தில் மடாலய தேவஸ்தான சொத்துக்களைக் குத்தகைக்கு எடுத்து சாகுபடி செய்து கொண்டிருப்பதால், எங்களையும் கலந்து இந்தச் சட்டத்தை உருவாக்கவேண்டும் என்றும், மற்ற தொழிலாளர்களுக்குக் கொடுத்து வருவது போன்று விவசாயத் தொழிலாளர்களுக்கும், வீட்டு மனை வசதி செய்து கொடுக்க வேண்டும், அதோடு அவர்களுக்கும் கூலி நிர்ணயம், வேலை நேரம் இவைகளை வரையறை செய்கின்ற அளவில் ஒரு சட்டத்தையும் கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவ்விதம் ஒரு சட்டம் கொண்டு வருவோமானால், இன்றைக்கு கிராமங்களில் கூட்டுறவு அமைப்பில் விவசாயிகளுக்கு கடன் வசதிகளைச் செய்து பலவிதமான தொழில்களையும் பெருக்கி, அதன் மூலம் விவசாயமும் வேறு தொழில்களும் பெருகி ஒன்று சேர்ந்து அதன் மூலம் சுபிட்சம் ஏற்பட்டு நாடு நல்ல முறையில் பிரகாசிக்கும், அதன் மூலம் உணவு உற்பத்தி பெருகவும், மக்கள் சுபிட்சமாக வாழவும் முடியும். 1950-ல் ஆறு அவுன்ஸ் உணவு இருந்த நிலைமை மாறவேண்டும் என்று கேட்டுக்கொண்ட நேரத்தில், உற்பத்தி பெருக வேண்டுமானால், நிலம் உழுபவனுக்கு சொந்தமாக்கப்பட வேண்டும் என்று அன்றையதினம் சொன்ன கருத்திற்கிணங்க, அந்த அடிப்படையில் பல சட்டங்களைக் கொண்டுவந்து நாம் இன்றைக்கு இந்த உச்ச வரம்பு சட்டத்தையும், கொண்டு வந்திருக்கிறோம். இந்த நாட்டினுடைய உணவு உற்பத்திக்கு முதுகெலும்பாக இருப்பது இந்த நாட்டிலுள்ள விவசாயிகள்தான். இந்த நாட்டில் உணவு உற்பத்தி பெருகுவது எல்லாம் அவர்களுடைய மனமகிழ்ச்சியைப் பொறுத்துத்தான் இருக்கிறது. அந்த முறையில் விவசாயிகள், உழவர்கள் அனைவரும்

[Sri T. R. Ramamirtha Thondaman] [29th September 1961

பாராட்டக்கூடிய வகையில் இந்தச் சட்டம் அமைந்திருக்கிறது. இம்மாதிரியான ஒரு சட்டத்தைக் கொண்டு வருவதற்கு கர்த்தாவாக இருந்த முதல் அமைச்சர் அவர்களை இந்த சந்தர்ப்பத்தில் பாராட்டி என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

*Sri V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச்சட்டம் இந்த சபையில் கொண்டு வரப்பட்டு ஒரு வார காலமாக விவாதிக்கப்பட்டு அதில் பல அங்கத்தினர்கள் பல கருத்துக்களைப் பேசினார்கள். என்னைப் பொறுத்த மட்டில் இந்தச் சட்டம் அரசியல் சட்டத்திற்கு முரணானது, ஒரு மனிதனுடைய உரிமையை பறிக்கக் கூடியது என்பது தான். இதன் காரணமாக பின்னால் இது ஒரு பெரிய ஏமாற்றத்தைக் கொடுக்கப்போகிறது. இதைப்பற்றி நான் முன்பும் பல தடவை வற்புறுத்திச் சொல்லிவந்திருக்கிறேன். இப்போது இருக்கின்ற கருத்து என்னவென்றால் லட்சக்கணக்கான ஏக்கர்கள் சிலரிடத்தில் குவிந்து கிடப்பது போலவும் அதை எடுத்து ஆளும் கட்சியினர் விநியோகம் செய்வதற்குத் தயாராக இருப்பது போலவும், நாங்கள் எல்லாம் இவ்விதம் செய்யக்கூடாது என்று தடுப்பது போலவும் வெளியில் மக்களிடையே ஒரு தவறான கருத்து இருந்துகொண்டிருக்கிறது. எப்படியிருந்த போதிலும், இது மக்களுக்கு கூடிய சீக்கிரத்தில் ஒரு பெரிய ஏமாற்றத்தை கொடுக்கப்போகிறது என்று சொல்லுவதைத்தவிர இதில் அதிகமாக ஒன்றும் சொல்வதிற்கில்லை. இதன் முடிவு இப்போது தெரியாது, 1967-வது வருஷம் தான் தெரியும். அடுத்த எலக்ஷன் சமயத்தில் இந்த ஏமாற்றம் தெரியாது. ஏனென்றால் ஒரு சில வர்க்கத்தினர் இதன் காரணமாக ஒழிக்கப்படவேண்டும், நிலச்சுவான்தார்கள் அதிகம் பேர்களையும் ஒழிக்கவேண்டும் என்று கருதுகிறார்கள். இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதினால் என்ன முடிவு ஏற்படும் என்பதை சர்க்கார் சற்று ஆலோசிக்கவேண்டும். இதில் முக்கியமாக இப்போது அனேக குடும்பங்கள் பிரிந்துகொண்டிருக்கின்றன. மேலும் இந்தச் சட்டத்தின் மூலமும் பல குடும்பங்கள் பிரிந்து விட்டன. இன்னும் சிலர் இதில் தெரிவிக்கின்ற ஆட்சேபணை என்னவென்றால் 10 வருடம் அல்லது 5 வருடம் முன்னாலேயேயிருந்து இந்த சட்டம் அமலாக்கப்பட்டதாக கருத வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஒருவர் 100 ஏக்கர் அல்லது 50 ஏக்கர் தன்னுடைய சொத்தைப் பிரித்துக் கொடுக்கிறார்கள் என்றால் அவனுடைய சொந்த சொத்தை எடுத்துத்தான் பிரித்துக்கொடுக்கிறான். பிறருடைய சொந்த சொத்தை கொடுக்கவில்லை, அப்படி கொடுக்கவும் முடியாது. இவ்விதம் 30 ஏக்கர் என்ற முறையில் பிரித்து கொடுக்கவேண்டும் என்பது தான் சர்க்காருடைய நோக்கமும். ஆகவே இவ்விதம் பிரித்துக் கொடுப்பதால் ஓரளவுக்கு சர்க்காரின் பளு குறைகிறது என்றே சொல்லலாம். இதில் என்ன தப்பு இருக்கிறது என்று எனக்கு விளங்கவில்லை. இம்மாதிரியான சட்டங்களைக் கொண்டுவந்து நிறைவேற்றியிருக்கிறோம். இதன் காரணமாக எல்லோருக்கும் நிலம் கிடைக்கும் என்று தேர்தல் பிரசாரம் வேண்டுமானால் செய்யலாம். உண்மையில் இதில் எவ்வளவு நிலம் கிடைக்கும் என்றுள்ள புள்ளி விவரம் எடுக்கவேண்டும். இதற்காக ஸ்டாப்பை ஏற்படுத்தி இதற்கான புள்ளி விவரத்தை எடுத்து, அதன் மூலம் எவ்வாறு பிரித்துக்கொடுக்கமுடியும் என்பதை சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்தப் புள்ளி விவரங்களை எடுத்து சேகரிக்கவேண்டுமென்றால் குறைந்தது 3, 4 வருஷங்களாகிவிடும் என்பதை என்னுடைய அனுபவத்திலிருந்தே சொல்ல முடியும். இந்த மசோதா பொறுக்குக் கமிட்டியிலே இருக்கும்போதே சர்க்கார் அதிகாரிகளை—செக்ரெட்டரி, ரெவின்யூ டிபார்ட்மெண்ட் அவர்களை கேட்டேன். அதாவது இந்தச் சட்டத்தினால் எவ்வளவு நிலம் மிச்சப்படும், எத்தனை ஆயிரம் அல்லது எத்தனை லட்சம் ஏக்கர்கள் மிச்சப்படும் என்று கேட்டேன். இதைப்பற்றி புள்ளி விவரம் எடுக்க எத்தனையோ வருஷங்கள் ஆகும், ஆகையால் அந்த மாதிரியான புள்ளிவிவரங்களை எடுக்கவில்லை என்று சொன்னார்கள். ஃபார்மர்ஸ் ஃபோரம் (Formers Forum) என்று ஒரு அஸோஸியேஷன் இருக்கிறது. அதிலும் நான் ஒரு அங்கத்தினராக இருந்தேன்

அவர்கள் 30 லட்சம் ஏக்கர் வரையில் நல்ல முறையில் உழவு செய்யக் கூடிய புறம்போக்கு நிலங்களும் மற்ற நிலங்களும் இருக்கின்றன என்று சொன்னார்கள். அவைகளைப் பிரித்து எல்லாருக்கும்—நிலம் இல்லாதவர் களுக்கு—கொடுப்பதற்கு அதற்கான புள்ளி விவரம் எடுத்து அந்த முறையில் வினியோகம் செய்திருக்கலாம். அது ஒன்றும் இல்லாமல் லட்சக் கணக்கான ஏக்கர்கள் நிலம் இருப்பதாகவும், எல்லாவற்றையும் பிரித்துக் கொடுப்பதாகவும் பேசுகிறார்கள். இன்றைய தினம் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்களும், திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களும் வெளியேறினார்கள். நானும் 50 ஏக்கர் கொடுக்கவில்லை என்று வெளி யேறி இருக்கலாம். இருந்தபோதிலும் இந்தச் சட்டம் அரசியல் சட்டத் திற்கு முரணானது, மக்களை ஏமாற்றுவதற்காகக் கொண்டுவரப்பட்டுள்ள சட்டம் என்று கடைசி கட்டம் வரையில் எடுத்துச் சொல்வதற்காகத் தான் நான் வெளியேறவில்லை. இது ஓட்டு வாங்குவதற்கு கொண்டுவரப்பட்டுள்ள சட்டம் என்று எதிர்க் கட்சிகளில் இருக்கக்கூடியவர்கள் சொன்னார்கள். அதையே தான் நானும் சொல்லுகிறேன். இது ஓட்டு வாங்குவதற்கு தான் கொண்டுவரப்பட்டுள்ளது. இதனால் ஒரு சென்ட் நிலம் கூட மக்க ளுக்குக் கிடைக்கப் போவதில்லை என்று மறுபடியும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

இதிலே நிலத்தை வைத்துக்கொண்டிருப்பவர்களுடைய அனுபவத்தைப் பார்த்தால்—நானும் ஒரு விவசாயி—இதிலே எவ்வளவோ துன்பங்களுக்கு உட்பட்டு—சிறிய நிலச்சுவானாக இருந்தாலும், பெரிய மிராசுதாராக இருந் தாலும்—அநேக வித கஷ்டங்களுக்கு உட்பட்டு சாகுபடி செய்து வருகிறார்கள். சாகுபடி செய்வதற்கான காஸ்ட் எவ்வளவோ அதிகமாகியிருக் கிறது—பல மடங்கு அதிகமாகியிருக்கிறது. அவர்களுக்கு காலாகாலத்தில் மழை இல்லாத தொந்திரவு, இரும்பு, உரம் முதலியன கிடைக்காத கஷ்டம், விலைவாசி அதிகம் காரணமாக மாடுகளின் விலை அதிகமாகிக் கொண்டிருப்பது, பயிர்களைப் பூச்சி அழிப்பது போன்ற இம்மாதிரி பல கஷ்டங்களுக்கு உட்பட்டு, வேறு வழியில்லாத காரணத்தினால், நிலத்தில் பாடுபட்டு கஷ்டப்பட்டு பயிர் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு உற்பத்தி செய்வதில் இருக்கக் கூடிய உற்சாகம் காரணமாகத்தான் உணவுப் பொருள்கள் உற்பத்தி நல்ல முறையில் செய்யப்பட்டு வருகிறது. இன்னும் இதிலே கிஸான் தொந்தரவு (**Kisan troubles**) சில இடங்களில் உண்டு. இம்மாதிரியான நிலைமை காரணமாக பல பேர்கள் பாதிக்கப்படு கிறார்கள். ஒரு தொழிற்சாலை இருக்குமிடத்தை எடுத்துக்கொள்வோ மானால் அதன் சுற்றுப்புறத்தில் விவசாயத்தை நல்ல முறையில் செய்ய முடிவதில்லை. விவசாயக் கூலி கட்டுபடியாகவில்லை என்று யாவரும் வேலை செய்ய முன்வர மறுக்கிறார்கள். இன்னும் இண்டஸ்ட்ரீஸ் கிராமத்தில் இருக்கவேண்டும், கிராமத்தில் இருந்தால்தான் நல்லது என்று தேச பிதா சொன்னார்கள்—இன்னும் அநேக அமைச்சர்கள் சொல்லி வருகிறார்கள், உண்மை. இன்றைய தினம் பார்த்தால் அநேக கிராமங் கள் நசித்துப் பாழாகிவிட்டன, விவசாயிகளுக்கு உற்சாகம் குன்றிவிட்டது. அநேக கஷ்டங்கள் காரணமாக நாட்டுப்புறத்தைவிட்டு விவசாயிகள் வெளியேறுகிறார்கள், நகரப்புறங்களுக்கு வருகிறார்கள். பெரிய தொழிலை வைத்திருப்பவர்களைப் பார்த்தால் அவ்விடத்தில் சம்பாதிக்கும் லாபத்தை வைத்து பெரிய பெரிய பண்ணைகளை வைத்து உற்பத்தி செய்கிறார்கள். அநேக மேல் நாடுகளில் பார்த்தால் அநேக ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை மெக்கனைஸ்ட் கல்ட்டிவேஷன் (**Mechanised cultivation**) என்று மெஷின்கள் வைத்து சாகுபடி செய்து உற்பத்தியைப் பெருக்கு கிறார்கள். இப்படியில்லாவிட்டாலும் பிளானிங் கமிஷனிலே நல்ல முறையில் சாகுபடி செய்கிறவர்களுக்கு விலக்குக் கொடுக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அதுவும் இந்தச் சட்டத்திலே புறக்கணிக்கப்பட் டிருக்கிறது. கனம் அமைச்சர் அவர்கள் பதிலில் என்ன சொல்லுவார்களென் றால் எப்படி நல்ல முறையில் சாகுபடி செய்கிறார்களா இல்லையா என்று பார்ப்பது, அந்தமாதிரி விதி விலக்கு கொடுக்கவேண்டும் என்ற அபிப் பிராயம் இருந்தபோதிலும், அதன் காரணமாக பல கோளாறுகள்

வரும் என்று சொல்வார்கள். அப்படி இல்லை. விவசாய டிபார்ட்மெண்ட் மூலமாக இத்தனை ஆயிரம் பவுண்டு சாகுபடி செய்தால் அது நல்ல சாகுபடி என்று திட்டவட்டமாகச் சொல்லலாம். இதைப் பற்றி கண்காணிக்க இலாகாவில் ஆட்கள் இருக்கிறார்கள். திட்டக் கமிஷன் சொல்லியிருந்தும் கூட அதைச் சேர்த்து நல்ல முறையில் உற்பத்தி செய்ய ஒரு வாய்ப்பைக் கொடுக்கவில்லை.

அடுத்தபடியாக 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று கண்டிருக்கிறது. முக்கியமாக செங்கற்பட்டு, வட ஆற்காடு, ராமநாதபுரம், சேலம் ஆகிய பிராந்தியங்கள் மிகவும் வரண்ட பிரதேசம். ரொம்பவும் கஷ்டப்பட்டு கிணறு எடுத்தாலும் போதுமான ஜலம் கிடையாது. பல கஷ்டங்களுக்கு உட்பட்டு சாகுபடி செய்யவேண்டுமானால் நஞ்சை ஒரு ஏக்கருக்கு 100 ரூபாய்க்கு மேல் மிச்சப்படாது. இது எனது சொந்த அனுபவம். இதை நான் புள்ளி விவரங்களோடு நிரூபிக்கத் தயாராக இருக்கிறேன். வருஷத்திலே 3,600 ரூபாய் வருகிறது என்று வைத்துக் கொண்டாலும் இப்போது ரூபாயின் மதிப்பு 4 அணா தான் இருக்கிறது. இன்ஃப்ளேஷன் (inflation) காரணமாக 3,600 ரூபாய் வருகிறது என்று வைத்துக் கொண்டாலும் அதன் மூலமாக 5 பேர்கள் கொண்ட குடும்பத்தை வைத்துக் கொண்டு நல்ல முறையில் பரிபாலிக்க முடியுமா? குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லிக்கொடுக்க முடியுமா? வைத்திய வசதிகளெல்லாம் செய்துகொள்ள முடியுமா? இதைப் பற்றி கொஞ்சம் யோசிக்க வேண்டும். விவசாயி விவசாயியாகவே தலைமுறை தலைமுறையாக இருக்கவேண்டுமா? வேறு தொழில் செய்து படிப்பு மூலமாக ஏன் அவர்களும் முன்னேறக் கூடாது என்று கேட்கிறேன். இப்போது பே கமிஷன் வைத்தோம். அவர்கள் யோசனைப்படியே பே ஸ்கேலை மாற்றி அமைத்தோம். உத்தியோகஸ்தர்களுக்கெல்லாம் சம்பளத்தை அதிகம் செய்திருக்கிறோம். இன்னும் டியர்னெஸ் அலவன்ஸ் போட்டுக் கொடுத்திருக்கிறோம். அமைச்சர்களுக்குத் தெரியும். விலைவாசி அதிகமாக இருப்பதன் காரணமாக, தங்களுடைய அனுபவத்திலிருந்தே, தங்களுடைய வருமானத்திலிருந்தே, இந்தத் தொகை போதுமா என்று சிந்தித்துப் பார்த்திருக்க வேண்டும் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். நான் சொன்னது 50 ஏக்கர் இருக்க வேண்டும் என்பது. அதுவே ரொம்பவும் மாடஸ்ட்டாகச் சொன்னது. எங்கள் மாவட்டத்தைப் பார்த்தால் ஒன்றுமே கட்டுபடியாகாது. பின்னிட்டு இன்னும் குறைந்தாலும் குறையலாம். இந்த மாதிரி போட்டிருப்பதால் அநேகம் பேர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். ஐ.ஸீ.ஏ.ஆர். என்று டெல்லியில் ஒரு ஆர்கனைஸேஷன் இருக்கிறது. அதிலும் நான் அங்கத்தினராக இருந்தேன். அதிலே இருக்கக் கூடிய பொருளாதார நிபுணர்கள் சொல்லியிருக்கிறார்கள். நல்ல முறையில் உற்சாகம் கொடுத்து சாகுபடி செய்ய பண்ணைகளுக்கு விதி விலக்குக் கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அம்மாதிரி இல்லாமல் இந்தச் சட்டம் கொண்டுவரப் பட்டுள்ளது. நான் முன்பே சொல்லியிருக்கிறேன், இது அரசியல் சட்டத்தின் 31(2) பிரிவுக்கு முரணானது என்று. ஒருவருடைய சொந்த உடைமையைப் பறித்து பொது உடைமையாகச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஒருவனுடைய நிலத்தை இன்னொருவனிடம் கொடுப்பது என்ன பப்ளிக் பர்ப்பஸ் (Public Purpose) என்று தெரியவில்லை. 31(2)-வது பிரிவைச் சற்று உன்னித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

1-00 p.m. அடுத்தபடியாக இப்போது இந்தச் சட்டம் கொண்டு வந்தபோதிலும், இந்தச் சட்டத்தை அமுல் நடத்துவதற்கு ரெட்ராஸ்பெக்டிவ் எபக்ட் (Retrospective effect) கொடுக்கப்படுகிறது. அதாவது 1961-ம் வருடம் ஏப்ரல் மாதம் 6-ந் தேதியில் இருந்து கொண்டு வருவதாகப் போடப்படுகிறது. எப்போதும் ஒரு சட்டத்தை, அதை அமுலுக்கு கொண்டு வரும் தேதியிலிருந்து தான் அமுல் நடத்துவது வழக்கம். ஆனால் இதற்கு மட்டும் ரெட்ராஸ்பெக்டிவ் எப்பக்ட் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதையும் நான் ஆட்சேபிக்கிறேன். தவிர, இப்போது புதிதாக 8-வது சாப்டரைக்

கொண்டு வந்ததின் காரணமாக 3 ஏக்கர் உள்ளவன் அப்புறப்படுத்தக் கூடாது என்று அதிலே கண்டிருக்கிறது. முன்பு 5 ஏக்கர் உள்ளவனுக்கு என்று அதில்லே பவர் கொடுக்கப்பட்டிருந்தது. இதை 3 வருஷத்திற்கு என்று போட்டிருக்கிறார்கள். ஆனால் ஒரு சட்டம் போட்டு, அந்தத் தொழிலில் ஏற்படக்கூடிய அனுபவத்தைப் பார்த்துச் செய்வதில்லை. அப்படிச் செய்யாததினால், நிலச் சுவான்தார்கள் அதிகம் பாதிக்கப்படுவார்கள் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். எனக்குத் தெரிந்த வரையில் சில பேர் விவசாயக் கல்லூரிகள் பி.எஸ்.ஸி படித்துவிட்டு, உற்சாகமாக விவசாயம் செய்வதற்கே முன்வருவதில்லை. இதைத் தவிர, நடுத்தரவர்க்கத்தினர் என்று சொல்லக் கூடியவர்களும் பயிர்த் தொழில் செய்வதில்லை. குத்தகை எடுத்துக் கொண்டு தொழில் செய்கிறார்கள். அவைகளை யெல்லாம் நீங்கள் எப்படிக் கணக்குப் பார்க்கப் போகிறீர்கள் என்று நான் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்ததாக, 30 ஏக்கர் என்று நிர்ணயித்துவிட்டு, அதற்கு அதிகமாக உள்ள நிலங்களுக்கு காம்பன்சேஷன் கொடுக்கப் போகிறீர்கள். அப்படி மீதி இருக்கிற நிலத்தை எடுத்துக் கொள்ளும்போது, காம்பன்சேஷன் கொடுப்பது என்றால் இப்போது என்ன நிலைமை? விலைவாசியும் ஏறி விட்டது. நிலத்தின் விலையும் ஏறிவிட்டது. லாண்ட் அக்விசிஷன் ஆக்ட் என்பது 100 வருஷமாக நடைமுறையில் இருந்து வருகிறது. பொது உபயோகத்திற்காக இந்த மாதிரி நிலங்களை எடுத்துக் கொள்வதாக இருந்தால், அப்படி எடுக்கும்போது லாண்ட் அக்விசிஷன் ஆக்டை இதற்கு அப்ளை பண்ணுவதில்லை என்கிறார்கள். காம்பன்சேஷன் வருஷத் தீர்வையும் இவ்வளவு மடங்கு தான் கொடுக்கப் போகிறோம் என்று சொல்கிறார்கள். இப்படி காம்பன்சேஷன் கொடுப்பதைவிட பேசாமல் கொடுக்காமலேயே இருக்கலாம். இம்மாதிரி காம்பன்சேஷன் கொடுப்பதாலே எந்த விதமான பிரயோஜனமும் ஏற்படாது. ஆகவே இதையெல்லாம் கவனித்து, லாண்டு அக்விசிஷன் ஆக்ட்படி இந்த உபரி நிலத்தின் மதிப்பை யெல்லாம் கணக்கிட்டு, அவர்களுக்கு ஏதாவது சலுகை கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

அதுவும் தவிர, சில பண்ணைகளுக்கெல்லாம் விதி விலக்கு கொடுக்கப் பட்டிருக்கிறது என்று அம்மையார் அவர்கள்கூட சொன்னார்கள். அப்படி விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருந்த போதிலும், முக்கியமாக உற்சாகம் கொடுக்க வேண்டுமானால் ஒருவன் 4, 5, 10 ஏக்கர் புதிதாக நிலம் வாங்கி, பொருளாதாரத்தில் நல்லபடியான தான் உயர்வதற்கு வழி செய்யப் பட்டிருக்கிறதா என்று பார்த்தால், கிடையாது. பியூசர் அக்விசஷனுக்கு **(Future Acquisition)** உற்சாகம் கொடுக்கக் கூடிய வகையில் இதிலே வழி செய்யப்படவில்லை. அதைப் பற்றியும் சர்க்கார் கவனிக்க வேண்டும். அதைத் தவிர, இந்த 30 ஸ்டாண்டர்டு ஏக்கரா என்று சொல்லும்போது, அதனுடைய எகனமிக் ஹோல்டிங் என்ன என்பது சரிவர சொல்லவில்லை. பிராந்தியத்திற்குப் பிராந்தியம், மாவட்டத்திற்கு மாவட்டம் இதிலே வித்தியாசங்கள் இருந்து கொண்டு வருகிறது. ஒவ்வொரு மாவட்டத்திற்கும் எகனமிக் ஹோல்டிங் என்ன என்பதை எப்படியெல்லாம் எப்பொழுது கணக்கிடப் போகிறீர்கள்? வருமானம் வருவதைக் கொண்டு கணக்கிடலாம் என்று சொன்னால், ஒரு வருஷம் வருமானம் அதிகரிக்கும், அடுத்த வருஷம் வருமானம் குறையலாம். அதையும் நல்ல முறையில் செய்யும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன். நான் அடியோடு நேரத்தை வீணாக்காமல், சுருக்கமாக இந்த மசோதாவைப் பற்றிச் சொல்லும் பட்சத்தில் இந்த மசோதா பெருத்த ஏமாற்றத்தைத் தான் கொடுக்கப் போகின்றது. இந்தத் தோரணையில் இந்தச் சட்டத்தைக் கொண்டு வர வேண்டிய அவசியமே இல்லை. தவிர, இதிலே ஆதரைஸ்ட் ஆபீசர்கள் என்றெல்லாம் வைத்து, அநேக ஊழல்கள், கிளர்ச்சிகள் எல்லாம் இதிலே ஏற்படப் போகிறது. நிலச் சுவான்தார்களுக்கும், குடியானவர்களுக்கும் பெரிய சண்டையைத்தான் இது ஏற்படுத்தப் போகிறது. நாட்டிலே வீண் குழப்பத்தைத் தான் உண்டுபண்ணப் போகிறது. தவிர, இது அரசியல்

சட்டத்திற்கே முரணான சட்டம். இந்த ஆட்சேபணைகளைச் சொல்லிக் கொண்டு, இதைச் சர்க்கார் நல்லவகையில் யோசனை செய்து நிலச் சுவான்தார்களுக்கு இன்னும் சலுகைகள் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **THE HON. SRI M. A. MANICKAVELU** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா ஒரு மிக முக்கியமான மசோதாவாகும். அதோடு மிகவும் புரட்சிகரமானது கூட. ஆனால் ஒரு சிலர் . என்னமோ ஏமாற்றம் என்று சொல்கிறார்கள். என்ன ஏமாற்றம் என்று தெரியவில்லை. அவரவர்களுடைய மனப்பான்மைக்கு ஏற்றவகையில் இதை ஏற்றுக் கொள்ளட்டும். என்னைப் பொறுத்த மட்டிலும், இது மிகவும் புரட்சிகரமானது. ஒரு கொள்கை அடிப்படையிலே கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆகவே இதிலே பல தரத்தார் பாதிக்கப்படுகிறார்கள். நாம் எந்த அடிப்படையிலே கொண்டு வந்தோமோ, அந்த அடிப்படை முறையிலே செய்யப்பட்டிருக்கிறதா என்பதைத் தான் நாம் கவனிக்க வேண்டும். இப்போது இந்த மசோதாவை இந்தச் சபையிலே கொண்டு வந்த நாள் முதற் கொண்டு, 17 நாட்கள் இதிலே விவாதம் நடந்து சுமார் 134, 135 அங்கத்தினர்கள் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இதை நான் ஏன் இங்கே சொல்கிறேன் என்றால், ஜனநாயக ரீதியிலே புரட்சிகரமான சட்டத்தை நாம் இங்கே கொண்டு வந்திருக்கிறோம். அதாவது நாட்டிலே இருக்கக்கூடிய பொதுமக்களின் பிரதிநிதிகளாக அமைந்திருக்கிற இங்குள்ள பிரதிநிதிகளின் மூலமாக, வேண்டிய அவகாசம் கொடுக்கப்பட்டு, தீர நன்றாக விவாதித்து, பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டு, அங்கேயும் சில முடிவுகளுக்கு வந்து, அதன் பின்னாலே இந்தச் சபையிலே இப்போது கொண்டு வரக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சாதாரணமாக, இப்போது உலகத்திலே ஒருவருக்கு நிலம் வேண்டுமென்றால், இன்னொரு நாட்டைப் படையெடுப்பின் மூலம் ஆக்கிரமித்துக் கொள்ளலாம். அப்படி இல்லாவிட்டால், பலாத்காரத்தின் மூலம் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் இந்த மாதிரி யெல்லாம் இல்லாமல், ஜனநாயகச் சட்டத்திற்கு உட்பட்டு, ஜனநாயக ரீதியிலே ஒருவருடைய சொத்துரிமையிலே பிரவேசிக்கும் போது, சண்டை சச்சரவுகள் எல்லாம் இல்லாமல் அமைதியான முறையிலே எடுத்துக் கொள்ளும் வகையிலே இதிலே கவனம் செலுத்தப்பட்டிருப்பதால் தான், இதை ஒரு புரட்சிகரமான மசோதா என்று சொன்னேன்.

திருவாளர் கல்யாணசுந்தரம் அவர்கள் ஏதோ ஒயிட் ரெவல்யூஷன் என்று விளக்கம் கொடுத்தார். அது பிரான்சிலேதான். நான் அந்த முறையிலே சொல்லவில்லை என்று தான் சொல்வேன். தீயிடுதல், கொளுத்துதல் போன்றவைகள் எதுவும் இல்லாமல், சட்டப்படி ஜனநாயக ரீதியிலே கொண்டு வந்ததால் தான் நான் இதை ஒயிட் ரெவல்யூஷன் என்று சொன்னேன். அதேபோல், இப்போது வெளிநடப்பு செய்த அங்கத்தினரிலே ஒருவர் சொன்னார். முன்னாலே நிதி மந்திரி அவர்கள் பேசும்போது, நீங்கள் ஏன் இப்போது வெளிநடப்பு செய்கிறீர்கள், கடைசியாகச் சட்டம் கொண்டு வரும்போது தானே செய்யவேண்டும் என்று சொன்னதால், இதுவரை நாங்கள் சொன்னதை எல்லாம் ஒப்புக்கொண்டதாக அர்த்தமாகி விடாதா என்று சொன்னார்கள். அப்படி அர்த்தம் செய்து கொள்ளத் தேவையில்லை. இந்தச் சமயத்திலே அதற்கு நான் பதில் சொல்கிறேன். அவர்கள் தனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லையென்று சொன்னார்களே தவிர, ஒத்துக் கொள்ளும் முறையிலே எதையும் சொல்லவில்லை. இப்போது நாம் 30 ஸ்டாண்டர்டு எக்கர் என்று சொல்லி இருக்கிறோம். அது கூட நல்ல நிலமாக வேண்டுமென்று சொன்னால், 24 எக்கருக்கு வந்துவிடும். ஆனால் அவர்கள் என்ன சொல்கிறார்கள் ? இது கூடாது, 15 எக்கராக ஆக்கிவிட வேண்டுமென்று சொல்கிறார்கள். அதுதான் அவர்களுடைய முக்கியமான வாதம். இதைத் தவிர, இந்த விதிவிலக்குகள் கொடுக்கக் கூடாது என்பதாகும். அதாவது மேய்ச்சல் நிலங்களுக்கு விதிவிலக்கு, கரும்புச் சாகுபடிக்கு விதிவிலக்கு என்றெல்லாம் இருக்கக் கூடாது என்று சொல்கிறார்கள். இதைத் தவிர, இப்போது கொண்டுவரும் சட்டத்திற்கு ரெட்ராஸ்பெக்டிவ் எப்பக்ட் கொடுக்க வேண்டு

மென்று சொல்கிறார்கள். அதாவது, 5 வருஷத்திற்கு முன்னாலே 55-லே இருந்து இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று சொல்கிறார்கள். இதெல்லாம் பற்றி அவ்வப்பொழுது அந்தந்த ஷரா விவாதத்திற்கு வந்தபொழுது எந்தக் காரணத்தைக் கொண்டு அவர்கள் சொல்லுவதை ஒப்புக்கொள்ளுவதற்கில்லை என்று விளக்கமாக நான் முன்பே சொன்னேன். ஒரு பழமொழி உண்டு. குதிரைக்குத் தண்ணீர் காட்டினால், தண்ணீர் இருக்கிற கால் வாய்க்கோ அல்லது தண்ணீர் தொட்டிக்கோ அதைக் கொண்டுபோய்விடலாம். அதற்குமேல் அதுதண்ணீர் குடிக்கவில்லையென்றால் அதற்கு என்ன பண்ண முடியும்? நான் என்ன விளக்கமாகச் சொன்னாலும் கண்ணை மூடிக்கொண்டு ஒரே பிடியாக 15, ஏக்கர் 15 ஏக்கர் என்று சொல்லிக்கொண்டிருந்தால் என்ன செய்வது? நான் சொல்லுகிற காரணத்தை அவர்கள் புரிந்துகொள்ளாவிட்டால் நான் என்ன செய்ய முடியும்? கூடுமானவரையில் நான் விளக்கமாகத் தான் சொன்னேன். 15 ஏக்கரா வேண்டுமென்று அவர்கள் ஏன் சொல்லுகிறார்கள் என்றால், 30 ஏக்கரா வைத்தால் அதிகப்படி நிலம் உபரியாகக் கிடைக்காது, அதனால் வெளியேற்றப்பட்ட விவசாயிகளுக்கு நிலம் கொடுக்க முடியாது என்று. நான் என்ன சொல்லுகிறேன் என்றால், 15 ஏக்கரா இல்லை, 5 ஏக்கராவாகக் குறைத்தால் கூட எல்லோருக்கும் நிலம் கொடுக்க முடியாது. அப்படிச் செய்தால் அவர்கள் கொள்கைப் பிரகாரமும் எல்லோருக்கும் கொடுக்க முடியாது. நம் வாதம் என்னவென்றால் ஒரு கணிசமான அளவு நிலம் இருந்தால் தான் உணவு உற்பத்தி சரியாகச் செய்ய முடியும் என்பது. ஆகையால் அவர்கள் சொல்லுவதைக் ஒத்துக் கொண்டால் அவர்கள் வாதப்படி எல்லோருக்கும் நிலம் கொடுக்க முடியாது, நம்முடைய அடிப்படைக் கொள்கை, அதாவது உணவு உற்பத்தி பாதிக்கப்படக் கூடாது என்பதும் நிறைவேறாது. இரண்டும் நிறைவேறாத நிலைமையில் அர்த்தமற்ற முறையில் எப்படி சட்டம் செய்ய முடியும்? அதனால் தான் அவர்கள் சொல்லுவதை ஒப்புக்கொள்ள முடியவில்லை.

அதோடுகூட இன்னொன்றையும் யோசனை பண்ண வேண்டும். ரொம்ப அதிகமாகக் குறைத்துக் கொடுத்தால் இன்னொரு கஷ்டமும் ஏற்படும், கனம் சீனுவாசய்யர் அவர்கள் சொன்னது போல் இப்பொழுது நிலச்சுவான்தார்கள், விவசாயிகளிடையே ஒற்றுமை குறைந்திருக்கிறது. 10 வருஷங்களுக்கு முன்பு அவர்கள் தாய், பிள்ளை மாதிரி பழகிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குக் காலாகாலத்தில் என்னென்ன உதவி வேண்டுமோ அதையெல்லாம் செய்து வந்தார்கள். இப்பொழுது அவர்களிடையே வேற்றுமை ஏற்பட்டபிறகு 1 ஏக்கர், 2 ஏக்கர் என்ற அளவிற்கு நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால் நிலச்சுவான்தார்களிடமிருந்து அவர்களுக்கு ஒன்றும் உதவி கிடைக்காது. ஆகையினால் அரசாங்கம் தான் அவர்கள் எல்லோருக்கும் உதவி செய்ய வேண்டி வரும். 1 ஏக்கர், 2 ஏக்கர் வைத்திருப்பவர்களுடைய நிலைமை அரசாங்கத்திற்குத் தெரியும். பெருவாரியாக உள்ள அவ்வளவு பேர்களுக்கும் அரசாங்கம் ஒரே சமயத்தில் உதவி செய்யவேண்டுமென்றால், அவர்களுக்கு மாடு வாங்குவதற்குப் பண உதவி செய்கிறதா? உரம் வாங்குவதற்கு பண உதவி செய்கிறதா? அவர்கள் பயிரிட்டு மகசூல் கிடைக்கும் வரையில் 6, 9 மாதங்களுக்கு அவர்கள் சாப்பிடுவதற்குப் பணம் கொடுப்பதா, ஸப்ஸிடி கொடுப்பதா? எந்த வகையிலே ஒரே காலத்தில் அத்தனை பேர்களுக்கும் உதவி அளிக்க முடியும்? நாம் இப்பொழுது செய்கிற அளவிலே கூட விவசாயிகளுக்கு ஓரளவு உதவி செய்ய வேண்டியிருக்கும். ஆனால், அது சிறிய அளவிலே இருக்குமாதலால் அதைச் சமாளிக்கலாம். ஒரேயடியாக இம்மாதிரி செய்தால் ஒன்றும் முடியாது. 'குட்டையைக் கலக்கி பருந்துக்கு இரை விடுகிறது' என்று தமிழிலே ஒரு பழமொழி சொல்லுவார்கள். இந்தமாதிரியெல்லாம் செய்து குழப்பத்தை உண்டாக்கினால், விவசாயிகளுக்கும் ஒன்றும் பிரயோசனமில்லை; மிராசுதாரர்களுக்கும் ஒனறும் பிரயோசனமில்லை.

இன்னொன்றையும் அவர்கள் மறந்துவிடுகிறார்கள். ஏதோ அரசாங்கத்தினிடம் இருக்கும் நிலத்தை எடுத்துக் கொடுப்பது போல் பேசுகிறார்கள். நாம் என்ன செய்கிறோம் என்றால், நிலச் சுவான்தார்களிடமுள்ள உபரி

நிலத்தை எடுத்து மற்றவர்களுக்குக் கொடுக்கிறோம். அரசாங்கத்தினுடைய நிலத்தை எடுத்துக் கொடுப்பதாகயிருந்தால், அவர்கள் சொன்னதை ஒத்துக் கொள்ளலாம். இந்தச் சட்டப் பிரகாரம் உபரியாக இருக்கும் நிலத்தை எடுத்துத் தான் மற்றவர்களுக்குக் கொடுக்கிறோம் என்ற சூழ்நிலைதான் ஏற்படுகிறது. பார்க்கப்போனால் விவசாயம் நல்ல முறையில் நடக்க வேண்டுமென்று சொன்னால் அதற்குப் போதுமான பரப்பு இருக்கவேண்டும். அதோடுகூட அதிலிருந்து அவர்களுக்குப் போதுமான அளவு வருமானம் வரவேண்டியது அவசியம். இந்தமாதிரி, கான்செண்ட்ரேஷனை, குறைக்க வேண்டுமென்று சொல்லும்பொழுது, எல்லா துறைகளிலும் ஒரே சமயத்தில் நாம் அப்படிச் செய்யவில்லை. மற்ற துறைகளில் இல்லாமல் விவசாயத்துறையில் மட்டும், லாண்டட் ப்ராபர்டிக்கு மட்டும் உச்ச வரம்பு கட்டும்பொழுது அந்த மாதிரி அதிகமாகக் குறைப்பது என்பது நியாயமில்லை. அவர்களுக்குப் போதுமான வருமானம் வரவேண்டும். நாம் போட்டிருக்கிற பிரகாரம் பார்த்தால் அதிகப்படியாக இருந்தால் சராசரி ரூ. 5,000, 6,000–க்கு மேல் வருமானம் வராது. இன்னொன்றையும் இதில் யோசிக்க வேண்டும். வேறு உத்தியோகத்தில் இருப்பவர்கள் போல, இவர்களுக்கு முதல் தேதி கட்டாயம் சம்பளம் வந்துவிடும் என்பதில்லை. 'வலிஸிடியூட்ஸ் ஆப் தி ஸீஸன்' என்று சொல்லுவார்கள். அதாவது ஒரு வருஷம் மழை பெய்யவில்லையென்றால், வெள்ளம் வந்துவிட்டால், ஸைகிலோன் வந்துவிட்டால், பூச்சி வந்து விட்டால் அப்பொழுது வருமானம் குறைந்துவிடும். அதனால் ஒரு வருஷத்தில் வருகிற வரும்படியைக் கொண்டு சொல்ல முடியாது. ஆவரேஜாகத் தான் சொல்லலாம். ஏதோ ஒரு வருஷத்தில் கரும்பு அல்லது மஞ்சள் போட்டால் ரூ. 8,000 வரலாம். ஆனால் அம்மாதிரி வருஷா வருஷம் வருமானம் வரும் என்று சொல்ல முடியாது. ஆகவே ஒரு வருஷக் கணக்கைப் பார்க்க முடியாது. பல ஆண்டுகள் வருகிற வருமானத்தைக் கணக்கெடுத்து, ஆவரேஜாகத்தான் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும் பொழுது இவ்வளவாவது நிலம் இருக்கவேண்டியது அவசியமாகிறது. அதனால்தான் இந்த அளவு வைத்திருக்கிறோம்.

பிறகு, விதிவிலக்கைப் பற்றி யெல்லாம் சொன்னார்கள். அந்த ஷரா பரிசீலனைக்கு வந்த போதே நான் இதைப்பற்றி விளக்கமாகக் கூறினேன். தேயிலைத் தோட்டத்திற்கு எதற்காக விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. காப்பித் தோட்டத்திற்கு எதற்காக விலக்கு என்பதைப்பற்றி சொன்னேன். அதை மறுபடியும் திருப்பிச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. அதேமாதிரி தான் சர்க்கரை ஆலைகளைப் பற்றியும் சொன்னேன். சர்க்கரை உற்பத்தியை அதிகமாக்குவதற்கு முயற்சி செய்ய வேண்டுமென்று சொன்னேன். மேய்ச்சல் நிலத்திற்கு விதிவிலக்கு அளித்திருப்பதைப் பற்றியும் விளக்கமாகச் சொன்னேன்.

பிறகு வெல்-மானேஜ்டு பார்ம்ஸ் பற்றிச் சொன்னார்கள். நல்ல முறையிலே நடத்தப்படுகிற பண்ணைகளுக்கு விதிவிலக்கு கொடுக்கலாம் என்று சொன்னார்கள். திட்டக் கமிஷன் அம்மாதிரி "வெல்-மானேஜ்டு பார்ம்ஸ்"-க்கு விதி விலக்குக் கொடுக்கலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் நாங்கள் அப்படிக் கொடுக்காததற்குக் காரணம், திரு. சீனுவாசய்யர் அவர்கள் சொன்னது போல் எது வெல்-மானேஜ்டு பார்ம்ஸ், என்று நிர்ணயிக்கும் விஷயத்திலே அனாவசியமாக அவர்கள் அரசாங்கத்தை தூற்றுவார்கள் காங்கிரஸ்காரராக இருப்பதனால் தான் கொடுத்துவிட்டார்கள் என்று சொல்லுவார்கள். காங்கிரஸ்காரரும் நல்லபடியாகப் பண்ணை வைத்து நடத்தலாம். எதிர்க் கட்சியிலே இருப்பவரும் நல்லமுறையிலே பண்ணை நடத்தலாம். அவர்கள் அதை எடுத்துக் கொள்ளமாட்டார்கள். இப்பொழுது வாதம் செய்வது போல், அதற்கும் வாதம் செய்து வீணாகப் பழி சுமத்துவார்கள். 30 எக்கரா என்று வைத்திருப்பது கூட அதற்கு ஒரு விதத்தில் சாதகமாக இருக்கிறது. ஏனென்றால், 30 எக்கரா கணிசமாக இருப்பதால், அதற்குள்ளேகூட "வெல்-மானேஜ்டு பார்ம்ஸ்" வைக்கலாம். 100 எக்கராவாக இருந்ததை ஐந்தைந்து எக்கராவாகப் பிரித்து வைத்தால் தான் பாதகம்

வரும். இதையெல்லாம் அனுசரித்து பல நோக்கங்களை மனதில் வைத்துக் கொண்டுதான் இந்த அளவுக்கு நாம் உச்ச வரம்பை நிர்ணயித்திருக் கிறோம்.

மேலும் "ரெட்ராஸ்பெக்டிவ் எபெக்ட்" பற்றிச் சொன்னார்கள். அதில் பல சிக்கல்கள் ஏற்படும் என்று ஏற்கெனவே சொன்னேன். எது "பினாமி டிரான்ஸாக்ஷன்ஸ்", எது இல்லை, கோர்ட்டு விவகாரம் இதெல்லாம் வரும். ஆகவே, ஐந்து வருஷங்களுக்கு முன்னாலேயே இதை அமுலுக்குக் கொண்டு வருவதென்றால் அது அசாத்தியமான காரியம் என்று அப்பொழுதே சொன்னேன். இந்தச் சட்டத்தில் நிலத்தை எடுத்துக்கொண்டு எல்லோருக்கும் கொடுக்க வேண்டுமென்பது முக்கியமான நோக்கம் அல்ல. முக்கியமான நோக்கம் என்னவென்றால் "Concentration of lands in a few hands", அதைக் குறைக்கவேண்டுமென்பதுதான். சில பேர்களிடத்தில் 1,000, 2,000 எக்கர் என்று அம்மாதிரி அதிகமாகக் குவிந்து இருக்கக் கூடாது என்பதுதான். ஆனால், ஒவ்வொருவரும் விவசாயத்தை நல்ல முறையிலே நடத்தக்கூடிய அளவுக்கு வைத்துக் கொள்ளலாம். அந்த அடிப்படையிலேதான் உச்ச வரம்பை நிர்ணயித்திருக் கிறோம்.

ஸ்ரீதனச் சொத்தைப்பற்றி அம்மையார் அவர்கள் சொன்னார்கள். அது ஒரு தனிப்பட்ட சலுகை. சொத்து இருக்கிற அம்மையார் வேறு குடும்பத்திற்கு வாழ்க்கை நடத்துவதற்குப் போகும்பொழுது, தாய்வீட்டு சொத்தை அந்த அம்மையார் ஓர் அளவுக்கு வைத்திருக்கலாம் என்ற சலுகை கொடுத்திருக்கிறோம். ஸீலிங் 30 எக்கரா என்றிருந்தால் மேலே 10 எக்கரா ஸ்ரீதனச் சொத்தை வைத்துக் கொள்ளலாம் என்ற அளவுக்குச் சலுகை கொடுத்திருக்கிறோம். ஏன் அது "டேட் ஆப் கமென்ஸ்மெண்டு ஆப் தி ஆக்ட்"-லிருந்து என்று இருக்க வேண்டுமென்று கேட்டார்கள். அம்மாதிரி ஒரு கால வரம்பு இல்லை என்று சொன்னால் எல்லோரும் ஸ்ரீதனச் சொத்து என்று சொல்லி எழுதி வைக்கலாம். ரொம்ப அளவுக்கு அந்த மாதிரி பண்ண முடியாது என்று சொன்னால்கூட, ஓரளவுக்கு அந்த மாதிரி பண்ணலாம். சட்டத்தினுடைய ஷராவை மீறி ஸ்ரீதனச் சொத்து என்ற பெயரால் எழுதி வைக்காமல் இருக்க வேண்டுமென்பதற்காகத்தான் இந்தத் தடை வைக்கப்பட்டிருக்கிறது.

கனம் சீனுவாசய்யர் அவர்கள் இன்னொன்று சொன்னார். ஸ்டாண்டர்டு எகர் நிர்ணயிப்பதிலே, 6—4—1960-ல் செட்டில்மெண்டு இல்லாத இடங்களுக்குத் தற்காலிகமாக பக்கத்து ரையத்வாரி செட்டில்மெண்டு பிரகாரம் ஒரு நிர்ணயம் இல்லையா என்று. இதற்கு ஒரு "பார்முலா" இருக்கிறது. அதாவது "நியரெஸ்டு ரையத்வாரி வில்லேஜ் ரேட்" என்பது தான். முன்னால் ஜில்லாவாக இருந்தது, பிறகு தாலுக்காவாக இருந்தது, பிறகு "நியரெஸ்டு வில்லேஜ்" என்று ஆயிற்று. முடிவான தரம், அது, இது என்று எல்லாம் பார்த்து ஒரு முடிவுக்கு வந்து நிர்ணயம் பண்ணாத அந்தச் சந்தர்ப்பத்தில், ஒரு "பார்முலா" உபயோகிக்கலாம். அப்படி நிர்ணயிக்கக்கூடிய "பார்முலா" ஏற்கெனவே "ஸ்டாசூடரியாக" இருந்தால், அதை எப்படி விட்டுவிட்டு வேறு விதமாக நிர்ணயிப்பது ? அம்மாதிரி செய்வது கஷ்டம். "Before the date of publication of the statement" என்று இருப்பதைத் தள்ளிப் போடக் கூடாதா என்றால், "டேட் ஆப் கமென்ஸ்மெண்டு ஆப் தி ஆக்ட்" என்று வைத்தால், அதற்கு முன்னால் இருப்பவர்கள் "நாங்கள் மட்டும் ஏன் பாதிக்கப் படவேண்டும், நாங்கள் என்ன பாவத்தை பண்ணினோம், ஆகவே அதற்கு முன்னால் தேதியை வைக்கவேண்டும்" என்று சொல்லுவார்கள். "வொர்க் அவுட் பண்ணி" சரியான பார்முலா ஒன்று இருக்கும்பொழுது, இதை எடுத்துக் கொள்வதற்கில்லை. சில "இண்டிவிசுவல் கேஸஸ்"-ல் கஷ்டம் ஏற்படலாம். ஒரு பிராந்தியத்தில் அதிகமாக இருக்கிறது செட்டில்மெண்டு பிரகாரம், பார்முலா பிரகாரம் குறைவாக இருக்கலாம். இன்னொரு பிராந்தியத்தில் செட்டில்மெண்டு பிரகாரம் குறைவாக இருக்கலாம், பார்முலா பிரகாரம் அதிகமாக இருக்க

